சிந்தனையாளர் வரிசை: 4

# சிந்தனையாளர்
# ரூஸோ



எழுதியவர்:
ம். கே. கோமேதகவேலு, பி.ஏ. (ஆனர்ஸ்)











ரேமா
பிரசுரம்
சென்னை-24.




விலை ரூ. 1—4—0

பிரேமா பிரசுரம்—21

முதற்பதிப்பு: நவம்பர், 1954.


**முன்பு வெளிவந்தவை:**

1. சிந்தனையாளர் டார்வின்
(எழுதியவர்: ஜெகசிற்பியன்)
2. சிந்தனையாளர் பிளேட்டோ
(எழுதியவர்: அரு. ராமநாதன்)
3. சிந்தனையாளர் கார்ல் மார்க்ஸ்
(எழுதியவர்: ரா. தணலன்)

**இப்போது வெளிவந்திருப்பது:**

4. சிந்தனையாளர் ரூஸோ
(எழுதியவர்: கோமேதகவேலு)

**இனி வெளிவருபவை:**

5. —12 ... ?

அச்சிட்டோர்: பாரதி பிரிண்டர்ஸ் சென்னை-1.

# சிந்தனையாளர் வரிசை

தயாரிப்பு:— அரு. ராமநாதன்

4

மனிதன் சுதந்திரமாக
எந்தவித சமுதாயத்தில் வாழ்வது
எனச் சிந்தித்தவர்....

# ந்தனையாளர் ரூஸோ

எ[illegible]யவர்: எம். கே. கோமேதகவேலு—சித்திரங்கள்: [illegible]




## முதற் பகுதி



## இரண்டாம் பகுதி

[சிந்தனை விளக்கமும் நூற் சுருக்கங்களும்







# சுதந்திர சமுதாயம் எது ?

மனித ஜாதி தன் சுதந்திர சாஸனத்தை எங்கோ இழந்துவிட்டு உலகமெங்கும் அவதிப்பட்டது. அந்த உரிமைப் பட்டயத்தைத் தேடிக்கொடுக்கப் பதினெட்டாவது நூற்றாண்டிலே, பிரான்ஸ் தேசத்திலே ஒருவன் பிறந்தான். அவன்தான் இன்று உலகம் 'சுதந்திரத்தின் தந்தை' என்று போற்றிப் புகழும் சிந்தனையாளன் ரூஸோ.

மனித ஜாதியின் சரித்திரத்திலே புதியதோர் அத்தியாயத்தையும், மனிதனின் சிந்தனையிலே புதியதொரு பாதையையும் ஜனசக்தியின் கருத்திலே புதியதோர் ஜீவனையும் துவக்கி வைத்தவன் ரூஸோ. உலகம் முழுதும் மக்களாட்சியை நோக்கி மலர வேண்டும் எனக் கனவு கண்டு, முதன் முதலாக ஜனநாயகத்தை உயிருள்ள தத்துவமாக அரசியல் உலகிலே உலாவ விட்டவன் ரூஸோ.

அரசியலாலும், அறியாமையாலும், மதத்தாலும், சம்பிரதாயத்தாலும், சமுதாயப் பிளவுகளாலும், பொருளாதாரத்தாலும், கலாசாரத்தாலும், மனிதஜாதி விலங்கிடப்பட்டு, ஒரு சிலருக்குப் பலர் அடிமையாக்கப் பட்டு, நாகரிகத்தின் பெயரால் மனிதன் அடிமையாகவே பிறந்து, அடிமையாகவே வாழ்ந்து, அடிமையாகவே இறந்து கொண்டிருந்த காலத்தில், புரட்சியாளனாகப்

புறப்பட்டான் ரூஸோ. மானிட இனத்தின் உரிமைப் போராட்டத்திற்கு முதல் முரசு கொட்டி, மடமை இருளை அகற்றி, அடிமைத் தளைகளால் பிணைக்கப்பட்டு அறியாமைச் சேற்றிலே புரண்டு கொண்டிருந்த மனித சமுதாயத்தைச் சிந்திக்க வைத்து, அவர்களின் உரிமைகளையும் உடமைகளையும் பெற சுதந்திர முழக்கமிட்டு, 'செல்க போர்க் களத்திற்கு' என்று தட்டி யெழுப்பினன் பதினெட்டாவது நூற்றாண்டிலே வாழ்ந்த ரூஸோ. 'சுதந்திரம்—மனிதனின் பிறப்புரிமை' என்ற சிந்தனைக்குப் பாதை வகுத்துக் கொடுத்தது மட்டு மல்லாமல், மக்களினத்தில் கண்ணுக்குப் புலப்படாத பந்தங்களாகப் பிணைத்திருந்த விலங்குகளையும் அறுத்தெறிய உதவினன் ரூஸோ.

பதினெட்டாவது நூற்றாண்டை, பழமைக்கும் புதுமைக்கும் நடந்த 'புரட்சி நூற்றாண்டு' என்று சொல்லுவதுண்டு. அதற்கு மூல புருஷர்களாகப் பிரான்ஸ் தேசத்திலே வால்டேரும் ரூஸோவும் பிறந்தனர். பழமையை அழிக்கப் பிறந்தான் வால்டேர்; புதுமையைச் சிருஷ்டிக்கப் பிறந்தான் ரூஸோ. அழிவுச் சக்தியோடு ஆக்கசக்தியும் இருந்தால்தானே புதிய சமுதாயம் ஆக்கிப் படைக்கப்படும்? பாழான பழைய கட்டிடத்தை அடியோடு இடித்து விடுவதோடு நின்றுவிடவில்லை; புதிய சமுதாயத்தைக் கட்டிக் கொடுக்கவும் திட்டம் தீட்டினன் ரூஸோ.

ரூஸோவின் மன அரங்கில் எப்போதும் இரு எண்ணச் சுடர்களே ஒளிவீசித் திகழ்ந்து கொண்டிருந்தன—அவை சுதந்திர உணர்ச்சியும் சமத்துவ எண்ணமுமாகும். இவ்விரண்டு இலட்சிய தீபங்களும் தன் மனதில் மட்டுமல்லாமல், மனிதராய்ப் பிறந்த எல்லோருடைய மனதிலேயும் திகழவேண்டும் என்று எண்ணினன். அதை உருவாக்குவதையே தன் வாழ்வின் இலட்சியப் பணியாகக் கருதினன். அந்தக் கருத்தின் விரிவுதான் அவனுடைய 'சமுதாய ஒப்பந்தம்' என்னும் புரட்சிகரமான நூல்.

அவன் வாழ்ந்த நூற்றாண்டில் அவனின் எண்ணங்கள் பூரண ஆதிக்கம் செலுத்தின. உலகச் சரித்திரத்திலே காணப்படும் மாபெரும் இருபுரட்சிகளுக்கு மூலவித்திட்டவன் ரூஸோ என்று எடுத்துரைக்கின்றனர் சரித்திரப் பேராசிரியர்கள். அவை—ஒன்று, அமெரிக்கப் புரட்சி; மற்றொன்று, உலக சரித்திரத்தின் போக்கையே மாற்றியமைத்த பிரெஞ்சுப் புரட்சி. ரூஸோ இறந்து பதினேரு வருஷங்கள் கழித்துத்தான் ஜனசக்தியின் பிரும்மாண்டமான பிரெஞ்சுப் புரட்சி தொடங்கியது என்றாலும், அதற்கு மூலகாரணமான சிந்தனைகளைத் தன் நூல்களில் உருவாக்கிவிட்டுப் போனவன் ரூஸோவே ஆவான். பிரான்ஸிலே முடியாட்சியை ஒழித்துக் குடியாட்சியை எழுப்ப அவனே தூண்டுகோலும் சாணைக்கல்லும் ஆவான். 'சுதந்திரம், சமத்துவம், சகோதரத்துவம்' என்ற அவனது வார்த்தைகளே பிரெஞ்சுப்

புரட்சியின் எழுச்சி கோஷங்களாக விளங்கின. பிரெஞ்சுப் புரட்சியின் வெற்றிப் படையலான சுதந்திரப் பிரகடனத்திலும், அமெரிக்கச் சுதந்திரப் பிரகடனத்திலும் ரூஸோவின் 'சமுதாய ஒப்பந்தம்' என்னும் நூலிலுள்ள வாசகங்கள் காணப்படு கின்றன. நல்லெண்ணமுடைய மக்களுக்குச் சமாதானம், சகிப்புத் தன்மை, சுதந்திரம்-இம் மூன்றையும் பெற்றுத் தந்தவன் ரூஸோ.

அரசியல் துறையில், ஆத்மீகத் துறையில், கல்வித் துறையில், கலாசாரத் துறையில், பொருளாதாரத் துறையில், இலக்கியத் துறையில், இன்று உலாவும் புதுமலர்ச்சிகளுக் கெல்லாம் அஸ்தி வாரம் அமைத்துவிட்டுப் போனவன் ரூஸோ. அவன் இந்த உலகில் பிறந்திராவிட்டால், பொருளாதாரப் பொதுவுடைமைப் புரட்சி செய்த கார்ல் மார்க்ஸூம், ஜனநாயகவாதிகளும், கல்வித்திட்டங்களும் வளர்ந்திருக்க முடியாதெனக் கூறலாம். சொத்து இல்லாத உழைப்பாளிகளையும் ஏழை மக்களையும் தலை நிமிரச் செய்தவன் ரூஸோ. 'ஆளப்பிறந்தவர் தனி இனம்; ஆளும் உரிமை எல்லோருக்கும் கிடையாது ; சொத்துள்ளவர் களுக்கும் உயர் குடியில் பிறந்தவர்களுக்குந்தான் ஆட்சியுரிமை உண்டு' என்று எக்காளமிட்டுத் திரிந்தவர்களின் ஆணவக்குரலைத் தனி யொருவனுக எதிர்த்து, 'உழைப்பின் பயனுக வாழ்ந்து வரும் பாட்டாளி வர்க்கத்திற்கும் நாட்டின் நிர்வாகத்திலே பங்குண்டு ; ஒவ்வொரு மனிதனுக்கும் பிரஜா உரிமையும் சுதந்திரமும் உண்டு; அவை மனித சமுதாயம் அனைத்துக்கும் பொதுவான அடிப்படை உரிமைகள்' என்று உரிமைக் குரலை எழுப்ப உதவியவன் ரூஸோ.

உலகம் ஒழுங்காக வாழவேண்டும் என்று உழைத்த உத்தமர்களிலே ரூஸோவும் ஒருவன். ஆனால் பிறர் வாழத்தன் வாழ்க்கையைப் பணயம் வைத்த ரூஸோ, தான் வாழ்ந்த காலம் முழுவதும் கானகத்து மிருகம்போலவே வேட்டையாடப் பட்டான். எப்போதும் வாழ்வின் கரடுமுரடான பகுதிகளிலே அவனை இழுத்துச் சென்ற விதிக்கு எதிராக அவன் சதா போராட வேண் டியிருந்தது. ரூஸோவின் வாழ்க்கை வரலாறு, அவனுடைய விசித்திரமான உணர்ச்சிகள், ஆசைகள், காரிய சித்திகள்—துடிப்புகள், அழுகைகள், சிரிப்புகள், இவற்றின் மத்தியிலே ஊடா டிச் சென்றவண்ணம், அவனுடைய மாபெரும் இலட்சியத்திற்குப் பின், புலனுக விளங்குகிறது. ரூஸோ தன் வாழ்க்கையில் நடந்தன வற்றையெல்லாம் சிறிதும் ஒளிவுமறைவின்றி தன் சுயசரிதையில் கூறுகிறன். எண்ணப் போக்கிலே நேர்மை கொண்ட அவன் என்றும் தன் குற்றங்களை மறைக்க முயன்றதே கிடையாது. அது போலவே, பிறரைப் பற்றியும் பிற விஷயங்களைப் பற்றியும் தான் எண்ணியதைச் சிறிதும் தயங்காமல் எடுத்துக்கூறும் பண் புடையவன். அந்தப் பண்பினல் அவன் பல விரோதிகளைச்

சம்பாதித்துக் கொண்டான்; பொது விரோதியாகவும் சித்தரிக்கப்பட்டு வேட்டையாடப் பட்டான். ஆனல்... பெரிய மனிதர்களும், மேதைகளும் தாம் வாழும் நாளில் வெறுக்கப்பட்டு, வருங்கால மக்களால்தான் போற்றப்படுவார்கள் என்பது உலகமறிந்த உண்மை! ரூஸோ - தன் எழுத்துக்களுக்கு எதிர் காலத்தில் நல்ல உபயோகம் உள்ளது.என்று திடமாக எண்ணி, பொறுமைக்கும் பொச்சரிப்புக்கும், அதிகாரத்தின் ஆணவ உறுமலுக்கும் மனம் சளைக்காமல், புன் சிரிப்புடன் தன் பணியை நடத்தி வந்தான். மனித இனத்தின் நற்குணத்தில் திடமான நம்பிக்கை வைத்திருந்தவன் ரூஸோ. "மனிதனுக்கு மனிதப் பண்பாட்டைக் கற்றுக் கொடுத்து அவனை மனிதனுக்க முயலுவோம்; பிறகு அவன் தானே ஞானியாகி விடுவான்" என்ற புதுமை மணம் உள்ள கருத்தை உலகத்திற்குஅளித்து விட்டுப் போனன் ரூஸோ.

ரூஸோ எவ்விதமான அரசியல் பதவிக்கும் புகழுக்கும் ஆசை, பட்டதே கிடையாது. அவன் பிறரை ஆள ஆசைப் படவில்லை; பிறரால் தானும் ஆளப்படவும் அவன் விரும்பமாட்டான். அவன் எழுத ஆரம்பிப்பதற்கு முன்பாக நிறையப்புத்தகங்களைப் படித்தான். பதினேழாம் நூற்றாண்டின் இலக்கியம் முழுவதையும் படித்தான். தனது அறிவு பக்குவப் பட்ட பிறகே, தனது சிந்தனை பண்பட்ட பிறகே, தனது சிந்தனைப் பூங்காவில் மலர்ந்த நல்லதொரு சமுதாய அமைப்பு எனும் வாடா மலரை உலகுக்கு அளித்து விட்டு மறைந்தான்.

இயற்கையிலே இன்பம் துய்த்தவன் ரூஸோ. இயற்கையின் அமைதியிலே, மனித நாகரிகம் குலைக்காத இயற்கையின் அழகுப் பொருள்களின் மத்தியிலே, இன்பம் கண்டான். நாகரிக வாசனை நிறைந்த பட்டினங்களில் அவன் மனம் அமைதியும் சாந்தமும் காண மறுத்து விட்டது. "மேஜையின் முன் அமர்ந்து, எனக்கு முன் எழுதக் காகிதமும், என் கையில் பேனவும் இருக்கும் போது என்னல் எழுத முடிவதில்லை. ஆனல் மலைப் பிராந்தியங்களின் மத்தியில் நடந்து செல்லும் பொழுது என் மூளையில் என்னல் எழுத முடிகிறது..." என்று ஓரிடத்தில் கூறுகிருன் ரூஸோ. இயற்கையை ஒரு தத்துவமாக விளக்கியவன் ரூஸோ.

ரூஸோ பிறந்து இரண்டு நூறுவருஷங்கள் மடிந்து மறைந்து விட்ட பிறகும், அவன் இன்றைக்கும்'வாழும் சக்தியாகப்' பரிணமித்துக் கொண்டே யிருக்கிருன். பதினெட்டாம் நூற்றாண்டின் பிற்பகுதியில் வாழ்ந்த ரூஸோவின் நிழல், அக்கால அரசியல் சமூகப் பொருளாதார புரட்சிகளில் தென்படுகிறது. ரூஸோவின் 'இயற்கை இன்பம்' ரூஸோவுக்குப் பின் தோன்றிய ஷெல்லி, பைரன், வார்ட்ஸ்வொர்த் முதலான ஆங்கிலக் கவிகளின் கவி

தைகளில் தென்படுகிறது. ருஷிய ஞானியான டால்ஸ்டாய், ரூஸோவின் எழுத்துக்களிலும், கருத்துக்களிலும் பெரிதும் ஈடு பட்டு ரூஸோவின் பரம பக்தராயிருந்தார். ரூஸோவை வெறுத்தவர் அநேகர் இருந்தது போலவே அவனைப் பாராட்டிய வரும் அநேகர் இருந்தனர். இமானுயல் கான்ட் என்ற ஜெர் மனியத் தத்துவ ஞானி ரூஸோவின் எழுத்துகளுக்குப் பெருமதிப்பு வைத்திருந்தார். தமது நூல் நிலையத்தில் ரூஸோவின் பெரிய உருவப் படத்தை வைத்திருந்ததோடு மட்டு மல்லாமல், தமது தத்துவ ஞான விளக்கங்களுக்கு ரூஸோவின் கருத்துக்களையே உபயோகப் படுத்தியுள்ளார். ஞானி நீட்ஸி ரூஸோவை முழுவ தும் எதிர்த்தார். ஆனால் அவரது ஆத்மீகப் புரட்சியிலும் ரூஸோ வின் நிழல் தென்படுகிறது. வாசிப்பவரின் விரல்களின் உணர்ச்சி பாவங்களுக் கேற்ப நாதத்தைக் கொடுக்கும் யாழ்—ரூஸோ !

சுருக்கமாக, ரூஸோவுடன் குடியாட்சியும் மனித சுதந்திர மும் பிறந்தது எனலாம்! மனித மனத்தின் நற்குணத்தில் திட மான நம்பிக்கை வைத்து, உலகத்தின் உய்வு என்ற பெருநோக் குடன் உழைத்து, உழைப்போரின் உள்ளங்களிலே உரிமைக் கனலைக் கிளறிவிட்டு, மனிதனை மனிதனாக வாழச் செய்த ரூஸோ என்றென்றும் வாழும் சக்தியாக, வற்றாத ஜீவநதியாக, மனித னின் மூச்சிலே மறையாத அமரனாக வாழ்வான் !






ரூஸோ

[தோற்றம்: 1712; மறைவு: 1788

# ரூஸோவின்
# வாழ்க்கை வரலாறு

[ரூஸோ சிறிதும் ஒளிவு மறைவின்றித் தன் சுய சரிதையை மிகப் பெரியதொரு புத்தகமாக எழுதியுள்ளான். உலக மகா இலக்கியங்களில் ஈடு இணையற்றதாக விளங்கும் அந்த மாபெரும் புத்தகத்தின் (The confessions of jean jacques Rousseau எனும் நூலின்) சில பகுதிகளை மொழி பெயர்த்தும், சுருக்கியும், சேர்த்தும், ரூஸோவின் வாழ்க்கை வரலாறாகக் கீழே தரப்பட்டுள்ளது.)

**"என்னுடைய குழந்தைப் பிராயம் ஒரு குழந்தையுடையது போல இருந்ததில்லை. நான் எப்போதும் ஒரு மனிதனைப் போலவே உணர்ந்தும் சிந்தித்தும் வந்திருக்கிறேன்."**

**-ரூஸோ**

## 1712—1719

நான் இதுவரை யாரும் செய்யாத காரியத்தைச் செய்யப் போகிறேன்; இதைப்போல யாராலும் செய்யவே முடியாது! இயற்கையின் உண்மைப் பாதையிலே வாழ்ந்த ஒரு மனிதனின் சாயலை என் சகோதர மக்களுக்குப் படம் பிடித்துக் காட்டப் போகிறேன். அந்த மனிதன் வேறு யாருமல்ல! நானே!

நான் தன்னந் தனியானவன்! என் உள்ளத்து உணர்ச்சிகள் எனக்குத் தெரியும்! எனக்கு மனிதர்களைப் பற்றியும் நன்றாகத் தெரியும். நான் இதுவரை கண்ட மனிதர்களைப் போல உருவாக்கப் பட்டவனல்ல; இப்பொழுது உயிர் வாழும் மனிதர்களைப் போல உருவாக்கப் பட்டவனுமல்ல! நான் அவர்களைவிடச் சிறந்தவனாக இல்லாவிட்டாலும், அவர்களிலிருந்து வேறுபட்டவன்! என்னை உருவாக்கிய வார்ப்படம் பற்றிய விஷயத்தில் இயற்கையன்னை சரியாகவோ அல்லது தவறாகவோ நடந்து கொண்டாள் என்பதை, நீங்கள் இந்தப் புத்தகத்தைப் படித்த பிறகுதான் சொல்ல முடியும்.

நியாயத்தீர்ப்பு நாளின் பேரிகை, முழங்குகிற காலத்தில் முழங்கட்டும்! அப்போது நான் இந்தப் புத்தகத்தை என் கையில் ஏந்தி, பாவ புண்ணியத்திற்கு நீதி வழங்கும் பரம்பொருளான நீதிபதியாரை நோக்கி, இப்படித் துணிந்து சொல்வேன்: "நான் என்ன செய்தேன், எப்படி வாழ்ந்தேன், என்ன நினைத்தேன் என்பதை இந்தப் புத்தகம் கூறும். நான் செய்த நல்லவைகளையும்,

தீயனவைகளையும், ஒரே மாதிரி ஒளிவு மறைவின்றி வெளிப் படையாகவே கூறியுள்ளேன். நான் செய்த மோசமான காரியங் களை விட்டுவிடவுமில்லை. நான் செய்யாத எந்த நல்ல காரியத்தை யும் இங்கே நான் பொய்யாகப் புகுத்தி விடவுமில்லை. அற்பனுக, நிந்தனைக் குரியவனுக, நல்லவனுக, உயர்ந்த மனம் படைத்த வனுக, கண்ணியமானவனுக, எந்தெந்தச் சமயத்தில் எப்படி யெப்படி யெல்லாம் இருந்தேனே, அப்படியப்படியே என் உண்மை சொரூபத்தை எடுத்துக் காட்டியிருக்கிறேன்! ஓ! நித்திய பரம்பொருளே! தேவரீர் காண்பது போலவே என் அந்தராத்மாவைத் திறந்து காட்டியிருக்கிறேன்! இனி எண் ணற்ற என் சகோதர மனிதர்களை இங்கே கூப்பிடும். அவர்கள் எனது குற்ற அங்கீகாரங்களைக் கேட்கட்டும். எனது உதவாக் கரைத் தனத்தைக் கேட்டுப் புலம்பி ஓலமிடட்டும்; எனது குறை கேடுகளைக் கேட்டு வெட்கப்படட்டும். பிறகு அவர்களில் ஒவ் வொருவனும் வரிசைக்கிரமமாக உம் நீதி சிம்மாசனத்தின் கால டிக்கு வந்து தன் தன் இருதயத்தின் இரகசியங்களையெல்லாம் வெளிப்படுத்தட்டும். அவற்றையெல்லாம் கூறி முடித்த பிறகு எவனுக்காவது நெஞ்சுரமிருந்தால், 'நான் அந்த மனிதனைவிடச் சிறந்தவன்,' என்று கூறட்டும்.

[ஸ்விட்ஜர்லாந்திலுள்ள கடிகாரத் தொழிலுக்குப் பேர் பெற்ற ஜீனிவா நகரில், பிரெஞ்சுக் குடும்பம் ஒன்றில் நம் ரூஸோ, 'இந்தக் குழந்தை பிழைக்குமோ, பிழைக்காதோ' என்ற ஸ்திதி யில் பிறந்தான்.]

நான் 1712-ம் வருஷம், ஜீனிவா நகரில், ஐசக் ரூஸோ என்பவருக்கும், சூசான் பெர்னர்ட் என்ற பெண்மணிக்கும் மகனுகப் பிறந்தேன். மிதமான பிதுரார்ஜிதம் பதினைந்து பிள்ளை களுக்கிடையில் பங்கிடப்பட்டதால் அவர்களில் ஒருவரான என் தந்தைக்குக் கிடைத்த பங்கு மிகச் சொற்பமே. அவர் கடிகாரத் தொழிலைத் தம் பிழைக்கும் தொழிலாகக் கொண்டார். அதில் அவர் மிகவும் கெட்டிக்காரராகவே இருந்தார். என் தாய் நல்ல நிலையில், உயர்ந்த (பாதிரிமார்) குடும்பத்தில் பிறந் தவள். என் தாயும் தந்தையும் சிறு பிள்ளைகளாக இருக்கும் பொழுதே இருவரும் ஒன்ருகப் பழகிவந்தனர். வயது வளரவளர இருவருக்கிடையில் இருந்த பாசமும் நெருக்கமாயிற்று. இவர்கள் இருவரின் ஆசைப் பிணைப்பை வெட்ட நினைத்த விதி, இவர் களின் பாசப்பிணைப்பை இறுக்கத்தான் உதவியது. என் தாய் தனக்குக் கிடைக்கமாட்டாள் என்று கண்ட இளம் காதலரான என் தந்தை சோக சாகரத்தில் ஆழ்ந்தார். காதலுக்கு ஏற்பட்ட இந்தச் சோதனைக்குப் பிறகு, என் தாயின் சகோதரன் என் தந்தையின் சகோதரி ஒருத்தியை மணக்க ஆசைப்பட்டார். அதனுல் அவர் செய்த உபாயத்தால் என் தாயின் தந்தை, என் தாய் தந்தையரின் மணத்துக்கு ஒப்புக்

கொண்டார். மணமான பிறகு, தமக்கு முதல் குழந்தை பிறந்த பிறகு, என் தந்தை கடிகாரத் தொழில் விஷயமாக கான்ஸ்டான்டி நோபிள் பட்டினத்துச் சுல்தானிடம் சென்றார். என் தந்தை வெளியூருக்குப் பிரிந்துபோன பிறகு என் தாயின் அழகும், புத்தி சாதுர்யமும், அவளுடைய பாட்டு, படிப்பு, ஓவியம், கவிதை முதலான கலைத்திறமை களெல்லாம் பல ரஸிகர்களை உண்டாக்கியது. ரஸிகர்களில் ஒருவர் தம் ரஸிகத் தன்மையை அளவு மீறிக்கொண்டுபோய் என் தாயை அடைய ஆசைகொண்டார். இது போன்ற மோகப் பித்துகளிலிருந்து தன்னைக் காப்பாற்றிக்கொள்ள என் அம்மாவுக்குக் கற்பு ஒன்று மட்டுமல்ல, அதைவிட அதிகமாக என் தந்தையின் மீது ஆசையும் இருந்தது! என் தந்தையை அவசரமாக ஊர்திரும்பும் படியாகக் கடிதம் எழுதினாள். என் தந்தையும் எல்லாவற்றையும் விட்டுவிட்டுத் திரும்பி வந்தார். அந்தக் கூடலின் துன்பக்கனியாய் நான் பிறந்தேன் - அவர் திரும்பி வந்த பத்து மாதங்களுக்குப் பிறகு, பலஹீனமான, நோயுள்ள குழந்தையாகப் பிறந்தேன். என் பிறப்பு என் தாயின் உயிரை விழுங்கியது. எனது துன்பங்கள் அனைத்திலும் என் முதல் துன்பம் என் பிறப்புத்தான்!

என் தந்தை எனது தாயின் பிரிவை எப்படிப் பொறுத்துக் கொண்டாரோ தெரியவில்லை. நான்தான் அவரின் மனைவியை விழுங்கிவிட்டேன் என்பதை மறப்பதற்காக, என் தாயை என் உருவில் காண்பதாக, ஏக்கப் பெருமூச்சுக்களுடன் என்னைக் கட்டியணைத்துக் கொள்வார். "ஆ! எனக்கு அவளைத் திருப்பித் தந்துவிடு! அவளின் நஷ்டத்துக்கு என் மனதைத்தேற்று! அவள் என் ஆத்மாவில் விட்டுச் சென்ற சூன்யத்தை நீதான் நிரப்ப வேண்டும்'' என்பார். இவ்வாறு என் தாயை இழந்த நாற்பது வருடங்களுக்குப் பிறகு என் தந்தை தமது இரண்டாவது மனைவியின் கரங்களில் சாய்ந்து கொண்டே உயிர் துறந்தார்—ஆனால் அவர் உதடுகளிலே முதல் மனைவியின் பெயருடனும், இருதயத்தின் அடியாழத்தில் என் தாயின் உருவத்துடனுமே அவர் உயிர் துறந்தார்!

என்னை படைத்தவர்களின் சரிதம் இது! அவர்கள் என்னிடம் விட்டு விட்டுப்போன ஒரே ஒரு சொத்து, அவர்களின் உணர்ச்சி கரமான உள்ளம்தான்! ஆனால் அவர்களின் ஆனந்தத்திற்கு மூல காரணமாயிருந்த அதே உணர்ச்சியுள்ளம் என்னிடம் வந்ததும் எனது வாழ்வின் துன்பங்கள் எல்லாவற்றுக்கும் அதுவே மூல காரணமாகி விட்டது. நான் இந்த உலகத்தில் மிகவும் மோசமான தேக நிலையுடன் பிறந்த காரணத்தால் என் தந்தையின் சகோதரி என்னை அன்புடனும் அழகுடனும் பராமரித்துஎன் உயிரைக் காப்பாற்றினாள்.

[அவனது வயதான காலத்தில் ரூஸோ அவளுக்குப் பின் வருமாறு எழுதினான்: "என் அத்தையே! என்னை ஏன் காப்

பாற்றினாய்? என்னைக் காப்பாற்றியதற்காக உன்னை மன்னித்து விடுகிறேன். என் ஆரம்ப காலத்தில் நீ என்னிடம் காட்டிய அன்பிற்கும், ஆதரவுக்கும் பிரதியாக உன் இறுதிக் காலத்தில் என்னால் உனக்கு ஒருவித உதவியும் செய்ய முடியவில்லை என்பதற்காக மன்னித்து விடு!"]

எனது ஆறு வயது வரை எப்படி வாழ்ந்தேன் என்பது எனக்கே தெரியாது. என் தாய் விட்டுச் சென்ற கதைப் புத்தகங்களை, இராச் சாப்பாட்டுக்குப் பின் நானும் என் தந்தையும் உட்கார்ந்து படிப்போம். சில இரவுகளில் நானும் என் தந்தையும் இரவெல்லாம் சுவாரசியமாக எங்களை மறந்து படித்துக் கொண்டேயிருப்போம். அப்போது எங்களை வைகறைப் பறவைகளின் வண்ணக் கீதம் தான் இவ்வுலக நினைவுகளுக்குக் கொண்டு வரும். என் தந்தை என்னைப் பார்த்து, "வா! படுக்கைக்குப் போவோம்; நானும் உன்னைப் போலக் குழந்தையாகி விட்டேன்!" என்பார்.

1719-23: என் தாயின் புத்தக அலமாரியிலுள்ள கதைப் புத்தகங்களையெல்லாம் படித்து முடித்துவிட்டேன். என் தாயைப் பெற்ற என் தாத்தாவின் நூல் நிலையத்திலிருந்து சில புத்தகங்கள் கிடைத்தன. இலக்கியத்தில் சிறந்த புத்தகங்கள் கிடைத்ததால் அவைகளைப் படிப்பதில் முனைந்தேன்.

[சரித்திர வீரர்களின் வாழ்க்கை வரலாறுகளை ரூஸோ படித்து வந்தான். கிரேக்க, ரோம, சரித்திரம் இதிகாசம் முதலியவைகளைத் தந்தை படிக்க, மகன் கவனத்துடன் கேட்டு வருவான். கிரேக்க, ரோமானிய வீரர்களைப் போலத் தானும் வீரச் செயல்களைச் செய்யவேண்டும் என்ற உணர்ச்சியின் நிமிர்ச்சி அவன் மனதில் மூண்டெழும்]

சரித்திரப் புத்தகங்களை நான் ஊடுருவிப் படித்து வந்தாலும் என் தந்தையும் நானும் அநேக விஷயங்களைப் பற்றித் தாராளமாக விவாதித்து வந்ததாலும், இயற்கையாகவே ஒரு சுயேச்சை உணர்ச்சி என் மனதில் படிந்துவிட்டது. எந்த விதமான அடிமைத் தனத்தையும் வெறுத்து நேர்மையுடனும், நெஞ்சுரத்துடனும் வாழும் உணர்ச்சி என் உள்ளத்தில் தலையெடுத்தது.

எனக்கு வயதில் ஏழு வருஷங்கள் மூத்த ஒரு சகோதரன் இருந்தான். அவன்மீது எனக்கு உள்ளன்பு நிறைய இருந்தது. ஒரு நாள்!— அவனுடைய ஒரு காலித்தனத்திற்காகக் கண்டிக்கும் பொருட்டு என் தந்தை அவனைத் திட்டிக் கொண்டிருந்தார். நான் அவர்கள் இருவருக்குமிடையில் நுழைந்து என் அண்ணனை அணைத்துக் கொண்டேன்; அவன் மேல் என் தந்தை அடித்த அடி உதைகளெல்லாம் என்மீது விழுந்தன; நான் அவைகளையெல்லாம் பொறுத்துக் கொண்டேன்.

[ரூஸோவின் இளம் பிராயம் சந்தோஷம் நிறைந்ததாகக் காணப்படும். ஆனால் முக்கியமாகக் கவனிக்க வேண்டியது என்ன வென்றால், ஒவ்வொருவரின் குழந்தைப் பிராயத்திலும் இருக்க வேண்டிய இரண்டு விஷயங்கள், இவனின் வாழ்க்கையில் இல்லை! அவை—தாயின் அன்புப் பராமரிப்பு, தன் வயதொத்த சிறுவர் களின் பழக்கம்.]

என் அண்ணன் மிகவும் கெட்டவனாகி ஒரு நாள் வீட்டை விட்டே ஓடிவிட்டான். நான் என்னுடைய தந்தைக்கு ஒரே மகனாக இருந்து வந்தேன். எனது இளம் வயதில் எல்லோ ராலும் நன்றாகக் கவனிக்கப்பட்டு வளர்க்கப்பட்டேன். தெருவில் என்னைப் போன்ற சிறுவர்களுடன் விளையாட நான் அனுமதிக்கப் படவில்லை. ஆனாலும், நான் என் சிறு வயதில் மற்ற பிள்ளைகள் செய்யக் கூடிய குற்றங்களைச் செய்து வந்தேன். நான் வாயாடி யாகவும் புளுகனாகவும் விளங்கி வந்தேன். சில சமயங்களில் மிட்டாய்கள் தின்பண்டங்கள் முதலியவைகளை என் வீட்டி லிருந்து திருடி வந்தேன். ஆனால் வாயில்லாத பிராணிகளைத் துன் புறுத்துவதும், பிற சிறுவர்களைத் துன்புறுத்துவதும், பிறர் மீது கோள் சொல்லுவதும் எனக்குப் பிடிக்காத விஷயங்கள். [இந்த வயதில் இளம் ரூஸோவுக்கு எதையும் கண்டு மன மிரங்கும் மனப்பான்மையும், கஷ்டங்களையும், துன்பங்களையும் பொறுத்துக்கொள்ளும் மனப்பாங்கும் உண்டாயிற்று.]

எப்பொழுதும் என்னுடைய அத்தை என்னுடனிருந்து என் னைக் கவனித்து வந்தாள். அவள் அழகாகப் பாடுவது எனக்கு சங்கீதத்தில் ஒரு ஆர்வம் ஏற்படக் காரணமாயிருந்தது. இவை தான் என்னுடைய சூன்யம் கப்பிய பால்யப் பிராயத்து ஆரம்ப உணர்ச்சிகள். மமதையும், மென்மையும் ஒருங்கே ஊடாடும் ஒரு இதயமும், குழைவும், அதே சமயத்தில் யாருக்கும் அடங்காத சுயேச்சையும் பரிணமிக்கும் குணுதிசயமும் என்னிடத்தே உருப் பெற ஆரம்பித்தன. துணிச்சல், கோழைத்தனம், தன்னடக்கம் புலனடிப் பலஹீனங்கள்—இவற்றினிடையே நிலைபாவாமல் அலை பாயும் ஒருவிதச் சஞ்சலக் குணப்போக்கு உருப்பெற்று என் வாழ்க்கை முழுமையிலும் என்னை நிலையான—ஸ்திர புத்தியற்ற வனாகச் செய்து விட்டன.

ஒரு சமயம் என் தந்தை, அப்பட்டினத்து அதிகாரிகளுள் அதிகச் செல்வாக்கு உள்ள ஒரு ராணுவத் தளபதியுடன் சண்டை யிட்டதற்காக சிறைப்படுத்தப்பட விருந்தார். அதனால் அவர் தமது (குடும்பத்தைக் கலைத்து) சொந்தப் பட்டினத்தை விடுத்து வேற்றூருக்கு ஓடிவிட முடிவு செய்தார். ஆதலால் நான் எனது தந்தையின் சகோதரரிடம் வளர்ந்து வரலானேன். என் சிற்றப் பாவுக்கு என் வயதொத்த மகனொருவனிருந்ததால், நானும் அவனும் லாம்பெர்சியர் என்ற புராடெஸ்டன்ட் பாதிரியாரிடம்

லத்தீன் மொழி பயில அனுப்பப் பட்டோம். [லாம்பெர்சியர் என்ற அந்த புராடெஸ்டன்ட் பாதிரியார், போஸி என்ற கிராமத்தில் வசித்து வந்தார். இயற்கைத் தேவியின் வண்ணச் சித்திரங்களால் சூழப்பட்டு அந்தக் கிராமம் அழகுடன் காட்சி யளிக்கும். இவ்விரண்டு சிறுவர்களும், லாம்பெர்சியர் குடும் பத்துடன் தங்கவேண்டுமென்று ஏற்பாடு செய்யப் பட்டிருந்தது.] அங்கு லத்தீன் மொழியும், கல்வி என்ற தலைப்பின் கீழ் உள்ள எல்லாக் குப்பைகளும் கற்றுக் கொடுக்கப்பட்டன. இரண்டு வருஷ காலத்திற்கு நான் அங்கு வாழ்ந்து வந்தேன். அங்கு நான் கழித்த மகிழ்ச்சி ததும்பும் நாட்களை என்னால் மறக்கவே முடியாது. எளிமை நிறைந்த கிராம வாழ்க்கை என் உள்ளத்தில் எல்லோருடனும் நட்புகொண்டு பழகவேண்டும் என்ற ஆசையை உதயமாக்கியது. அங்கே வித்தியாப்பியாசம் பயின்று வந்த நானும் என் சிற்றப்பா மகனும் பரஸ்பரம் உயிருக்குயிராய் நேசித்து வரலானோம். எங்கள் வேலைகள், ஆசைகள், எங்களுக்கு மகிழ்ச்சியூட்டிய விஷயங்கள் யாவும் ஒன்றாயிருந்த காரணத் தால் நாங்கள் நெருங்கிப் பழகினோம். என்னுடன் பழகுபவ ரெல்லாம் என்னுடன் அன்பு கொள்ளும் வகையில் நடந்து கொள்ளவேண்டும் என்று என் மனம் விரும்பியது.

[லாம்பெர்சியரின் வீட்டில் அவருக்கு முப்பது வயது நிரம்பிய ஒரு சகோதரி இருந்து வந்தாள். வீட்டில் தங்கிப் படிக்கும் இவ்விரு சிறுவர்களையும் அவள்தான் மேற்பார்வையிடுபவள். ரூஸோவுக்கு எட்டு வயதாகும் வரை அவளின் படுக்கையறை யில்தான் படுத்துறங்குவான். ரூஸோ எதாவது தவறு செய்தால் அவள் அவனைக் கடுமையாகக் கண்டிப்பாள் - மிரட்டுவாள். அவளின் தண்டனைத் துன்பங்களிலெல்லாம் ஒரு விதப் புலன் இன்ப உணர்ச்சி பொதிந்திருந்ததாக ரூஸோ கூறுகிறான். அந்தச் சின்னஞ்சிறு பிராயத்திலே அவள் மேல் அவனுக்கு ஒரு விதமான ஆசை இருந்தது என்றும் அவனின் வாழ்நாள் முழுமையிலும் அந்த ஆசையின் சக்தியானது தனது குணப் போக்கில் ஒரு தீவிர விளைவை உண்டு பண்ணியதாகவும் அவன் கூறுகிறான். பிறவி முதலிலிருந்து அபரிமிதமான உணர்ச்சி களுக்குக் உட்பட்டவனாகவும், சங்கோஜம் நிறைந்தவனாகவும் வளர்ந்து வந்த அவனுக்கு அந்த ஆசையானது,—ஒருவனின் குழந்தைப் பருவத்தில் உண்டாகக்கூடிய காதலின் அடிப்படை உணர்ச்சிதான்என நாம்கொள்ளலாம். இந்தப் பால்யப்பிராயத்து உணர்ச்சியானது பிற்காலத்தில் அவனுடைய வாலிப வயதில், அடக்க முடியாத தீவிரக் காதல் வெறி நிறைந்த ஒரு சுபாவத்தை அவனிடம் வளர்த்து விட்டது. அழகு நிறைந்து காணப்படும் காரிகைகளைக் காரணம் புரியாத கனல் தெறிக்கும் ஒருவித ஏக்கம் நிறைந்த பார்வையுடன் கவனித்து வருவான். ஆனால் அவனுடைய பிறப்பிலிருந்து அவனிடம் இருந்து வந்த சங்கோஜ

சுபாவத்தால் அவன் கூச்சம் நிறைந்த காதலனாகவே காணப் பட்டான். தான் தீவிரமாகக் காதல் கொள்பவர்களிடம் தனது உள்ளக் கிடக்கையை எடுத்துச் சொல்ல இயலாமல் கூச்சப் பட்டுக்கொண்டு தன் மன அரங்கிற்குள் சதா ஏங்கிக்கொண்டே யிருப்பான். அத்தகைய ஆசைக்குரிய அணங்குகளிடம் இன் னின்ன விதமாக வெல்லாம் சரசமாடுவதாக இஷ்டப்படி யெல்லாம் கற்பனை செய்துகொண்டு சில சமயங்களில் மிகவும் கீழ்த்தரமாகவோ, அல்லது மிகவும் உயர்தரமாகவோ வெல் லாம் கற்பனை செய்துபார்த்து, அந்த ஆண்—பெண் உறவு சுகத்தை மானசீகமாக அனுபவித்து வருவான். இவ்வாறு எதையும் மானசீகமாக அனுபவித்துத் தீர்த்துவிடுவதினால் உள்ளத்தின் உணர்ச்சி வெறிக்கு ஒருவித வெளிப்பாடு கிடைத்து, தன் ஒழுக்கத்திற்கும் ஊறுவிளையாமல் பெண்களின் கற்பையும் பாதுகாத்து வந்ததாகக் கூறுகிறான். இனி அவனது வித்தியாப் பியாசக் கதையைத் தொடர்வோம்.]

ஒரு நாள்! — என் அறையில் உட்கார்ந்து என் பாடங்களைப் படித்துக்கொண்டிருந்தேன். நான் இருந்த அறைபின் வெளியில் லாம்பெர்சியர் பாதிரியாரின் சகோதரியின் சீப்பு வெய்யலில் வைக்கப்பட்டிருந்தது. சற்றுநேரம் கழித்து அவள் அந்தச் சீப்பை எடுக்கச் சென்ற சமயம் வேலைக்காரி கழுவி உணத்த வைத் திருந்த அந்த சீப்பின் பல் உடைந்து காணப்பட்டது. இதை, யார் உடைத்திருப்பார்கள்? என்னைத்தவிர வேறு யாரும் அந்த அறையில் இல்லாத காரணத்தால் அவளுக்கு என்மேல் சந்தேகம் ஏற்பட்டது. பாதிரியாரும் அவரது சகோதரியும் குற்றத்தை ஒப்புக்கொள்ளும்படியாக என்னைப் பயமுறுத்தித் துன்புறுத்த ஆரம்பித்தார்கள். நான் மரணத்தைத் தழுவினாலும் சரி, நான் செய்யாத ஒரு குற்றத்தைச் செய்ததாக எப்படிச் சொல்லுவது? நான் பாதிரியிடம் பட்ட அடிகளின் வேதனையையும் பொறுத்துக் கொண்டேன். ஆனால் மூர்கத்தனமாகத் தண்டிக்கப்பட்ட அந்த அநியாயத்தைப் பற்றிய எனது முதல் ஆத்திர உணர்ச்சி எனது ஆத்மாவில் ஆழமாகக் கல் வெட்டுப் போலப் பதிந்துவிட்டது. இதனால்தான் அநியாயமான செயலை, யார், எங்கு, எப்போது செய்தாலும் என் உள்ளம் ஆத்திரத்தால் குமுறிக்கொந்தளிக்கும். கொடூரமான ஆட்சியாளரின் அக்கிரமங்களையோ, குயுக்தியான மதகுருமார்களின் அட்டூழியங்களையோ பற்றியெல்லாம் நான் கண்ணுறும் சமயத்தில், நான் நூறு முறை சாக நேர்ந்தாலும் சரி, அது போன்ற கயவர்களை, கெட்டவர்களை அப்படியே ஆனந்தம் கொப்பளிக்கக் கட்டாரியால் அவர்களின் இதயங்களைப் பிளந்து விடலாமா என்ற வெறி கிளம்பும். [இதுவே அநியாயத் தையும் அடக்கு முறைகளையும் கண்டு அவன் கொதித்தெழும் குணத்திற்கு மூலகாரணமாகும்.]

இந்தச் சம்பவத்துடன் என்னுடைய இளம் பிராயத்தின் அமைதி முடிவுற்றது. தூய்மையான, கலப்பற்ற ஆனந்தம் என்று கூறுகிறார்களே, அதை நான் இந்த சம்பவத்திற்குப் பிறகு அனுபவித்ததேயில்லை. நானும், என் சிற்றப்பா மகனும் இன்னும் சில மாதங்களுக்கு அங்கு குருவின் வீட்டிலேயே தங்கியிருந்தோம். எங்களால் பழைய சுவர்க்கத்தைக் காணவே முடியவில்லை. பரஸ்பர அன்பு, நெருக்கம், மன ஒற்றுமை – இவை யாவும் அதற்குப் பிறகு ஆசிரியருக்கும் மாணவருக்குமிடையில் காணப்படவில்லை. அதற்குப் பிறகு எங்களின் உள்ளத்து உணர்ச்சிகளைப் படித்தறியக் கூடிய கடவுளர்களாகக் குருமார்களைக் கருதவேயில்லை. மறைவில் காரியங்களைச் செய்தோம்; தைரியமாகப் பொய்சொல்லத் துணிந்தோம். நாங்கள் வாழ்க்கையை வெறுக்கத் துவங்கினோம்; பிறர் எங்களை வெறுக்கத் துவங்கினார்கள். என்னுடைய சிற்றப்பா வந்து எங்களை அழைத்து போனார்—படிப்பித்தவரை விட்டுச் சிறிதும் பிரிவுத் துயரின்றிப் பிரிந்து சென்றோம்!

நான் ஜினீவா நகருக்குத் திரும்பியதும் இரண்டு, மூன்று வருடங்களுக்கு அங்கேயே என்னுடைய சிற்றப்பாவுடன் வசித்து வந்தேன். அங்கு என்னுடைய ஒன்று விட்ட சகோதரனோடு, படம் வரையவும், சில கணக்குப் பாடங்களையும் கற்று வந்தேன். நான் என்ன தொழிலுக்குப் படிக்க வேண்டுமென்று என் சிற்றப்பா பலருடன் கலந்து ஆலோசித்து வந்தார்.

[இந்த வயதில், பிறருக்காகப் பரிந்து பேசுவது, பிறர் கஷ்டங்களைத் தன்னால் இயன்றவரை போக்குவது முதலிய குணங்களைப் பெற்றிருந்தான் ரூஸோ. ஜினீவா நகருக்கு அருகாமையில் உள்ள ஒரு ஆலையில் தனது அத்தை மகனுடன் பேசிக் கொண்டிருக்கையில் அங்கிருந்த ஒரு யந்திரத்தைக் கண்டான் ரூஸோ. எங்கேயோ கவனத்தில் அவன் அத்தை மகன் இயந்திரத்தின் விசையை முடுக்கி விட்டான். சுற்றும் இரும்பு உருளைகளின் நடுவே ரூஸோவின் இருவிரல்கள் சிக்கிக் கொண்டன. நகங்கள் கிழிக்கப்பட்டு இரத்தம் பீறிட்டு வந்தது. பயந்து போன அத்தைமகன் இதைப்பற்றி யாரிடமும் சொல்ல வேண்டாமென்று கேட்டுக் கொண்டான். இவ்வளவு வேதனையிலும் கூச்சலிடாமல் அப்பெரு வேதனையைப் பொறுத்துக் கொண்டு ஒன்றும் பேசாமலிருந்தான் ரூஸோ. இந்தச் சம்பவம், அவன் வயதொத்த சிறுவர்களைப்போல அல்லாமல் நன்கு வளர்ச்சியடைந்த, உணர்ச்சிகள் நிறைந்த அவனது மனப் பண்பாட்டை எடுத்துக் காட்டும்.]

நான் என்னுடைய தந்தையைச் சந்திப்பதற்காக நையன் என்ற சிற்றூருக்குச் செல்லுவது வழக்கம். அங்கு தமது நண்பர்

களுடன் என் தந்தை வசித்து வந்தார். அந் நகரில் மேடம் டி' வுல்சன் என்பவள் என்னை அன்புடன் அணைத்து, என்னை அன்புடன் நடத்தி வந்தாள். அவளுடைய மகளோ என்னை அவளுடைய காதலனுகவே ஆக்கிக் கொண்டு விட்டாள். பதி ஞெரு வயது நிரம்பாத பையனுன எனக்கும், இருபத்திரண்டு வயதினளான அவளுக்கு மிடையில் முளைத்த காதல் எப்படியிருக் கு மென்பதைச் சுலபமாகப் புரிந்து கொள்ளலாம். இத்தகைய குறும்புக் காரிகளான இளம் பெண்கள் தங்களின் கவர்ச்சியின் சக்தியைத் தெரிந்து கொள்ள என்னை அவர்களின் விளையாட்டுப் பொம்மையாக உபயோகப் படுத்தி வேடிக்கை பார்த்திருக்கலாம். ஆனல் நானே அதைத் தீவிரமான அன்பாகவே மேற்கொண் டேன். நானும் அவளிடம் நன்ருகப் பழகியே வந்தேன்; நாங்கள் கூடிப்பிரியும் பொழுது கண்ணீர் சிந்தாமல் பிரிய மாட்டோம். நான் அவளை விட்டுப் பிரிந்த பிறகு எனது வாழ்க்கை வேதனை நிரம்பிய சூன்யமாக இருந்தது—கடைசியில் அவள் தனிமையில் வாழச் சகியாதவளாய் என்னைக் காண்பதற்காக ஜினீவா பட்டி னத்திற்கு வந்தாள் என்று கேட்டு என் மனம் மகிழ்ச்சிப் பண் பாடிக் களித்தது. அவள் வந்து தங்கிய இரண்டு நாட்களுக்கு மகிழ்ச்சிப் பானத்தைப் பருகி மயக்கக் கிறக்கத்தில் கிடந்தேன். அவள் ஜினிவாவை விட்டுச் சென்ற பொழுது ஏதாவது ஆற்றில் குதித்து மகிழ்ச்சியுடன் என்னை மாய்த்துக் கொண்டிருப்பேன்; காற்றில் வேதனை கப்பிய எனது துன்ப ஓலம் நீண்ட நேரம், மிதந்து கொண்டிருந்தது. அவள் சென்ற எட்டு நாட்களுக்குப் பிறகு தனது பட்டாலான மிருதுவான கையுறையையும், சில தித்திப்பான மிட்டாய்களையும் எனக்கனுப்பினுள். அவள் தன் நினைவுக்காக அவற்றை அனுப்பியிருக்கிருள் என்று எண்ணி மகிழ்ச்சிக் கடலில் ஆழ்ந்து போனேன். பிறகுதான் அவள் வேறு ஒருவனை மணக்கப் போகிருள் என்ற செய்தி தெரிய வந்தது. அவள் என்னை—தனது முன்னுள் காதலனைக் காண என் ஊருக்கு வரவில்லை; தன் திருமணத்திற்குத் தேவையான ஆடைகளை வாங்குவதற்காகவே என் ஊருக்கு வந்துபோனுளாம். இது கேட்டு என் உள்ளத்தில் கிளம்பிய ஏமாற்றத்தின் கோபக் கனலைப்பற்றி நான் விவரிக்கப் போவதில்லை; அவளை இனி ஒரு போதும் கண்ணெடுத்துப் பார்க்கவும் கூடாதெனச் சபதம் பூண்டேன். இருபது வருடங்களுக்குப் பிறகு என் தந்தையைக் காணச்சென்றிருந்த சமயம் எனது தந்தைக்குச் சற்று தொலை வில் தென்பட்ட நாற்பது வயது மதிக்கத் தகுந்த பெண்ணை அவரிடம் காண்பித்து "அவள் யார்?" என்று கேட்டேன். அவர் புன் முறுவலுடன், என்னைப் பார்த்து, "உன் உள்ளம் உனக்குச் சொல்ல வில்லையா? அவள்தான் உன்னுடைய முன்னுள் காதலி இப்பொழுது மேடம் கிரிஸ்டின்!" என்ருர். நான் வேறுபுறம் போய்விட்டேன்.

[இந்த இளம் பிராயத்தில் ரூஸோவுக்கு இரண்டு ரகமான காதல் அனுபவங்கள் ஏற்பட்டன. ஒரு காதலி மேற்கூறிய பேரழகியான குமாரி உல்சன். இன்னொருத்தி குள்ளமான ஒரு பள்ளிக்கூட ஆசிரியை. அவள் ஒருத்தியுடன் தன்னை மறந்திருக்கும் சமயம், மற்றவளைப் பற்றிய எண்ணமே அவனுடைய மனதில் எழாது. முன்னவளின் காதலில், ஜீவன் நிரம்பிய, மிருதுவான, உயர்தரமான ஆனல்—ஆழம் நிறைந்த, ரம்மியமான உணர்வுதான் ரூஸோவுக்கு உண்டாகும்; சண்டமாருதமான உணர்ச்சிக் கொந்தளிப்புகள் உண்டாகாது. ஆனல் பின்னவளின் காதலிலோ, புலன்களில் வெறியை மூட்டும் ஒருவிதப் போதை உணர்ச்சி உண்டாகும். முன்னவளோடு அதிகமாக நெருங்கிப் பழகாவிட்டாலும், மனநெருக்கமான சகஜபாவமே நிறைந்திருக்கும். பின்னவளிடமோ, அவளை அடிக்கடி சந்தித்துப் பழகிவந்தாலும் எப்போதும் கூச்சமே மிகுந்து காணப்படும். முன்னவளிடம் மனப்பூர்வமான கருத்துச் செலுத்துவதிலும், பின்னவளிடம் கீழ்படிந்து அவளின் ஆசையில் கட்டுண்டு இருப்பதிலுமே பேரானந்தம் கண்டான் ரூஸோ. ஒருத்தியிடம் சகோதர வாஞ்சைபோன்ற ஒருவிதமான ஆத்ம லயிப்புக் கலவையிட்ட இன்பமும், இன்னொருத்தியிடம் புலன்களின் போதை கலந்த ஆசைவெறியும் அவனுக்கு உண்டாகி விட்டிருந்தது. இரு துருவங்கள்போல முற்றிலும் முரண்பாடான இந்த இரண்டு ரகக் காதல்கள்தான் ரூஸோவின் வாழ்க்கை முழுமையிலும் ஊசலாடி வந்திருக்கின்றன. மேற்கூறிய காதல் அனுபவங்களெல்லாம் மனத்தையொட்டியவைதான்; உடலையொட்டியவை அல்ல. எத்தனையோ விதமான காதலிகளுக்கு மத்தியிலும் ரூஸோ பிறவிக் கூச்சத்தால் உடலைப் பொருத்தவரை தூய்மையானவனுகவே இருந்து வந்திருக்கிறன். மனதில் அவர்களோடெல்லாம் சுகம் அனுபவிப்பது போல் கற்பனை செய்து கொள்வதொன்றே அவனுக்குப் போதுமானது!]

1723–28: என்னுடைய எதிர்காலப் பிழைப்பிற்கான வேலைப் படலம் தீர்மானிக்கப் பட்டு விட்டது. ம. மாஸாரான் என்பவரிடம் கோர்ட்டுப் பத்திரங்களை நகல் எடுத்து எழுதிக்கொடுக்கும் வேலையில் என்னை அமர்த்தினர்கள். எனக்கு இந்த வேலையின் பேரில் வெகுசீக்கிரத்தில் அலுப்புத் தட்டிப்போயிற்று—இது மிகவும் கேவலமான அடிமைத் தனமாகவும் எனக்குப் பட்டது. எனது எஜமானர் என்னைக் கசப்புடன் நடத்தத் துவங்கினர். கடைசியில் ஒன்றுக்கும் உதவாதவன் என்று நான் வேலையிலிருந்து விலக்கப்பட்டேன்.

பின்னர் எனது புது எஜமானனுக ம. டுகோமன் என்ற சித்திரம் செதுக்கும் இளைஞர் வாய்த்தார். இவர் எனது இளம் பிராயத்துச் சுதந்திர இன்பநினைவுகளைத் துப்புரவாக அகற்றி என்

னைச் சரியான அடிமையாகச் செய்துவிட்டார். நான் என்னுடைய தந்தையிடத்தில் துணிவுள்ளவனாகவும், என் குருவிடம் கட்டுப்படாதவனாகவும், என் சிற்றப்பனிடம் அடக்கம் உள்ளவனாகவும் இருந்துவந்தேன். இப்பொழுது, என்னுடைய எஜமானனின் முன்போ, பலஹீனம் நிரம்பிய கோழையாகி விட்டேன்! நான் சுதந்திரத்தை வழிபடுபவன்; அடக்கு முறை யையும், அநியாயமான துன்பத்தையும், கீழ்ப்படிவதையும் அறவே வெறுப்பவன்.

[ம. டுகோமனிடம் வேலைபார்த்த மூன்று வருஷங்களில் ரூஸோவின் மனப் பண்புகள் அதிகப்படியான முறையில் பாதிக் கப்பட்டுவிட்டன. மென்மையான சுபாவமும், நேர்மையான மனப்பண்பும் கொண்ட ரூஸோ அவனுடைய மூர்க்கக் குணம் படைத்த எஜமானனால் மிகவும் சிறுமைப் படுத்தப்பட்டான். தான் அடிமையைப் போல நடத்தப்படும் முறையையும், ஓயாத உழைப்பையும், ஏற்றதாழ்வுகளையும் கண்டு அவன் மனம் குமுறியது. வாழ்க்கையை ரசித்து அனுபவிக்க வேண்டிய வயதில், வசதிகளும் ஆசைகளும் தன் கைகளுக்கு எட்டாமற் போன ஏமாற்றத்தாலும், அவனுடைய சுபாவமானது, கீழ்த்தர மான திசை நோக்கிக் கரணம் போட்டுச் சென்றது.]

நான் தனிமையில் முணகவும், பொய்களைத் தைரியமாகச் சொல்லவும், திருடவும் கற்றுக்கொண்டேன். இவைகளை அசா தாரணமான துணிச்சலுடன் செய்து வரலானேன். இதுவரை இது போன்ற தீய காரியங்களை என் மனம் வெறுத்து வந்தது. ஆனால் இப்போது புதியதாய்ப் பதிந்துவிட்ட இவைகளை என் மனதிலிருந்து என்னால் விலக்கவே முடியாமற் போயிற்று. என்னை என் எஜமானன் துன்புறுத்தி வந்த காரணத்தால், தண்டனைகளுங்கூடச் சகஜமாகிவிட்டன. ஒரு குற்றவாளியைப் போல தண்டிக்கப்பட்டால், குற்றவாளி போலவே நடந்து கொள்ளவேண்டும் என்று தீர்மானித்துவிட்டேன். நானும் நிறையத் திருடவும் ஆரம்பித்துவிட்டேன். "நான் திருடினால், சவுக்கடி கிடைக்கும்; பரவாயில்லை; நான் சவுக்கடி படுவதற் கல்லவா படைக்கப்பட்டேன்?" – என்று என் உள்ளக்குரல் ஓங்காரக் கூச்சலிடும்.

[இந்த இடைக்காலத்தில் எதைக் கண்டாலும் அலுத்துச் சலிப்புற்ற ரூஸோவுக்கு, மறுபடியும் புத்தகங்களை நிறையப் படிக்க அபாரப் பசி உண்டாயிற்று. இந்தப் புத்தகப் பிரியம் ஒன்றுதான் அவன் அடியோடு கெட்டவனாகி விடாமல் தடுத்தது என்றே சொல்லலாம். புத்தகங்களைக் கூலிக்கு இரவலாகப் படிப்ப தற்குக் கொடுக்கும் ஒருத்தியிடம் ரூஸோ தன்னுடைய சட்டை, துணிமணிகளைக்கூட விற்று நிறைய புத்தகங்களை வாங்கிப் படித்துவந்தான். இது இவனின் எஜமானனிடமிருந்து புத்தம்

புதிய தண்டனைகளை வாங்கிக் கொடுத்தது. அவன் புத்தகங்களைப் படித்துக் கொண்டிருக்கும் பொழுது அவர் அவைகளைப் பறித்துக் கிழித்தெறிவார். ரூஸோ புத்தகங்கள் மீது கொண்டிருந்த ருசியானது தடைகளால் அதிகமாகப் பெருகி, அதுவே ஒரு வழக்கமான மோகப் பித்தாகிவிட்டது. புத்தகங்கள் பெரும்பாலும் மோசமானவைகளாகவே இருந்துவந்த சமயத்திலும், அவற்றால் உயர்ந்த உணர்ச்சிகள்தாம் அவன் உள்ளத்தில் உதயமாயின. இளமையான வயது என்ற ரீதியிலே அவன் அந்தப் பருவத்தில் அனுபவிக்க வேண்டிய ஆசைகளெல்லாம், அவனுடைய கைக்கு எட்டாத தூரத்திலிருந்து வந்தபடியால், சுபாவமாகவே அளவு மீறிய உணர்ச்சியாளனான அவன், பலவிதமான கற்பனைகளிலும் தன்னை உருவகப் படுத்திப் பார்த்துக்கொண்டு அத்தகைய கற்பனை நிலையிலே மூழ்கித் தன்னுடைய துன்பமயமான உண்மை நிலையை மறந்துவிட முயற்சிப்பான். தன்னைச் சுற்றிலும் சர்வம் அதிருப்தி மயமாக இருப்பதைக்கண்ட அவன், இவ்வாறான கற்பனைகளில் மூழ்குவதற்காகத் தனிமையை நாடும் சுபாவத்தை வளர்த்துக் கொண்டான். இதுவே அவனது வாழ்வு முழுதும் அவனை ஏகாங்கியாக ஆக்கிவிட்டது!]

இப்படியாக எனது பதினாறாவது வயதை அடைந்தேன். எதிலும் எனக்குச் சற்றும் விருப்பமேயில்லாது போயிற்று. என் வயதில் அனுபவிக்க வேண்டிய இன்பங்கள் யாவும் இல்லாமல், அழுவதன் காரணம் எனக்கே தெரியாமல் கண்ணீர் சிந்திக் கொண்டும், எதற்கென்று தெரியாமல் ஏக்கப் பெருமூச்சுக்களைத் தெளித்துக் கொண்டும்—வாழ்ந்து வந்து கொண்டிருந்தேன். ஞாயிற்றுக் கிழமைகளில், என்னுடன் வேலை செய்பவர்கள் உல்லாசக் களியாட்டங்களில் மூழ்கித் திளைக்க நகருக்கு வெளிப்புறம் செல்லுகையில், என்னையும் தன்னுடன் அழைத்துச் செல்லுவார்கள். நான் திரும்புவதற்குள் எங்கள் பட்டினத்துக் கதவுகள் மூடப்பட்டுவிடும். மறுநாள் வேலைக்குச் செல்லும் பொழுது எனது எஜமானனிடமிருந்து எனக்கு நல்ல அடி உதை கிடைக்கும். இரண்டு முறை இதுபோன்ற தண்டனையை அனுபவித்த நான், மூன்றாவது முறையும் இப்படி நேரிடக்கூடாது என்று கவனத்துடனிருந்தேன். அன்று நான் பட்டினத்திற்கு வெளியில் சுற்றிக்கொண்டிருந்த சமயம் அரைமணி நேரத்திற்கு முன்பாகவே பட்டினத்துக் கதவுகள் மூடப்பட்டுவிட்டன. கதவு மூடப்படும் சப்தம் கேட்டு என்னால் முடிந்தவரை அதிவேகமாக வியர்வை ஒழுக, பெருமூச்சு வாங்க,கதவை நோக்கி ஓடிவந்தேன். ஆனால் கதவு நன்றாக சாத்தப்பட்டு விட்டது. எனது நெஞ்சை துக்கம் நிரப்ப அங்கேயே நகரின் எல்லையில் படுத்து மண் தரையைக் கடிக்க ஆரம்பித்தேன். அன்றிரவை அங்கேயே கழித்தேன். மறுநாள் பொழுதும் புலர்ந்தது. இனியும் என் எஜமானனிடம் போகக்கூடாதென முடிவு செய்துகொண்டேன்.

[வேலையை விட்டு வேற்றூருக்கு ஓடிவிடத் தீர்மானித்த ரூஸோ தன்னுடைய சிற்றப்பன் மகனுக்கு விவரம் சொல்லியனுப்பினான். பால்யபிராயத்தில் ஒன்று போலச் சமமாகவும், உயிர் தோழனாகவும் பழகிய அவர்களிடையில் இப்போது சமநிலை இல்லை; ஏற்றதாழ்வுகள் அவர்களுக்கிடையில் குடிபுகுந்து விட்டன. சிற்றப்பன் மகன் அவனுடைய தாயினால் உயர்ந்த இடத்துப் பிள்ளையாக வளர்க்கப்பட்டிருந்தான். ரூஸோவின் நிலை கீழ்த்தரமான கற்றுக்குட்டி வேலையாள்தானே? இப்பொழுது அந்த இளம் யுவன் ரூஸோவுடன் பழகுவதை அவனுடைய பெற்றோர் மிகவும் கேவலமானதாகக் கருதினார்கள். ரூஸோவின் ஆதரவற்ற, நிராதரவான நெருக்கடியான சமயத்தில் அந்தத் தோழனும் அதிகமாகக் கண்ணீர் சிந்தவில்லை; சற்றும் வருத்தப் படவுமில்லை. மிக அற்பமான பரிசுகளை மட்டும் கொடுத்தான். அவற்றில் சின்னஞ்சிறு கத்தி ஒன்றும் இருந்தது. வழியில் ஒரு வேளை தேவைப்பட்டால் அந்தக் கத்தியினால் தன்னை தற்கொலை செய்து கொள்ளலாம் என்று எண்ணிக்கொண்டான் ரூஸோ! இந்தப் பிரிவுக்குப்பின்னர் அந்தப் பால்ய நண்பனைத் தனது வாழ் நாளில் ஒருமுறைகூட சந்திக்கவேயில்லை ரூஸோ. 'நல்ல எஜமானன் எனக்குக் கிடைத்திருந்தால் நான் நல்லவனாக, அமைதியானவனாக வாழ்ந்திருப்பேன்' என்ற பெருமூச்சுடன் தன் சுயசரிதையின் முதல் அத்தியாயத்தை முடிக்கிறான் ரூஸோ]

[பதினாறு வயதுள்ள ரூஸோ எங்கே செல்லுவது என்று தெரியாமல் புறப்பட்டுவிட்டான். அந்தஸ்து, பணம், தொழில் அனுபவம், பிழைக்கக்கூடிய வழிவகைகள் இவையாவும் இல்லாமல், தாழ்ந்து, கீழ்ப்படிந்து–வளைந்து கொடுக்கும் சுபாவமும் இல்லாத ரூஸோ, உலகத்தை நோக்கிப் புறப்பட்டுவிட்டான். அடக்கியாளும் எஜமானனிடமிருந்து விடுபட்டுப் புறப்பட்டு விட்டோம் என்ற சுதந்திர உணர்ச்சி ஒன்றுதான் அவனது மனதில் எதிர்கால நம்பிக்கைகளை எழுப்பி நின்றது. அது 1728–ம் வருஷம் மார்ச் மாதம் 15–ம் தேதி. இனி இந்த விசாலமான உலகத்தில் பேரும்புகழும் புதையலும் எடுக்கலாம், இந்த உலகத்தைக் கவர்ந்து விடலாம், என்றெல்லாம் மனக் கற்பனைகளுடன் நடந்து கொண்டிருந்தான் ரூஸோ. ஆனால் இந்தப் பரந்த உலகம் எள்ளத்தனையும் அவனை ஏறெடுத்துப் பார்க்கவில்லை. பசியுடனும், ஏமாற்றத்துடனும் அவன் நடந்து செல்லவேண்டியிருந்தது. சில நாட்களுக்குச் சுற்றியலைந்துவிட்டுக் கடைசியில் இத்தாலியைச் சேர்ந்த கான்பிக்னன் எனும் பட்டினத்தை அடைந்தான். அந்த நகரில் சீர்திருத்த மதமான புராடெஸ்டன்ட் பிரிவிலிருந்து மக்களைப் பழைய மார்க்கமான ரோமன் கத்தோலிக்கப் பிரிவுக்கு மாற்றும் மதமாற்று இயக்கம் மிக மும்மரமாக நடைபெற்றுக் கொண்டிருந்தது. ரூஸோ பரம்பரை பரம்பரையாகப் புராடெஸ்டன்ட் மதப்பிரிவைச் சேர்ந்தவன். ஆனால் பிழைக்க முடியாத

போது மதத்தால் என்ன பிரயோஜனம்? அந்நகரிலிருந்த ம. டி'பான்ட்வெர் என்ற ரோமன்கத்தோலிக்கப் பாதிரியார் அனாதையான ரூஸோவை தமது இல்லத்திற்கு அழைத்துச் சென்று நல்ல உணவு கொடுத்தார். அவர் காட்டிய அன்புப் பரிவில் மயங்கிவிட்டான் ரூஸோ. அவரோ வீட்டை விட்டு ஓடிவந்துவிட்ட இளைஞனை அவனின் தாய்தந்தையரிடம் அனுப்ப நினைக்காமல் அவனின் மதத்தை மாற்றத் திட்டமிட்டார். ரூஸோவுக்கு மதம் மாற்றிக்கொள்ளும் நோக்கம் இல்லை; விருப்பமுமில்லை. ஆனால் யாராவது ஒருவர் தன் மீது அன்பு செலுத்தினால் உடனே அதற்காக எதையும் செய்யக்கூடிய சுபாவம் அவனுக்கு. அவனின் பசி; பராரி நிலை, — இவை மத மாற்றத்துடன் மாறி, தனக்குப் பெரும் புதையல் கிடைத்து விடுமென்று கற்பித்துக்கொண்டான்.]

நான் அவரின் அன்பில் மயங்கினேன். மரியாதை செய்து அவருக்குக் கீழ்ப்படிய இசைந்தேன்; பாதையை விட்டு விலகிப் போன ஓர் ஆதமாவை மீண்டும் கோவிலில் சேர்க்க எண்ணினார் போலும் "கடவுள் உன்னை அழைக்கின்றார்; அன்னெஸி என்ற ஊருக்குப் போ; அங்கே டி'வாரென்ஸ் சீமாட்டி என்ற, மிகவும் தரும சிந்தையுள்ள பெண்மணி ஒருத்தி இருக்கிறாள். தவறான மார்க்கத்திலிருந்து அவள் திருத்தப்பட்டுக் காப்பாற்றப் பட்டது போலவே, மற்றவர்களையும் மார்க்கம் மாற்றக்கூடிய வசதியான நிலையை அரசபிரான் அவளுக்கு அளித்துள்ளார்." என்றார் அந்தப் பாதிரியார். [புதியதாக மதம் மாற்றப்



வாரென்ஸ் சீமாட்டி

பட்ட அந்த புண்ணியவதி ரூஸோவுக்குத் தங்குவதற்கான இடமும், ஆதரவும், அவனுடைய மதக் கல்விக்குத் தேவையான வசதியும் செய்துக் கொடுப்பாள் என்று சொல்லி, அவனை மிகவும் வற்புறுத்தி அவளுடைய ஊருக்கு அனுப்பிவைத்தார் பாதிரியார்.]

அப்பொழுது நான் பதினறு வயதுப் பருவத்தின் மத்தியில் இருந்தேன். நல்ல கட்டுக் கோப்பான தோற்றம். பிறவி சங்கோஜியான நான் நேரே அந்த சீமாட்டியைக் கண்டுபேச தைரிய மற்று அவளின் நல்லெண்ணத்தைச் சம்பாதிக்கும் முறையில் அழகான கடிதமொன்றைக் கவர்ச்சிகரமான கவிதை நடையில் எழுதினேன். இந்தக் கடிதத்துடன் அந்தப் பாதிரியார் கொடுத்த சிபாரிசுக்கடிதத்தையும் வைத்து எடுத்துப்போனேன். நான்சென்ற சமயத்தில் அவள் தனது வீட்டில் இல்லை. அன்று ஞாயிற்றுக் கிழமையான காரணத்தால் மாதா கோயிலுக்குப் புறப்பட்டு விட்டிருந்தாளாம். நான் ஆலயத்தை நோக்கி நடந்தேன். வழியில் அவளைக் கண்டேன்; அவளை முதன்முதலாகச் சந்தித்த இடத்தை—ஆம்! அந்த இடத்தை என்னல் ஒருக்காலும் மறக்கவே முடியாது. அதே இடத்தை அநேக முறை எனது கண்ணீரால் நனைத்திருக்கிறேன்—அதே இடத்தை என் முத்தங்களால் நிரப்பி யிருக்கிறேன். அந்த ஆனந்தமான இடத்தைச் சுற்றிலும் தங்க வேலியிட ஆசைப் படுவேன். இந்தச் சீமாட்டி யாரோ சமயப்பற்றுள்ள கர்நாடகமான ஒரு கிழவியாயிருப்பாள் என்று என் மனதில் உருவகப் படுத்தி வைத்திருந்தேன்—ஆனல் அதற்குப் பதிலாக கவர்ச்சிகரமான மனோகர முகம்—அழகான நீல விழிகள்—அன்பு கனியும் பார்வை—கண்ணைப் பறிக்கும், ஒளியை உருக்கி வார்த்தது போன்றிருக்கும் ஜொலிப்பான மேனி, மயக்கியிழுக்கக்கூடிய கிளிஞ்சல்நிறக் கழுத்துவிளிம்புகள்—இவற்றையுடைய ஒருமங்கையையே கண்டேன்! அந்த ஒரு கணத்திலேயே நான் வசமிழந்து அவளுடையவனகி விட்டேன். நான் நடுங்கும் கரங்களுடன் கொடுத்த கடிதங்களை அவள் தன் மலரதரங்களில் மாய முறுவல் தவழ வாங்கிப் படித்து, "நல்லது குழந்தாய்; இந்த வயதில் நாடோடியாக அலைகின்றயா? என்ன பரிதாப நிலை!" என்று சொல்லிவிட்டு, தான் ஆலயத்திற்குப் போய்வருவதாயும், என்னை அவள் இல்லத்திற்குச் சென்று காத்திருக்கும்படியும், தான் சற்று நேரத்தில் வந்து விடுவதாகவும் சொன்னள். [இவளுக்காக நூறு முறை வேண்டுமானலும் மதம் மாறலாம் என்று ரூஸோ நினைத்தான். அப்பொழுது அவனுக்கு வயது பதினறு; பணக்கார சீமாட்டியான வாரென்ஸ் இருபத்தியெட்டு வயதே உள்ள அழகான விதவை. புராதனமான உயர் குடும்பத்தில் பிறந்த அவள் இளமையிலேயே பிரபு ஒருவரின் குமாரனுக்கு மணம் செய்விக்கப்பட்டாள். இந்த மணத்தின் விளைவாக அவளுக்குக் குழந்தையே பிறக்கவில்லை; குடும்ப வாழ்க்கையிலும் சுகத்தைக்

காணவே முடியவில்லை. அதனால் விக்டர் மன்னர் பிரானே அவள் சந்தித்து, அரசனை நம்பிப் புருஷனைக் கைவிட்ட கதைபோல், தன் கணவனைக் கைவிட்டு, நாட்டையும் வீட்டையும் துறந்து ஓடி வந்தாள். கத்தோலிக்க மதத்திற்கு மதம் மாறி அதற்காக வருஷாந்திரம் 1500 லிவர்ஸ் பணமும் அடைந்து வந்தாள். அவளின் வாழ்க்கையும் ஏறக்குறைய ரூஸோவின் வாழ்க்கையைப் போலவே இருந்தது. ரூஸோவைப் போலவே அவளும் பிறவியில் தன் தாயை இழந்தவள். வளர்ந்தவரிடமோ, பிறரிடமோ, எஜமானர்களிடமோ அவள் எதையுமே கற்றுக் கொள்ளவில்லை; தனது காதலர்களிடந்தான் எல்லாவற்றையும் கற்றுக்கொண்டாள்! அவளது வாழ்க்கையின் போக்கில் அநேக தடவைகள் ஏமாற்றத்தைக் கண்டவள்; மிகவும் துயர்பட்டவள்; அனுபவம் நிறைந்தவள்; திறமை மிகுந்தவள்; தாராள மனமும், சரள குணமும் கொண்டவள்—இவை எல்லாவற்றுக்கும் மேலாக அவள் வெளிப்படையாகப் பேசும் வெகுளிப்பெண். அவளிடம், ரூஸோ தன் முதல் பேச்சிலே, முதல் பார்வையிலே மனதைப் பறி கொடுத்து விட்டதாகக் கூறுகிறான். அவளுடன் நடத்திய காதல் வாழ்க்கையை—அதன் விசித்திரமான போக்குகளையும் அவன் விவரிக்கின்றான். ரூஸோ மதம் மாறும் முன்பு அவன் தந்தையிடம் சென்று சமாதானம் கோரும்படி அவள் கூறியது கேட்டு அவன் தயங்கினான். இந்தக்காலத்தில் அவனுடைய தந்தையின் மனப்போக்கை ஊகித்த ரூஸோவின் மனம் புண்பட்டது. தந்தை தனது இரண்டாவது மனைவியை மணந்து அவளுடன் வாழ்ந்து கொண்டிருந்தார். இதற்காக அவரின் குடும்பச் செலவுக்குப் பணம் தேவைப்பட்டது. இறந்துபோன முதல் மனைவியின் சொத்துக்கள் குழந்தைகளுக்குத்தான் சேரும் என்றாலும் பிள்ளைகள் பிரிந்து போயிருக்கும் காலங்களில் சொத்தின் வருமானத்தைத் தந்தையே அனுபவித்து வரலாம். இதற்காகத்தான் ரூஸோவை தம்முடன் வைத்துக்கொள்ள அவன் தந்தை முயலவில்லை என்று உணர்ந்த அவனுக்கு, மனித வாழ்க்கையின் அடிப்படைத் தத்துவத்தைக்கண்டே கசப்புத் தட்டிவிட்டது. பிறந்த உலகில் அவனுக்கு இருந்த கடைசி உறவும் முறிந்துபோனது. ஆனால் தன் பிழைப்பின் வழி? மதம் மாறினால் சுவர்க்கபோகம் சித்திக்கும் என்று எண்ணினான். அதற்காக மதம் மாறும் சடங்கிற்காக அவன் சீமாட்டி சாப்ரன் என்பவளுடனும் அவள் புருஷனுடனும், டூரின் பட்டினத்திற்குப் புறப்படவேண்டும் என்றும் அங்கே அவனுக்கு வயிற்றுக்கும் ஒரே சமயத்தில் உணவு கிடைத்துவிடும் என்றும் கூறினர். அதன்படியே அவர்கள் மூவரும் அன்னெஸியைவிட்டு டூரின் பட்டினம் நோக்கிச் சென்றனர். இப்படியாகப் போகும் சமயத்தில், வழிப்பயணத்தில் சாப்ரன் சீமாட்டி தன்னிடத்தில் மிகவும் நப்பாசை வைத்தாள் என்றெல்லாம் ரூஸோ வர்ணிக்கிறான். இதை நாம் நம்பாவிடினும், வாரென்ஸ் சீமாட்டி

அன்பின் காணிக்கையாகக் கொடுத்திருந்த வெள்ளி ரிப்பன் ஒன்றை சாப்ரன் சீமாட்டி திருடிக்கொண்டாள் என்பது மட்டும் உண்மையாயிருக்கலாம். அந்தப் பிரயாணத்தின்முடிவில், டூரின்பட்டினத்தில் ஞான உபதேசம் படிப்பவர்களுடன் ஓர் மடாலயத்தில் ரூஸோ தங்கவேண்டியிருந்தது. அங்கும் ஒரு இளம் கன்னிகையின் அழகில் தன் மனதைப் பறிகொடுத்துவிட்டான் ரூஸோ. ஆனால் மடத்தின் கடுமை நிறைந்த கட்டுப்பாடுகளால், அவளைச் சந்தித்துப்பேசமுடியவில்லை. அந்த மடத்தில், மனிதனின் புலனடக்கத்தைப்பற்றிப் பிரமாதமாக உபதேசம் செய்யும் முற்றும்துறந்த குருமார்களிடையே,—அவன் கண்ட, இயற்கைக்கு முரணான சில அருவருப்பான, கீழ்த்தரமான செயல்களைக் கண்டு அவன் மிரண்டேபோனான். ஆயினும் இப்படியாக 1728-ம் வருஷம் மார்ச்சு மாதம் 23-ம் தேதி அவனை மதம் மாற்றும் சடங்கு நடைபெற்றது.]

மதமாற்றத்தால் எனக்கு நிறைய அதிர்ஷ்டம் வரும் என்று எதிர்ப்பார்த்திருந்த நான், துன்பங்கள் நிறைந்த படுகுழியில் விழுந்து விட்டிருப்பதை யுணர்ந்தேன். மதமாற்றம் நடைபெற்ற அன்று காலையில் சிறந்த அரண்மனையின் அரச போகத்தில் புரளப்போகிறேன் என்று நினைத்துக் கொண்டிருந்தேன். ஆனால் அன்றிரவு சாக்கடையின் ஓரத்தில் உறங்கவேண்டிய நிர்க்கதி உண்டானது கண்டு, கண்ணீர் சிந்தாமல் மனதைர்யம் கொண்டேன்.

[மதமாற்றத்தின் சமயத்தில் மதம் மாறுபவர்களுக்கு அங்கு கூடியிருப்போர் சில காசுகளைத் தர்மம் கொடுப்பது வழக்கம். இதுபோல அன்று ரூஸோவுக்கு இருபது காசுகள் வரை கிடைத்தன; அவையும் வெகு விரைவில் தீர்ந்து விட்டன. பிறகு ரூஸோ வழக்கம்போலவே வேலை கிடைக்காமல் பிழைக்க வழியின்றிப் பசியுடன் சுற்றித் திரிந்தான். இவனது பரிதாப நிலையைக் கண்டு மனமிரங்கி மேடம் பேஸில் என்ற சீமாட்டி அவனைத் தன்னிடத்தில் வேலைக் கமர்த்திக்கொண்டு அவனுக்கு உணவு கொடுத்து வந்தாள். அந்த எஜமானி இளமையான பெண்மணி. அவளின் கணவன் அவளைத் தனது குமஸ்தாவின் மேற்பார்வையின் கீழ் விட்டுவிட்டு வெளியூருக்குப் போயிருந்தான். அவளின் அன்பு நிறைந்த உள்ளத்திற்கு அடிமையாகிப் போனான் ரூஸோ. அவர்களிடையில் காதல் இருப்பதாகச்சந்தேகம் கொண்ட அந்தக் குமாஸ்தா, அவள் கணவன் ஊர்திரும்பியதும் தன் சந்தேகத்தை வெளிப்படையாகச் சொல்லிவிட்டான்—ரூஸோவும் அந்த வீட்டிலிருந்து வெளியேற்றப்பட்டு விட்டான். ஆனால் அந்தப் பேஸில் சீமாட்டி செய்த சிபாரிசின் பேரில், மேடம். டி'வெர்செலிஸ் என்ற சீமாட்டியிடம் எடுபிடி வேலைக்கு அமர்ந்தான். அந்த வீட்டில் நல்ல சுகவாழ்வை வாழ்ந்து வந்து

கொண்டிருந்த ரூஸோவின் துன்பங்கள், அந்த சீமாட்டியின் மரணத்திற்குப் பிறகு மீண்டும் தலையெடுத்தன. எஜமானி திடீரென்று இறந்து போனதால் வீட்டிலிருந்த பொருள்களெல்லாம் உறவினரால் சரிபார்த்துக் கொள்ளப்பட்டன. அப்போது, இறந்த சீமாட்டியின் வெள்ளி ரிப்பன் ஒன்றை ரூஸோ திருடி அங்குள்ள அழகிய சமையற்காரி ஒருத்திக்குக் கொடுக்க வைத்திருந்தான். ஆனால் விசாரிக்கப் பட்டபொழுது ரூஸோ தனது குற்றத்தை ஒப்புக் கொள்ளவில்லை. சமையற்காரிதான் அதைத் திருடித் தன்னிடம் கொடுத்ததாக ஒன்றுமறியாத அவள் மீது பழியைச்சுமத்தினன். தண்டனைக்கு அஞ்சியல்ல, அவமானத்திற்கு அஞ்சியே அவ்வாறு செய்தான். இதனல் ரூஸோவும் சமையற்காரியும், இருவருமே, வேலையிலிருந்து விலக்கப் பட்டு விட்டனர். ரூஸோ செய்த இந்த ஒரே தவறு, அவனது வாழ்வு முழுமையிலும் நெஞ்சை உறுத்தி வந்ததென்றும் தன் குற்றங்கள் அனைத்தையும் ஒப்புக்கொண்டு சுயசரிதை எழுதும் படியாக அந்தச் சம்பவந்தான் தூண்டியதென்றும் ரூஸோ கூறுகிறுன்.]

அந்தச் சீமாட்டியின் மாளிகைக்குள் எந்த நிலைமையில் நுழைந்தேனே அதே நிலைமையில் வெளியேறினேன். என் இளமையும், தேக நிலையும், வேலையற்ற சோம்பலும் மீண்டும் என் சுபாவத்தைத் தொல்லைப் படுத்தலாயின...நான் அழுதேன்; பெருமூச்சு விட்டேன்; ஆனந்தம் என்றால் என்ன என்ற எண்ணமே இல்லாமல் அதற்காக ஏங்கினேன்... வாழ்க்கையில் நிறைவை விரும்பினேன்... என் கொதிப்பேறிய ரத்தம் கன்னிப் பெண்களையும மங்கையரையும் என் மூளைக்குள் நிரப்பியது. ஆனல் ஆண் பெண் உறவு என்றால் என்ன என்ற அறியாமையால், வெறும் கற்பனைகளிலே திருப்தியடைய வேண்டியதாயிற்று.

[இந்தச் சந்தர்ப்பத்தில் இயற்கையாகவே சங்கோஜியான ரூஸோ, எந்தப் பெண்ணாவது வலியவந்து தனக்குக் காதற் கலையைக் கற்றுக்கொடுக்க மாட்டாளா என்று ஏங்கினன்.]

[இவ்வாறு ஊர் சுற்றித் திரிந்த ரூஸோ, பல இடங்களிலும் வேலைக்கு அலைந்து கௌவோன் என்ற ஒரு பிரபுவின் மாளிகையில் எடுபிடியாளாக அமர்ந்தான். அந்த மாளிகையில் அவன் கருத்தில் பதிந்த ஒருத்தி, அவனை ஏறெடுத்தும் பாராமல் அந்தஸ்தை நினைவூட்டியபோது மனம் நைந்தான். ஆனல் அவனுக்கு அங்கே நல்ல உணவும் முன்னேற்றத்திற்குரிய வாய்ப்பும் கிடைத்திருந்துங்கூட, தன்னை முதன் முதலில் ஆதரித்த வாரென்ஸ் சீமாட்டியைக் காணவேண்டும் என்று திடீரென்று ஓர் ஆசை பிறக்கவே, வேண்டுமென்றே அவமானகரமாக நடந்துகொண்டு வேலையைவிட்டு நீக்கப்பட்டு, அன்னெஸி நகருக்குக் கால்நடையாகவே புறப்பட்டு வந்தான். வாரென்ஸ் சீமாட்டி அவனை

அன்புடன் வரவேற்று அடைக்கலம் தந்து, தன் வீட்டிலே தங்கவும் சொன்னாள். "பிறர் என்ன வேண்டுமானாலும் சொல்லட்டும். இவனைக் கருணைக் கடவுள் என்னிடம் திருப்பி யனுப்பியிருப்பதால், இவனை என்றென்றும் கைவிடுவதில்லை யெனத் தீர்மானித்துவிட்டேன்!" என்றாள். அவர்களுக்கிடையே உள்ள தொடர்பு மிகவும் விசித்திரமானது அவளிடம் அவன் சிறு சம்பளம் பெற்று வந்ததின் மூலம் அவன் ஊழியனாகவே இருந்து வந்தான் என்றாலும், அவனுடைய கல்விக்குப் பணம் கொடுத்தாள்; சங்கீதம் பயிற்றுவித்தாள்; அவனுடைய நலன்களை யெல்லாம் கருத்தோடு கவனித்தாள். அவளுக்கும் ரூஸோவுக்கும் முதல் சந்திப்பிலேயே மிகவும் நெருங்கிய வாஞ்சை ஏற்பட்டுவிட்டது. அவனை, அவள் 'என் சின்னவனே' என்பாள்; அவனோ 'அம்மா' என்றே கூப்பிடுவான். இவர்களுக்கிடையே படிப்படியாகக் காதல் ஏற்பட்டதென்றாலும், அந்தக் காதலில் 'தாய்மை உணர்ச்சி'யையே கடைசிவரை கண்டுவந்ததாக ரூஸோ குறிப்பிடுகிறான். அவளை விட்டு வெளிக்கிளம்பி அவன் அடிக்கடி பல வேலைகளுக்கும் சுற்றித் திரிவான்; எங்கெங்கோ அலைந்துவிட்டுக் கடைசியில் அவளிடமே வந்து சேர்வான்; அவ்வளவுக்கு அவனுடைய கடைசி நம்பிக்கையாக அவள் விளங்கிவந்தாள்.]

1731—41. [இந்தக் காலத்தில் ரூஸோ பாதிரியாகப் பயிற்சி பெற முயன்றான்; சங்கீதம் கற்று சங்கீத ஆசிரியனாக முயன்றான்; இரண்டிலும் பலனில்லை; பரிகசிப்புதான் கிட்டியது. பிறகு பாரீஸ் பட்டினத்தில் ஓர் ராணுவ உத்தியோகஸ்தரிடம் காரியதரிசியாக வேலைபார்த்து வந்தான். ரூஸோவின் இருபதாவது வயதில் வாரென்ஸ் சீமாட்டி ஊர்திரும்பிவிட்டாள் எனக் கேள்விப்பட்டதும் அவளைச் சந்திப்பதற்காக ஓடோடி வந்தான். 1732 ம் வருடம் சவாய் பட்டினத்திற்கு வந்துசேர்ந்தான். நடந்தே திரும்பி வந்தான். வழியில் உள்ள கிராம மக்களின் இல்லங்களில் தங்கியும் மரங்களின் பசிய நிழல்களில் உறங்கியும், சுத்தக் காற்றைச் சுவாசித்தும் கவலையற்றவனாகத் திரிந்துவந்தான். அப்போது ரூஸோவுக்கும் வாரென்ஸ் சீமாட்டிக்கு மிடையில் ஏற்பட்ட சந்திப்பு பூரணமான காதலாக மலர்ந்தது.

ஒரு சமயம் ரூஸோ பலத்த ஜுரமாகக் கிடந்து பிழைத்தான். 1738 ம் வருஷம் அந்தச் சீமாட்டி ரூஸோவின் உடல் நலம் தேறுவதை உத்தேசித்து லீசார் மெட்டிஸ் என்ற கிராமந்திர மாளிகையில் அவனைத் தங்கச்செய்தாள்.]

இந்தச் சமயத்தில் மீண்டும் என் வாழ்க்கையில் சிறிய இன்பமான நாட்கள் ஆரம்பமாயின; நான் வாழ்ந்தேன் என்று சொல்லும் முறையில் அமைதியும் சாந்தமும் நிறைந்த வாழ்க்கையைத் துவங்கினேன்.

[இங்கு தங்கியிருந்த காலம் ரூஸோவின் வாழ்விலேயே மிகவும் அமைதியான காலமாகும். வான சாஸ்திரம் முதலிய விஷயங்களைப் பற்றியும், இதர விஷயங்களைப் பற்றியும் புத்தகங்கள் படித்து வந்தான். இயற்கைத் தேவியின் மடியில் அமர்ந்து அந்தப் புத்தகங்களைப் படிப்பான். படித்து முடித்த பிறகு அந்தப் புத்தகங்களைப் படித்த இடத்திலேயே போட்டு விட்டு வந்துவிடுவான். இந்தச் சமயத்தில் வாரென்ஸ் சீமாட்டிக்கும் ரூஸோவுக்குமிருந்த தொடர்பு குறைந்து கொண்டுவந்தது. ரூஸோ தன் உடல் தேறுவதற்கு வேற்றூர் சிகிச்சைக்குப் போக வேண்டுமெனத் திட்டமிட்டான். அந்தச் சிகிச்சைக்கு லார்னேஜ் என்ற வேறொரு சீமாட்டியின் காதலும் தேவைப்படுகிறதோ என வாரென்ஸ் சீமாட்டி சந்தேகப்பட்டாள். அவ்வளவுதான்! அவளுடைய காதல் முற்றுப்புள்ளி அடைந்து விட்டது. ரூஸோ வேற்றூரில் அலைந்து விட்டுவாரென்ஸ் சீமாட்டியிடம் திரும்பி வந்தபோது தன் ஸ்தானத்தை இன்னொருவன் பிடித்துக் கொண்டிருப்பதைக் கண்டான். சீமாட்டி, அவனுக்கு வேறொரு குடும்பத்தில் உபாத்தியாயர் வேலை வாங்கிக் கொடுத்துவிட்டு நழுவிவிட்டாள். ஒரு வருஷத்திற்குப் பிறகு பரஸ்பர அதிருப்தியுடன் அந்த வேலையையும் வாரென்ஸ் சீமாட்டியையும் உதறிவிட்டு பாரீஸ் நகருக்குப் புறப்பட்டான் ரூஸோ. அவனுடைய வாக்கின்படி அவனுடைய உபயோகமற்ற நாட்கள் முடிந்து மேதைக்குரிய காலம் தொடங்கியது.]

**1741—49.** நான் 1741-ம் வருஷம் பாரீஸ் பட்டினத்திற்கு வந்து சேர்தேன். என்னிடம் பதினைந்து பொற்காசுகள் தான் இருந்தன. நான் எழுதிய நவீன சங்கீத முறை பற்றிய சிறு கட்டுரை என்னிடம் இருந்தது. என்னிடம் இருந்த சிபாரிசுக் கடிதங்களை உபயோகப் படுத்திக்கொள்ள நினைத்தேன். கழகத்தாரையும் இதர மனிதர்களையும் நான் அடிக்கடி சந்தித்து வந்த காரணத்தால், பாரீஸ் நகரின் தலை சிறந்த எழுத்து மன்னர்களுடன் பழகும் சந்தர்ப்பம் எனக்கு வாய்த்தது. நானும் என் நவீன முறை சங்கீதத்தால், சங்கீதக் கலையில் புரட்சியைப் புகுத்திப் புகழின் சிகரத்தை எட்டிப்பிடித்து விடலாம் என நினைத்துக் கொண்டிருந்தேன். மூன்றுமாத காலத்துக்கு எங்கும் வெளியே போகாமல் என் அறைக்குள்ளிருந்து கொண்டு என் சங்கீத முறையைப் பற்றிய சர்ச்சை நடத்திக் கொண்டிருந்தேன். ஆனால் நான் எழுதிய கட்டுரையை பிரசுரிக்க எந்த பிரசுரகர்த்தனும் எனக்குக் கிடைக்காமற் போனான். கழகமோ எனது நவீன சங்கீத முறையைப் பாராட்டி, ஒரு பத்திரம் வழங்கியது. ஆனால் அந்தப் பாராட்டுப் பத்திரம் எனது சங்கீத முறையைப் பாராட்டியதே தவிர, இந்த முறை புதியதுமல்ல, இதனால் ஒருவித பிரயோசனமும் இல்லை என்று குறிப்பிட்டிருந்தது. [இந்தக் காலத்தில் வேலை கிடைக்காமல் திண்டாடிய ரூஸோவை, தோல்வி மேல்

தோல்வியாகத் தொட்டணைத்துக் கொண்டிருந்தது.] நான் 1743-ம் வருஷம் வெனிஸ் பட்டினத்தில் பிரெஞ்சு அரசாங்கத்தின் ஸ்தானிகரிடம் காரியதரிசி வேலை ஏற்கச் சென்றேன். என்னை அந்த ஸ்தானிகர் மிகவும் கேவலமாக நடத்தி வந்தார். எனது கடமைகளைச் சரிவரச் செய்யவும் அவர் அனுமதிப்பதில்லை. காரியங்கள் மிகவும் மோசமான நிலையை அடையவே, அவரிடம் நேரே சென்று ராஜீனமா செய்து விட்டதாகச் சொல்லி விட்டு அங்கிருந்து புறப்பட்டு விட்டேன். திரும்பி அங்கு செல்ல மனமில்லாமல், நான் மீண்டும் பாரீஸ் பட்டினத்தை வந்தடைந்த பிறகு ஸெயிண்ட் குவென்டின் ஹோட்டலில் முன்பு போலவே வசிக்க ஆரம்பித்தேன். என் மனதிற்குச் சாந்தி என்ற பொருளை தேடித்தந்த ஒரே சம்பவம் இங்குதான் நிகழ்ந்தது. எனது ஹோட்டலின் எஜமானிக்கு உதவி செய்ய அவருடன் ஆர்லியன்ஸ் பட்டினத்தைச் சேர்ந்த இருபத்து மூன்று வயது நிரம்பாத ஒரு சமையற்காரி இருந்து வந்தாள். அவள் பெயர் திரேஸா லிவாசியர் (*Therese Le Vasseur*) ஆகும். நல்ல குடும்பத்தைச் சேர்ந்தவள் அந்த பெண் முதன் முறையாக நான் அவளைச் சந்தித்தபோது மேஜையில் உணவு சாப்பிட்டுக் கொண்டிருந்தேன். அவளின் மரியாதையான பாவனையும் அச்சமும் நாணமும் அவள் அழகை அதிகரிக்கச் செய்தன. அவளது அகிய கண்களில் வீசிய அன்புப் பார்வை என்னை முழுவதும் ஆட்கொண்டுவிட்டது. அவள் என் எஜமானியால் அடிக்கடி துன்புறுத்தப்பட்டு, மிகவும் வெறுமையான வாழ்க்கயை அங்கு வாழ்ந்து வந்து கொண்டிருந்தாள். நான் அவளிடம் நடந்துகொண்ட முறையிலிருந்து, அவளின் நிலைகண்டு மனமிளகும் நர்மையாளன் என்று என்னைப்பற்றி எண்ணிக் கொண்டாம்டே போலும். நான் அவளை மறக்க மாட்டேனென்றும், அவளை என்னால் மணந்துகொள்ள முடியாது என்றும் சொன்னேன். என் நேர்மையுள்ளத்தில் நெகிழ்ந்த இன்பம் அவளைமயக்கியது போலும். ஒரு நாள் அவள் கண்ணீர் நிறைந்த கண்களுடன் என்னிடம் வந்து, தன் பருவத்தின் முதல் பூரிப்பில் தன்பெண்மையை இழந்துவிட்டதாகவும், அவ்ளின் அறியாமையை பயன்படுத்தி யாரோஒருவன் அவளது கன்னித்தன்மையைப் பறித்துவிட்டதாகவும் என்னிடம் சொன்னாள். உடனே மகிழ்ச்சிப் பெக்கால் நான் கூச்சலிட்டு, " கன்னித்தன்மையா! பாரீஸ் அதற்கு சரியான இடந்தான்! இருபதுதான் கன்னித் தன்மையை எதிர்பார்ப்பதற்கு சரியான வயது! என் திரேஸா! உன்னை என் உடமையாக்கிக்கொண்ட பிறகு என் மகிழ்ச்சிக்கு எல்லையே கிடையாதே! நீ தேகாரோக்கியத்துடன், பெண்மையின் நற்குணங்களைக் கொண்டிருக்கிறாயே! வேறு எனக்கு என்ன வேண்டும் என்றேன்!

முதலில் பொழுது போக்குக்காக ஒரு பொருளைத் தேடிய நான் என்னிடம் நெருங்கிப் பழகும் ஓர் பொருள் கிடைத்து

விட்டது கண்டு மகிழ்ச்சிக்கடலில் ஆழ்ந்தேன். தனிமையிலிருக்கையில் என் உள்ளத்தில் இருந்துவந்த பள்ளம் இப்பொழுது அவளுடைய கூட்டுறவால் அடைபட்டுவிட்டது.

[அந்தத் திரேஸாவையே தன் வாழ்க்கைத் துணைவியாக ஏற்றுக்கொண்டு மரணபரியந்தம் அவளுடைய அன்பில் தோய்ந்து கிடந்தான் ரூஸோ. திரேஸா அப்படியொன்றும் அபூர்வமான சுந்தராங்கியல்ல. அவனுடைய வாக்கின் பிரகாரம், அவள் 'அவலட்சணமானவள்; படிப்பறிவற்றவள்; அசடானவள்; நிந்திக்கப்படக்கூடிய தாய், ரூஸோவின் அழகிற்கும் அறிவிற்கும் உணர்ச்சிக்கும் அருகில் வரக்கூட லாயக்கற்றவள். ஆயினும் அவளிடம் எந்தக் கவர்ச்சியைக்கண்டு ரூஸோ மயங்கிக் கிடந்தான் என்று தீர்மானிப்பது சிரமமாகும். திரேஸா ஒன்றுமறியாதவள். அவளுக்கு ஒன்றையும் சொல்லிக் கொடுக்கவும் முடியாது. சரியாகவும் அவளுக்குப் பேசவராது. ஆனால் எல்லாவற்றிற்கும் மேலாக அவளுக்கு ரூஸோ மீது தூய அன்பு இருந்தது. வேறு எந்தப் பெண்ணிடமும் அவன் எதிர்பார்க்க முடியாத, எதிர்பார்க்கக் கூடாத பொறுமையையும், சாந்தத்தையும், கண்ணியத்தையும், ஆறுதலையும் அவளிடம் ரூஸோ கண்டான். ரூஸோவின் வாழ்க்கையில் அவனுடன் அன்புடன் பழகி நீண்டகாலம் வாழ்ந்த பெண் திரேஸா ஒருத்திதான் ஆவாள். ரூஸோ தன்னைக் கவனித்துக்கொள்ள ஒரு துணைவியின் கவனிப்பை நாடி நின்றான். அது திரேஸாவிடம் கிடைத்தது. அதனால் அவளுடைய பராமரிப்பில் கட்டுண்டு விட்டான். ஆனால் குடும்பச் செலவுகளைச் சமாளிக்க வழி? சிக்கனத்தை உத்தேசித்து, தனக்குப் பிறந்த குழந்தைகளையெல்லாம் அனாதைப் பிள்ளைகள் வளரும் விடுதியில் விட்டு வளரச்செய்தான். 1755-ம் வருடத்திற்குள் பிறந்த மூன்று குழந்தைகளையும் இப்படியே செய்து வந்தான்.]

"நான் குழந்தைகளை அனாதைப் பிள்ளைகள் வளரும் விடுதியில் விட்டு வைத்தது உண்மைதான்...........என் நிலைதான் உங்களுக்குத் தெரியுமே! என் அன்றாட உணவு சம்பாதிப்பதற்கு எத்தனையோ வேதனைகளில் உழல வேண்டியுள்ளது. இந்த நிலையில் என்னால் எப்படி ஒரு குடும்பத்தை வைத்து நடத்த முடியும்? எழுத்தாளனாக வேண்டிய எனக்கு எழுதும் சமயத்தில் சிந்திக்க உதவும் தனிமை, குடும்ப வாழ்க்கையின் மத்தியில் கிடைக்குமா? [முப்பத்துநான்கு வருடங்களுக்குத் திரேஸா வாழ்க்கைத்துணைவியாக ரூஸோவுடன் வாழ்ந்து அவனுக்கு வேண்டிய பணிவிடைகளையெல்லாம், சற்றும் மனம் கோணாமல் செய்து வந்தாள். அவள் பெரிய பொறுமைசாலி! அவளால் ரூஸோவின் எழுத்துக்கும் கருத்துக்களுக்கும் ஒருவித உற்சாகம் கிடைக்கவில்லை என்றாலும், ஆறுதல் கிடைத்தே வந்தது. அவளுடன் இருக்கும் பொழுது குடும்பச் செலவிற்காக ஓர் இசை நாடகத்தை எழுதினான் ரூஸோ.

இந்தச் சமயத்தில் ரூஸோவுக்கு அறிஞர் 'டிடேரோ'வின் நட்புக் கிடைத்தது. கலை, இலக்கியம், தத்துவம் முதலிய துறைகளைப்பற்றி இன்று பிரெஞ்சு மொழியில் ஒரு அகராதி இருக்கிறதென்றால் அதற்கு டிடேரோ தான் காரணம்; டிடேரோ கற்பனை சக்தி நிரம்பியவன்; நல்ல மேதாவி]... அப்போழுது டிடேரோ புரட்சிகரமான ஒரு நூலை வெளியிட்டதற்காக அரசாங்கத்தாரால் கைது செய்யப்பட்டு, பாரீஸ் பட்டினத்திற்குச் சிறிது தொலைவில் இருந்த விக்கென்னஸ் என்ற இடத்தில் தங்கியிருந்தான். ஒரு நாள் டிடேரோவைக் காண நான் நடந்து போய்க் கொண்டிருந்தேன். மத்தியானம் மணி இரண்டு இருக்கும். நான் சீக்கிரமாகப் போய்ச் சேர வேண்டும் என்று வேகமாக நடக்க ஆரம்பித்தேன். தெருவின் ஓரத்தில் இருந்த மரங்களோ எனக்கு நிழலைக் கொடுக்க மறுத்து விட்டன. மிகவும் களைப்படைந்து ஓர் இடத்தில் பேசாமல் படுத்து விட்டேன். என் கையில் ஒரு பிரெஞ்சுப் பத்திரிகை இருந்ததால் அதைப் படித்துக்கொண்டே போகலாம் என்று எழுந்து நடக்க ஆரம்பித்தேன். "கலைகளும், விஞ்ஞானமும் அபிவிருத்தி யடைந்திருப்பதால் ஒழுக்கம் உயர்வடைந்திருக்கிறதா? அல்லது வீழ்ச்சி யடைந்திருக்கிறதா?" என்ற கட்டுரை எழுதி 'டிஜோன்' கலைக் கழகத்திற்கு அனுப்புகிறவர்களுக்கு, சிறந்த கட்டுரைக்குப் பரிசு வழங்கப்படும் என்று அதில் இருந்த வரிகளை என் கண்கள் படித்தன. உடனே அக் கட்டுரையின் பெயர் என் மனதில் படிந்துவிட்டது. இந்த வார்த்தைகளைப் படித்ததிலிருந்து புது உலகம் என் கண்களுக்குத் தென்பட்டது; நான் ஒரு புது மனிதனானேன். எத்தனையோ புது எண்ணங்கள் என் மனதிலே நெகிழ்ந்தன; இரவில் உறக்கம் வராத சமயத்திலெல்லாம் இந்தக் கட்டுரையை எழுதிவந்தேன். படுத்துக்கொண்டே எண்ணங்களைப்பற்றி சிந்தித்துக்கொண்டேயிருப்பேன். இந்தக் கட்டுரை முடிந்த பிறகு அதை அறிஞர் டிடேரோவிடம் காண்பித்தேன். அதைப்படித்துவிட்டு அவர் அதைப் பெரிதும் பாராட்டி சில திருத்தங்களையும் சொன்னார். எனக்கு இந்தக்கட்டுரை வெற்றியைத் தேடித்தந்தாலுங்கூட எனது வாதம் அதில் முழுமையுடன் கோர்வையாக அமையவில்லை. என்னதான் ஒரு மனிதனுக்குத் திறமைகள் இயற்கையாக அமைந்திருந்தாலுங்கூட, எழுதும் கலையும் திறமையும் வெகு எளிதில் ஒரு மனிதனுக்கு வந்துவிடுவதில்லை.

[டிஜோன் கழகம் ரூஸோவின் கட்டுரைக்குப் பரிசு வழங்கியது. ரூஸோவுக்குப் பணமும் புகழும் செல்வாக்கும் ஒன்றாகத் தேடி வந்தன.]

1750—52: [பரிசுத் தொகையை வைத்துக் கொண்டு ரூஸோவும் திரேஸாவும் குடும்பம் அமைத்து வாழத் தொடங்கினார்கள். திரேஸாவின் தாயார் கொடுமைக்காரி. அவளுடைய

சகோதரன் திருட்டுப் புத்தியுள்ளவன். திரேஸாவின் குடும்பத்தினர் ரூஸோவின் மணவாழ்க்கையை, கள்ளக் காதல் என்று கூறி அவனிடமிருந்து பணம் பறித்து வந்தனர். ஆனால் ரூஸோவோ திரேஸாவின் தொடர்பை உதற முடியாமலிருந்தான். உலக சம்பிரதாயம், சமூகப் பழக்கவழக்கங்கள் முதலானவற்றிலிருந்து மாறுபட்ட வாழ்க்கை வாழவேண்டுமென்பதே ரூஸோவின் உள்ளத்தில் மூண்டெழுந்த அவா. கையிலுள்ள பரிசுப் பணத்தைச் சேமிக்கத் தெரியாமல் செலவழித்துத் தீர்த்ததும் மறுபடியும் வேலை வேட்டையில் இறங்கினான். பிராங்குவேயில் என்ற சீமான் கணக்கு வழக்குகளை எழுதும் வேலையை ரூஸோவுக்குக் கொடுத்தான். இந்தச் சமயத்தில் அவனுக்கு நரம்புத் தளர்ச்சி நோய் பீடித்தது. ஆறுமாத காலந் தான் உயிரோடிருப்பான் என்று வைத்தியர் கூறிவிட்டார். உயிரோடிருக்கும்வரை சுதந்திரமாயிருக்க முடிவு செய்தான். அதன் பயன் உத்தியோகம் போய்விட்டது; ஆனால் உயிர் போகவில்லை! மறுபடி வேலை வேட்டை !! ரூஸோ பாடல்களை நகல் செய்து கொடுக்கும் வேலை செய்து பிழைக்கத் தொடங்கினான்.]

[ரூஸோவின் அடுத்த வெற்றி அவன் எழுதிய ஓர் இசை நாடகமாகும். அது நடித்துக் காட்டப் பட்டபோது பலராலும் ரூஸோ பாராட்டப்பட்டான். ஆனால் பலரின் பொறாமைக்கும் இலக்கானான். அந் நாடகத்தின் வெற்றியைக் கண்டு பிரெஞ்சு ராஜசபை அவனுக்குச் க்ஷேம நிதியும் அந்தஸ்தும் தர முன்வந்தபோது, அவற்றால் தன் பொருளாதாரக் கவலைகளெல்லாம் தீர்ந்துவிடுமெனத் தெரிந்திருந்தும், ரூஸோ புறக்கணித்துவிட்டான். என்ன வறுமையான வாழ்க்கை யென்றாலும், தன் இலட்சிய நோக்கின்படியே வாழத் தொடங்குவதெனத் தீர்மானித்துவிட்டான். அவனுடைய இலக்கிய நண்பர்களோ அவனுடைய புகழை அழிக்க மறைமுகமாகச் சதி செய்யத் தொடங்கினர். ரூஸோவின் இசை நாடகத்தை மாரீச இலக்கியமெனப் பழி தூற்றப்பட்டபோதும்,நாடகத்தை மேடையேற்றிய பிரபுக்கள் மோசடியாக நடந்துகொண்டபோதும் அவன் பெரிதும் மனம் புண்பட்டான். துரோகத்தைக் கண்டு துடிதுடித்தான்.]

1752—58 [1753-ம் வருடம், டிஜோன் கழகத்தார் மற்றொரு கட்டுரைப் போட்டியை விளம்பரப்படுத்தி யிருந்தனர். "மனிதர்களிடையே ஏற்றதாழ்வுகள் ஏற்பட்டதற்கு மூலகாரணமென்ன? இயற்கை நியதி அதனை அங்கீகரிக்கின்றதா?" என்பது அந்தக் கட்டுரையின் தலைப்பு. இந்தக் கட்டுரைக்கு ரூஸோவுக்குப் பரிசு கிடைக்கவில்லை. ஆனால் இது அதை எழுதியவனுக்கு மேலும் புகழைத் தேடிக் கொடுத்தது. தனது இரண்டு கட்டுரைகளில், ரூஸோ தான் வாழ்ந்த காலத்து மக்களின் வாழ்க்கை முறைகளையும், இதர பொய்யான சமூகத்தின் முகமூடிகளையும்

தகர்த்தெறிய முற்பட்டான். அதன் பிறகு ஜீனிவாவுக்குப் போக நினைத்தான். ஆனால் புராடெஸ்டன்ட் மதப் பிரிவைச் சேர்ந்த ஜீனிவாவுக்கு ரூஸோ மறுபடியும் கத்தோலிக்க மதப் பிரிவிலிருந்து புராடெஸ்டன்ட் மதப் பிரிவுக்கு மதம் மாறினால்தான் பிரஜா உரிமையுடன் புகமுடியும். அதனால் பிரஜா உரிமைக்காக ரூஸோ தன் மதத்தையும் துறந்துவிட்டான். நான்கு மாதங்கள் ஜீனிவாவில் அவன் தனது துணைவி திரேஸாவுடன் தங்கிவிட்டு, மறுபடியும் பாரீஸ் பட்டினத்திற்குத் திரும்பினான். அதன் நடுவே தன் பழைய காதலியான வாரென்ஸ் சீமாட்டியை மறுபடியும் சந்தித்தான். அவளுடைய செல்வாக்கெல்லாம் புதிய காதலரால் சூறையாடப்பட்டு ஏழ்மை ஸ்திதியில் இருந்தாள். ஆனால் ரூஸோவின் ஆதரவிலிருப்பது தன் கௌரவத்திற்கு அடுக்காது எனப் புறக்கணித்துவிட்டாள். ஜீனிவாவிலிருந்து ரூஸோ பாரீசுக்குத் திரும்பி வந்ததும் அவனது புரட்சிகரமான கட்டுரை நூல்வடிவாக வெளிவந்து, புகழையும் இகழையும் ஒருங்கே தந்தது. ரூஸோவுக்கு அநேக சீமான் சீமாட்டிகளுடன் பழகும் சந்தர்ப்பமும் வாய்த்தது. அவர்கள் இவனுடன் பழகுவதை இச்சித்தனர். இது போன்றவர்களில் டி'எபினே தம்பதிகள் முக்கியமானவர்கள். அவர்களுக்குப் பல மாளிகைகள் உண்டு. ஒரு நாள் எபினே சீமாட்டியுடன் ரூஸோ உலாவச் சென்றான். சீமாட்டியின் 'ஆசிரமம்' (ஹெர்மிடேஜ்) என்ற பெயருள்ள பழைய வீடு இயற்கையின் ஏகாந்தத்தில் எழும்பி நின்று கொண்டிருந்தது. அதை ரூஸோ சுட்டிக் காண்பித்து, "அந்த வீடு என் மனதைத் தவிர எனக்கு மற்றுமொரு புகலிடம்" என்று சொன்னான். உடனே அந்தச் சீமாட்டி "ஆம்! அது உங்களின் புகலிடம்; நீங்கள் அதைத் தேர்ந்தெடுத்தீர்கள். உங்கள் தோழி அதைக் கொடுக்கிறாள்; பெற்றுக்கொள்ளுங்கள்!" என்றாள். அந்த வீட்டை ஏற்றுக்கொள்ளும்படி ரூஸோவை அவள் கெஞ்சினாள். 1756-ம் வருடத்திலிருந்து ஹெர்மிடேஜில் வாழ ஆரம்பித்தான் ரூஸோ. இயற்கை விரும்பியான அவன் இப்போது இயற்கையின் நடுவே வாழப் போனான். மரங்களின் நிழலின்கீழ், பூங்காக்களின் இன்பங்களின் மத்தியில், கிராம வாழ்க்கையின் அமைதியை இரசித்து வாழ அவனுக்குச் சந்தர்ப்பம் கிடைத்தது. நீலவானக் குடையின்கீழ், மரங்களின் பசிய நிழலின்கீழ், மனதில் எண்ணங்கள் நெகிழ ரூஸோ உலவி வந்தான்.]



[எபினே சீமாட்டி, ரூஸோவிடம் மிக அன்புடன் நடந்துவந்தாள். அவளுக்குப் புத்தகங்களையும் காதற் கதைகளையும் எழுத ஆசை பிறந்தது. தான் எழுதியதை ரூஸோவிடம் படித்துக் காட்டி சதா தொந்தரவு செய்வதில் மகிழ்ச்சி கொண்டாள். 'இங்கு வாழ்ந்துவரும் காலத்தில்தான் நான் வாழத் துவங்கினேன்!' என்று கூறுகிறான் ரூஸோ. இங்கு அவன் வாழ்ந்த காலத்தில் நடந்த நிகழ்ச்சிகளை யெல்லாம் அவன் தன் வயோதிக காலத்தில் நினைவுக்குக் கொண்டுவந்து மகிழ்வான்.] அடர்ந்த காட்டின் மத்தியில், தனிமை கொலுவீற்றிருக்கும் தனிமையான இடத்துக்கு-அடிமைப்பட்டுஆட்சித் தன்மையின் கீழ் முடங்கிக் கிடக்கும், மனிதனின் கை படாத தூய்மையான இடத்துக்கு-நான் செல்வேன் அமைதியாக நடந்து! அங்குதான் இயற்கைதேவி தன் முழு எழிலையும் எனக்குப் படம் பிடித்துக் காண்பிப்பாள். இயற்கைப் பொருள்களின் பல நிறங்கள் அவற்றின் மென்மையால் எனது மனதைத் தீண்டும். நான் ஒரு தனி இன்ப உலகத்தில் சஞ்சரிக்க ஆரம்பித்தேன்; மனிதன் உலகத்தில் அனுபவிக்கக்கூடிய இன்பங்களை, இப்பொழுது வாழும் மக்களால் அனுபவிக்க முடியாத இன்பங்களைப் பற்றிய நினைவுகளில் என் மனம் லயித்துவிடும். எனது மனதில் நிலவிய கனவுகளெல்லாம் நிஜமாகவே உண்மைகளாகிவிட்டிருந்தாலும் இந்த உலகத்தில் மீண்டும் கனவுகளில் மூழ்கியே வாழ்ந்து வருவேன். [இந்தச் சமயம் ரூஸோவிடம் பல சீமாட்டிகள் வந்துபோவது சீமாட்டி எபினேக்குப் பிடிக்கவில்லை; முக்கியமாக மேடம் டி ஹூடெடாட் (*Madame De-Houdetot*) என்னும் சீமாட்டியின் நட்பு ரூஸோவுக்கு கிடைத்தது பிடிக்கவில்லை. அந்த ஹூடெடாட் சீமாட்டி தனது பதினெட்டாம் வயதில் ஒரு சீமானை மணந்தாள். காதலும் பாசமும் அந்தத் திருமணத்தில் துப்புரவாக இல்லை. அவள் தன் கணவனிடம் காண்பிக்கவேண்டிய அன்பையும், பாசத்தையும், தனக்குக் கவிதைகள் எழுதிக்கொடுத்த ஸெயிண்ட் லாம்பெர்ட் என்ற பட்டாளத்து வீரனிடம் செலுத்திவந்தாள். அவள் பேரழகியல்ல; அடர்ந்த காடு போன்ற கரிய கேசக் கற்றைகள் அவளிடம் கவர்ச்சிகரமாகக் காட்சியளிக்கும். அவளின் நடை, உடை, பாவனைகள் கண்டவர் மனதில் மோகத்தை மூட்டும். ஒருநாள் அவள் தன் கணவனும், ஆசை நாயகனும் வெவ்வேறு ஊர்களுக்கு வெவ்வேறு விவகாரங்களுக்குப் போயிருந்த சமயம் ஆண் உடை தரித்து குதிரைமீது சவாரி செய்துவந்தாள்]. அவள் வந்தாள்; நான் அவளைப் பார்த்தேன். எனக்கு அவளின் அழகு மயக்கப்போதை யூட்டியது. என் மனதில் ஜூலி என்ற கதாநாயகியைச் சிருஷ்டிசெய்து வைத்திருந்த உருவம் அப்படியே அந்தச் சீமாட்டியின் உருவத்தில் இருப்பதைக் கண்டேன். எனது மயக்கத்தை அதிகரிக்க, அவள் தன் காதல் வீரனை ஸெயிண்ட் லாம்பெர்ட் மீது கொண்டிருந்த காதல் உணர்ச்சிகளை விவரிக்க

ஆரம்பித்துவிட்டாள். ஓ! காதலெனும் தொற்றுநோயே!... அவள் தன் உள்ளத்து உணர்ச்சிகளை யெல்லாம் தன் உதடுகளின் வழியாக வார்த்தைகளாக உமிழ்வதைக் கவனிக்கும்பொழுது, என் உடலில் இனம் தெரியாத ஓர் இன்ப நடுக்கம் தோன்ற ஆரம்பித்து விட்டது. அவள் பேசும்போது என்னை அறியாமலே ஒருவித மாய உணர்ச்சி என்னை முழுவதும் ஆட்கொண்டுவிட்டது. இதுவரை அமிர்தத்தைப் பருகிய நான், அந்த மதுக் கோப்பையிலிருந்த விஷத்தை வேகமாகப்பருகமுற்பட்டுவிட்டேன். எங்களிருவரையும் அறியாமலே அவள் தன் காதலன்மீது கொட்டிய அதே உணர்ச்சிகளை என் மனதிலேயும் கனலாகக் கிளறிவிட்டாள். இந்தக் காதல் தீயால் தீய்க்கப்பட்ட எனக்கு இது ஏற்ற வயதில்லையே! அவளுடன் உரையாடிக்கொண்டிருக்கும் சமயம் நான் என்ன நிலையிலிருந்தேன் என்று எனக்கே புரியவில்லை. அவள் மீண்டுமொரு முறை என்னைக் காண வந்தாள். தீய காரியங்களின் தோழனை அவமானம் என்னை ஆட்கொண்டுவிட்டது. அவள் முன்னிலையில் நான் இனம் புரியாமல் நடுங்கினேன்; என் கண்களையும், என் வாயையும் திறக்க எனக்குச் சற்றுகூடத் தைரியமே இல்லை. அவளும் நானும் உலாவுவதற்குச் சென்று வருவோம். நானும் அவளும் காதல் கனவில் பட்டுத் தீய்ந்தோம். நான் அவளுக்காக அவள் தன் காதலனுக்காக! எங்கள் கண்ணீரும், எங்களின் ஏக்கப் பெருமூச்சுக்களும் ஒன்றாயிருந்தன. என் காதலை எப்படித் தெரிவிப்பது என்று நான் தவித்துக் கொண்டிருந்தேன்.

ஒரு நாள். இரவு! நிலவு! மலர்காடு—நிலவின் நீல வெள்ளம் எங்கும் பிரவகித்திருந்தது. சுவர்க்கலோகத்தின் முற்றத்திலிருந்து கொண்டு முழு நிலவு தன் மோகன ஒளி வெள்ளத்தை வர்ஷித்து கொண்டிருந்தது. இளம் தென்றலில் மலர்களின் மணம் மிதந்து வந்துகொண்டிருந்தது. எங்கும் இன்பம் கொள்ளை கொள்ளையாகக் கிடந்தது. பசும்புல் தரையில் நானும் அவளும்! அருகருகே அமர்ந்திருந்தோம். என் உள்ளத்து உணர்ச்சிகளை வார்த்தைகளில் கூற நினைத்தேன். என் கண்களிலிருந்து கண்ணீர் துளிகள் அவளின் முழங்கால்களின் மீது விழுந்து ஓடின! அவளே தன் உரையாடலை ஆரம்பித்தாள்! "இல்லை இதுவரை கிடையாது! உங்களைப் போன்ற சாந்த குணம் படைத்தவரை நான் கண்டதே கிடையாது; உங்களைப்போல் இதுவரை எந்தக் காதலனும் காதலித்ததே கிடையாது. நான் பேசுவதை எனது காதலன் ஸெயிண்ட் லாம்பெர்ட் கேட்டுக் கொண்டிருப்பான். இருவரை காதலிக்க என் உள்ளத்தில் இடம் ஏது?" என்றாள். நான் பெருமூச்சு விட்டேன்; பிறகு அமைதியுடன் இருந்தேன். அவள் தன் காதலனையும் கணவனையும் பிரிந்து வாழ்ந்த மூன்று மாத காலத்தில் தினமும் அவளைச் சந்திப்பேன். காதல் எங்களை இணைத்தது. தினமும்

எவ்வளவு தேக சுத்தத்துடன் என்னிடம் பேச வந்தாளோ அதே தேக சுத்தத்துடன் திரும்பிப்போனுள்.

ஒருநாள் நான் அவளைச் சந்திக்கப்போனேன். வேதனையும் துன்பமும் அடையாள ரேகைகளைப் பதித்துவிட்ட முகத்துடன் அவள் காணப்பட்டாள். பிறகு என்னிடம் தனியாக அவள் கூறினுள்: "உனது நட்பு, என் வாழ்வின் அமைதியை அடியோடு விலக்கி விடும் போலிருக்கிறது! ஸெயின்ட லாம்பெர்டுக்கு யாரோ நமது நட்புப் பற்றித் தவருக சொல்லிவிட்டிருக்கிருர்கள். நான் ஏதோ பெருங்குற்றம் செய்து விட்டதாக என் காதலர் நினைத்துக்கொண்டிருக்கிருர். யாரோ நமக்குத் துரோகம் செய்து விட்டிருக்கிருர்கள்; கவலை வேண்டாம்!" [இதுநிற்க, எபினே சீமாட்டிக்கும் ரூஸோவுக்கும் ஒரு பிளவு உண்டாயிற்று. ரூஸோ தனக்கே உரிமையானவன் என்று மனப்பால் குடித்துக் கொண்டிருந்த அவளுக்கு அவன் மற்ற சீமாட்டிகளுடன் பழகிய விதம் பிடிக்கவில்லை. அவள் தன் மீது சந்தேகப்படுவதைக் கண்ட ரூஸோவும் பலவிதச் சந்தேகம் கொண்டான். தன்மீது பொருமை கொண்ட இலக்கிய நண்பர்களோடு சேர்ந்துகொண்டு அவள் சதி செய்கிருள் என நினைத்தான். அதன் பின் தன் புகழுக்கு மாசு ஏற்படுமெனக் கருதி அவளிடமிருந்து பிரிந்து வாழ வேண்டும் என்ற எண்ணம் கொண்டவனுய் 1757-ம் வருடம் வேறு இடத்தில் சென்று, வசிக்க ஆரம்பித்துவிட்டான்.]

[எபினே சீமாட்டியின் 'ஹெர்மிட்டேஜ்' எனும் வீட்டில் அவன் வாழ்ந்து வந்த வாழ்க்கைதான் அவன் வாழ்விலே முக்கியமானதாகும். அந்தக் காலத்தில்தான் அவனுக்கு உலகப் புகழ் தேடித் தந்த சமுதாய ஒப்பந்தம், எமிலி முதலான புத்தகங் களை எழுதத் திட்டம் வகுத்து, அதற்கான குறிப்புக்களையும் தயாரித்து வைத்திருந்தான்.]

['டி அம்பருக்கு பிரெஞ்சு நாடக மேடையைப்பற்றி ஒரு கடிதம் எழுதினுன். அவன் வாழ்க்கையில் 1758-முதல் 1762-ம் வருடங்களுக்கிடையில்தான் உலகப்புகழ் தேடித்தந்த புத்தகங்களை எழுதினுன். எபினே சீமாட்டியின் வீட்டிலிருந்து புறப்பட்ட பிறகு, ஒரே அழுக்கு நிறைந்த ஒரு பழைய வீட்டில் தங்கி யிருந்தான். இங்கும் அவனது உடல்நிலை மிகவும் குன்றி யிருந்தது. சில சமயங்களில் அந்த வீட்டில் வசித்து வரும் பொழுது அவன் பேனுவிலிருந்த மை, குளிர்பனியால் உறைந்து கூட விடும். ஆனல் அங்குதான் சுதந்திரமாக வசிக்க விரும்பி ஞனே தவிர, பிரபுக்களின் தயவினுலோ, சீமாட்டிகளின் அணைப்பாலோ, வாழ்க்கை நடத்த சம்மதிக்கவில்லை. இந்த அழுக்கடைந்த சூழ்நிலையிலே, ஏழ்மையின் மத்தியிலே, உடல் நலம் குன்றியிருக்கும் பொழுதுதான், அவன் ஐரோப்பிய சரித்திரத்திலும் இலக்கியத்திலும் மறுமலர்ச்சியைப் புகுத்திய

மாபெரும் இலக்கியத்தைப் படைத்தான். அவனுடைய புகழைக் கண்டு மனம் பொறுமியவர் பலர் என்றாலும், அவனுடைய புரட்சிகரமான நூல்களுக்கு எதிராகப் புரண்டெழுந்த பழமை விரும்பிகள் பலர் என்றாலும், உதட்டில் நட்பும் உள்ளத்தில் துரோகமும் கொண்டு பழகியவர் பலர் என்றாலும், அவனுடைய பாழடைந்த வீட்டிற்கு அரசியல்வாதிகளும், இலக்கிய நிபுணர் களும், சமுதாயச் சீர்திருத்த சிற்பிகளும், நாடக நாவலாசிரியர் களும் சீமான் சீமாட்டிகளும் வந்து அடிக்கடி அவனைப் பார்த்து விட்டுப்போயினர். அவர்களில் முக்கியமாக லுக்ஸெம்பர்க் தம்பதி களுடன் பழகும் சந்தர்ப்பம், ரூஸோவுக்கு வாய்த்தது. அவன் வசித்து வந்த தரித்திர சூழ்நிலையை கண்டு, லுக்ஸெம்பர்க் தம்பதிகள் தங்கள் மாளிகையில் வந்து வசிக்குமாறு அவனை வற்புறுத்தினர்கள்.]

"அந்தக் கட்டிடத்தில் எனது பிரத்தியேக உபயோகத்திற் காக நான்கு அறைகள் ஒதுக்கிவைக்கப் பட்டுள்ளன. அறைக ளெல்லாம் மிகச் சுத்தமாகவும், ஒழுங்காகவும் அமைந்திருந்தன. என்மீது லுக்ஸெம்பர்க் தம்பதிகள் முழு அன்பு செலுத்திவந்த னர். அவர்களின் அன்பின் காணிக்கையாக அவர்களை அடிக்கடி சென்று கண்டு வந்தேன். நான் 'ஜூலி'யை எழுதிக்கொண் டிருப்பது அந்தச் சீமாட்டிக்குத் தெரியுமாதலால் அதை அவளின் விருப்பப்படி படித்துக் காண்பித்தேன். இது முடிந்தவுடன் என்னை மிகவும் புகழ ஆரம்பித்துவிட்டாள். அவளது ரஸிகத் தன்மையின் மேலீட்டால் என்னைப் பத்துமுறை அணைத்து அக மகிழ்வாள்.

"1760-ம் வருடம் தோன்றிய 'ஜூலி' என்ற எனது நாவல் பாரீஸ் பட்டினத்தில் பெரிய பரபரப்பை உண்டு பண்ணியது. முழு பாரீஸ் பட்டினமே இந்தக் காதற் கதை யைப் படித்து மகிழ ஏங்கித் தவித்தது. புத்தகக் கடைகளில் எப்பொழுதும் மக்கள் கூட்டம் கூட்டமாகக் காத்துக் கிடந்து, அப் புத்தகத்தின் பிரதி கிடைக்காதா என்று ஏங்கிக் கிடந்தனர். இலக்கிய வல்லுனர்களிடையே இப் புத்தகத்தைப் பற்றி அபிப் பிராய பேதமும் கண்டனக் குரலும் எழுந்தது. ஆனால் மக்க ளிடையே இந்தப் புத்தகம் மிகவும் புகழடைந்தது. அதுவும் பெண்கள் இந்தப் புத்தகத்தில் தங்கள் மனதைப் பறிகொடுத்து இரவெல்லாம் கண் விழித்துப் படித்தனர். பெண்களின் மன தை மயக்க அதில் இருந்த மர்மம் என்னவென்றால் அந்தக் கதையில் வரும் கதாநாயகன் அதன் கதாசிரியனே! இதற்குப் பிறகு எனது எமிலியை எழுதி முடித்த பிறகு சமுதாய ஒப் பந்தத்தை யெழுத ஆரம்பித்தேன். சமுதாய ஒப்பந்தம் 1762-ல் வெளியாயிற்று.

[எமிலி—சமுதாயத்தின் பழைய மூடப் பழக்கங்களில் மூழ்கிக் கிடந்த கல்வி முறைக்கு பெரும் சவுக்கடியாக இருந்தது. மத குருமார்களும், மதவாதிகளும் அதைத் தம் கோபாக்னியால் தீய்த்துவிட எண்ணினர். சமுதாய ஒப்பந்தம் 1762–ல் வெளியானது; எமிலியும் அதே வருடம் வெளியாகிவிட்டது.]

"புயலுக்கு முன் அமைதியில் தட்டுப்படும் முணுமுணுப்பு சப்தம் போல எங்கும் முணுமுணுப்புகள் எழுந்தன. என்னைப் பற்றியும், எனது புத்தகத்தைப் பற்றியும், ஏதோ ஒரு புரட்சிச் சதி நடப்பதாகவும், அது என்றைக்காவது திடீரென்று கிளம்பி பெருத்த நாசத்தை உண்டுபண்ணும்—என்பன போன்ற நிலை அப்பொழுது நிலவியதை கூர்மையான புத்தியுள்ளவர் எவரும் அறிந்து கொள்ளாமலிருந்திருக்க முடியாது. எனது விரோதிகள் எல்லோரும் ஜெசூட்ஸ் (*Jesuits*) மதப் பிரிவினர். இந்தப் புத்தகத்தால் அவமானப்படுத்தப் பட்டனர் என்றும், மதத்தை எதிர்த்து எழுதும் எழுத்தாளர்களையும் அவர்களின் புத்தகங்களையும் தீயிட்டுக் கொளுத்திவிட வேண்டும் என்றும் பிரசாரம் செய்ய முனைந்தனர். எங்கும் என்னைப் பற்றிய பேச்சாகவே இருந்து வந்தது. பலவிதமான வதந்திகள் என் காதுகளுக்கு எட்டின. நான் அமைதியுடன் இருந்துவந்தேன். வதந்திகளின் எண்ணிக்கை முன்னிலும் பன்மடங்கு அதிகரித்தது. எனது அமைதியைக் கண்டு, மக்களைவிட, பிரெஞ்சு பார்லிமெண்டு அதிக ஆத்திரம் கொண்டது போலும். பரபரப்பு அதிகரித்தது. பார்லிமெண்ட் சபையினர் இது போன்ற புத்தகங்களை மட்டுமல்ல, அதை எழுதியவர்களையும்கூடத் தீயிலிட்டு கொளுத்திவிட வேண்டும் என்று பேசிக்கொண்டது என் காதுகளுக்கு எட்டியது.



[எமிலி (கல்வி) வெளியான 21–வது நாள் பாரீஸிலுள்ள நீதிமன்றத்தின் முன் அப்புத்தகம் பகிரங்கமாகக் கொளுத்தப் பட்டது. அதன் ஆசிரியரைக் கைது செய்யும்படி பிரெஞ்சுப் பார்லிமெண்ட் உத்திரவிட்டது.]

லுக்ஸெம்பர்க் சீமாட்டி என்னை இங்கிலாந்துக்கு ஓடிவிடும்படியும், அங்கு தனது நண்பர்கள் இருப்பதாகவும் கூறினாள். நான் வருவது வரட்டும் என்று அமைதியுடன் இருந்தேன். எனது நேர்மையான பணியில் எனக்குப் பூரண நம்பிக்கை இருந்தது. உண்மைக்காக, உண்மையின் சார்பில் எவ்விதமான இன்னல்களையும் பொறுக்க வேண்டிய சந்தர்ப்பம் எப்போது

வாய்க்கும் என்று ஆவலுடன் எதிர்பார்த்துக் கொண்டிருந்தேன். ஒருநாள் இரவு—தூக்கம் என்னைத் தழுவும் நேரம் வரை ஏதாவது புத்தகத்தைப் படித்துக்கொண்டிருப்பது எனது வழக்கமாதலால், அன்றும் அப்படியே படித்துக் கொண்டிருந்தேன். அப்பொழுது என் அறையின் பக்கத்தில் ஏதோ சப்தம் கேட்க, அது என்ன வென்று பார்க்கப் போனேன். எனது சீமான் நண்பர்களிட மிருந்து ம. லா. ரோக் என்பவர் என்னைக் காண ஒரு கடி தத்துடன் வந்தார். திரேஸா அவருக்கு நானிருந்த அறையைக் காண்பித்தாள். சீமாட்டி லுக்ஸெம்பர்க் அனுப்பிய கடிதம் அவரின் கையிலிருந்தது. "எங்கும் பரபரப்பு அதிகமா யிருக் கிறது; வரப்போகும் கொடுமையை யாராலும் தடுக்க முடியாது; உனது நாசத்தை நீதி மன்றம் கேட்கிறது; பார்லிமெண்ட் அதை ஆமோதிக்கிறது. நாளைக் காலை நீ கைது செய்யப்பட வேண்டிய கட்டளைப் பத்திரம் வரும்; அது உடனே நிறைவேற்றப்படும்" என்று அதில் எழுதப்பட்டிருந்தது. "நீ வேற்று நாட்டிற்குத் தப்பியோடிவிட்டால் உன்னை யாரும் பின்பற்ற மாட்டார்கள் என்ற உத்தரவாதத்தை நான் பெற்றுக்கொண்டுவிட்டேன். இல்லையேல் உன்னை நிச்சயமாகக் கைது செய்வார்கள்!" என்றும் அந்தக் கடிதம் கூறியது. அன்று இரவு லுக்ஸெம்பர்க் சீமாட்டி யின் வேண்டுகோளின்பேரில் அவளைக் காணப் போனேன். அவளின் பதைபதைப்பு என் மனதைத் தீண்டியது. எங்களது உரையாடலுக்குப் பிறகு நான் எப்படியும் புறப்பட்டுத் தீர வேண்டும் என்ற முடிவுக்கு வந்தேன். ஸ்விட்ஜர்லாந்துக்குச் சென்று தங்க முடிவு செய்தேன். விடியற் சாமம் நான்கு மணிக்கு அரசாங்க அதிகாரிகளுக்குத் தெரியாமல் நானும் புறப்பட்டுவிட் டேன். எனது நண்பர்களிடம் விடைபெற்றுக்கொண்டு, பெர்ன் (*Berne*) பட்டினத்தை அடைந்தபிறகு, வண்டியிலிருந்து இறங்கி மண்ணை முத்தமிட்டு "சுதந்திர மண்ணை மிதித்துவிட்டேன்" என்று கூறினேன்.

1762—1778 [ஆனல் சுதந்திர ஸ்விட்ஸர்லாந்தும் ரூஸோவை அங்கு வாழ விடவில்லை. அந்த நாட்டில், அவனு டைய பிறந்த ஊரான ஜீனிவாவில், அவனுடைய புத்தகமான எமிலி, மக்களின் முன்னிலையில் பாரீஸ் பட்டினத்தில் ஒன்பது நாட்களுக்கு முன் நடந்தது போலவே, தீயிலிட்டுக் கொளுத்தப் பட்டது.

ஒவ்வொரு நகரமும் ரூஸோவுக்குத் தடையுத்திரவு பிறப் பித்து விரட்டியது. கடைசியில் மோட்டியர்ஸ் என்ற கிராமத் தில், பாய்டிலாடுர் என்ற சீமாட்டியின் ஆதரவில் வசிக்க ஆரம் பித்தான் ரூஸோ. அந்தக் கிராமத்தின் இயற்கை யழகை ரசிக்கும் சந்தர்ப்பம் சிறிது காலம் கிடைத்தது. பழமை விரும்பி களால் எந்தெந்த ஊரில் அவனுடைய நூல்கள் கொளுத்தப்

பட்டனவோ அந்தந்த ஊரிலிருந்து புதுமை விரும்பிகள் வந்து ரூஸோவோடு உரையாடிச் சென்றனர். இங்கிலாந்தின் பேரறிஞரான சாமுவேல் ஜான்சனைப் பற்றி நூல் எழுதி உலகப் பிரசித்தி பெற்ற ஜேம்ஸ் பாஸ்வெல் என்ற அறிஞரும் இங்கிலாந்திலிருந்து புறப்பட்டு வந்து ரூஸோவைத் தரிசித்து விட்டுப் போனார். ஆனால் அவனுடைய நூலான சமுதாய ஒப்பந்தத்தையோ அவனுடைய பிறந்த ஊரான ஜீனிவா நகரம் தீயிலிட்டது. அவனைப் பகிஷ்கரித்தும் விட்டது. ஆனால் ரூஸோ தன் எழுதுகோலை விடவில்லை. தனக்கு இழைக்கப்பட்ட அநீதிகளைக் கண்டித்து தனது மலைக் கடிதங்களை 1764-ம் வருஷம் வெளியிட்டான்.

அதுமேலும் பல விரோதிகளை ரூஸோவுக்கு உண்டாக்கியது. அப்போது ரூஸோவுக்கு வயது 52. அவனை ஆதரித்த லுக்ஸெம்பர்க் சீமானும் பால்ய தசையில் அவனுக்கு முதன் முதலில் அன்பு காட்டிய வாரென்ஸ் சீமாட்டியும் இறந்து போனதாகச் செய்தி வந்து நெஞ்சைத் துளைத்தது. இப்போது அவனுக்கு ஆதரவு யாருமில்லை. உலகமோ அவனை நோக்கிக் கண்டனக் குரல் எழுப்பியது. பலவிதமான கண்டன நூல்கள் அவனை நோக்கிச் சீறின. அரசாங்கமும் மதமும் அவனை அடியோடு புதைத்துவிடப் பாய்ந்தது. உயிருக்குயிராய் மதித்த நண்பர்களெல்லாம் துரோகிகளாக மாறினார்கள். பழமையைத் தகர்த்து பிரான்ஸின் புதுமை விரும்பிகள் நெஞ்சங்களிலே குடியேறிய மாபெரும் சிந்தனையாளன் வால்டேரும், ஒரு அற்ப காரணத்தை முன்னிட்டு ரூஸோவைத் தூஷிக்கத் தொடங்கி விட்டான். மோட்டியர்ஸ் கிராமத்திலும் அவன் நிம்மதியாக வாழ முடியவில்லை. ஆதலால் ஸெயிண்ட் பியர்ரே என்ற தீவில் சென்று தங்க ஆரம்பித்தான்.]

"இரண்டு மாதங்களுக்கு இந்தத் தீவில் சுயேட்சையாக வாழ்ந்தேன். இங்கு, ஆனந்தம் தரும் இந்த மனோகரமான தீவில், இரண்டு வருடங்கள் இல்லை, இரண்டு நூற்றாண்டுகள் இல்லை, எப்பொழுதுமே சாசுவதமாக வசித்திருப்பேன். இந்த இரண்டு மாதங்களை எனது வாழ்விலே மிக இன்பம் நிறைந்தனவாகக் கருதுகிறேன்." [அதன் பிறகு அங்கிருந்தும் அரசாங்கத்தால் விரட்டப்பட்டு ரூஸோ லண்டனுக்கு டேவிட்ஹ்யூம் (*David Hume*) என்ற அறிஞரின் நட்பையும் ஆதரவையும் எதிர்நோக்கி ஓடினான். ரூஸோ ஒவ்வொரு ஊரிலிருந்தும், ஒவ்வொரு ஆதரவாளரிடமிருந்தும், விரட்டியடிக்கப்படும் போது அவனுக்கு ஒரே ஆறுதலாக அவனுடைய துணைவி திரேஸாவும் பின்பற்றி வந்தாள். அவன் லண்டனில் அறிஞர் டேவிட் ஹ்யூமிடம் சரணகதி அடைந்த சிறிது காலத்திற்குப் பிறகு, துணைவி திரேஸாவை, அறிஞர் ஜேம்ஸ் பாஸ்வல் பத்திரமாக ரூஸோவிடம்

கொண்டு வந்து சேர்த்தார். தாய் நாட்டினரால் துரத்தப்பட்ட ரூஸோவுக்கு இங்கிலாந்து புகலிடம் கொடுத்தது. அவனுடைய விசித்திரமான நடையுடைபாவனைகளைப் பற்றிப் பலர் குசுகுசு வென்று பேசினார்கள் என்றாலும், அவனை ஆங்கிலேயப் பிரபலஸ்தர் பலர் வியந்து கொண்டாடினார்கள். பத்திரிகைகள் இவனுடைய வரவைப் பெரிதாக விளம்பரப் படுத்தின. மேன்மை தங்கிய இங்கிலாந்து அரசபீடமும் மனமுவந்து ஒரு பாராட்டு விழாக் கொண்டாடி ரூஸோவைக் கௌரவப் படுத்தியது. ஆனால் ஒரு சிலர் ரூஸோவைத் தாக்க ஆரம்பித்தார்கள். என்ன காரணத்தாலோ பேரறிஞரான சாமுவேல் ஜான்ஸன் என்பவர் ரூஸோவை 'மனித சமுதாயத்தில் ஒரு போக்கிரி' என்றுகூறி, பல தேசங்களிலும் விரட்டியடிக்கப்பட்ட ஒருவனுக்கு இங்கிலாந்து புகலிடம் கொடுப்பது வெட்கக்கேடு எனக் கண்டித்தார்.

டேவிட் ஹ்யூமினுடைய ஆதரவினால் ஸ்டாப்போர்டுஷயர் பிராந்தியத்தில் ஒரு சிறு வீட்டில் துணைவி திரேஸாவுடன் ரூஸோ சிறிதுகாலம் வசித்து வந்தான் என்றாலும், இங்கிலாந்துக்கு ஓடியதில் அவனுக்கு ஒரு பலனுமில்லை. ரூஸோவுக்கும் டேவிட் ஹ்யூமுக்கும் மனத்தாங்கல் ஏற்பட்டு விட்டது. தன்னைத் தந்திரமாக அழைத்துவந்து கொலை செய்து விடவே டேவிட் ஹ்யூம் நட்புப் பாராட்டினான் என்று சந்தேகப்பட்டான். இந்த விசித்திரமான சந்தேகத்திற்கு, ஓயாத போராட்டத்தினால் அவன் மூளை குழம்பிப் போயிருந்ததே காரணம் என்று சிலர் கருதுகிறார்கள். முடிவில் நண்பர்களின் சமரச முயற்சியும் பலிக்காதமுறையில் மனஸ்தாபம் முற்றி விட்டது. இரு நண்பர்களும் பரம விரோதிகளாக மாறி, தங்கள் எழுது கோல்களால் ஒருவரையொருவர் தாக்கிக் கொண்டார்கள். முடிவில் இங்கிலாந்திலிருப்பது தன் உயிருக்கு ஆபத்து எனப் பயந்து 1767-ம் வருஷம் மீண்டும் தன் பிரான்ஸ் தேசத்திற்கே ஓடிவந்தான். பாரீஸ் மாநகரில் தன் துணைவி திரேஸாவோடு பத்துவருஷ காலம் வாழ்ந்தான். அந்தக் காலத்தில் பயப்பிரமையும், சூனிய உணர்ச்சியும், எவர்மீதும் ஆத்திர உணர்ச்சியும் ஏற்பட்டு விட்டது. 1775—1776ல் தனது சம்பாஷணைகளையும், 1777-78ல்—சிந்தனைகளையும் எழுதி முடித்தான். தன்னை, தான் செய்த விஷயங்களைப் பிறர் தவறான முறையில் எண்ணிக் கொண்டதையும், தன் மீது பிறர் சுமத்திய அநியாயக் குற்றங்களையும் விளக்கி எழுதினான் தனது சம்பாஷணைகள் என்னும் நூலில்.]

"நேர்மையும்,மனத் திண்மையும்உள்ள சில மனிதர்களை என் மனதில் மருவும் சந்தேகங்களைத் தீர்க்கத் தேடுகிறேன். இதற்காக கையில் தீப்பந்தத்தைப் பிடித்துக்கொண்டு அத்தகைய மனிதர்களை சமூகத்தின் மூலைமுடுக்குகளிலெல்லாம் தேடுகிறேன்—தேடியலைகிறேன். ஒருமனிதனையாவது, ஒரு மனித ஆத்மாவையாவது

நான் இதுவரை கண்டதே கிடையாது. என்னை உள்ளன்புடன் அணைத்துக் கொள்வதாக நான் நினைக்கும்படி நடிக்கும் மனிதர்களைத்தான் காண்கிறேன். அவர்களின் உள்ளங்களில் உள்ள துவேஷம் நன்கு புலப்பட்டுவிடுகிறது. நான் தவறை என்றைக்கும் மன்னித்து விடுவேன்; துரோகத்தை மட்டும் எந்நாளும் நான் மன்னித்ததேயில்லை — மன்னிக்கவும் மாட்டேன். பறவையைப் பிடிப்பதற்கு அவைகளை மயக்கி ஆசை வார்த்தைகள் பேசுவது போல என்னருகே வந்து என்னை போற்றிப் புகழ்கின்றனர் சிலர். என்னை அவர்கள் நேரில் தூஷித்திருந்தாலும் அவர்களை மதித்திருப்பேன்; அவர்கள் மீது பச்சாதாபப் பட்டிருப்பேன்; என் மீதே நான் இரக்கம் கொள்வதுபோல! ஆனால் என்னை இதுபோல ஏமாற்ற முயல்பவர் தங்களைத் தாங்களே ஏமாற்றிக் கொள்கின்றனர். அவர்கள் தங்களைத் தாங்களே ஏமாற்றிக் கொள்வதோடு மட்டுமல்லாமல், தங்களுடைய தவறுகளையே அதிகம் நேசித்துவருகின்றனர். என் இதயத்தில் பிறரை வெறுக்க இடம் இல்லை; நான் யாருக்கும் மதிப்பு செலுத்துவதில்லை; யாரையும் வெறுத்து தூஷிப்பதுவுமில்லை! எனக்குத் தெரிந்ததெல்லாம் நானும் அவர்களும் ஒரே மனிதப் பிறப்பை—பிரிவை சேர்ந்தவர்கள் என்பதே!"

[முன்பு மோட்டியர்ஸ் கிராமத்தில் அவன் பதுங்கியிருந்த சமயத்தில் மனத்துன்பங்களுக்கு ஆறுதலாக அவன் எழுதத் தொடங்கிய 'குற்ற அங்கீகாரம்' (*Confessions*) என்னும் குற்ற அங்கீகார நூலை இப்போது பாரீஸ் வாசத்தின்போது எழுதி முடித்தான். போலந்து மக்கள் தங்கள் சுதந்திரத்தைக் காப்பாற்றிக்கொள்ளும் பொருட்டு விண்ணப்பம் விடுத்ததற்கேற்ப, ரூஸோ அருமையான ஓர் அரசியல் திட்டத்தைத் தயாரித்துக் கொடுத்தான். அதற்கு எவ்விதக் கூலியும் வாங்கிக் கொள்ளவும் மறுத்துவிட்டான். அந்திம காலத்தையும் அவதியிலே கழித்து விடுவது என முடிவுக்கு வந்துவிட்டான். அவனுக்குப் பாரீஸ் மாநகர வாழ்க்கை கசப்புத் தட்டியது. அதனால் கிரார்டின் அழைப்பை ஏற்றுக்கொண்டு ஏர்மெனன் வில்லே என்ற ஒரு குக்கிராமத்தில் தன் துணைவி திரெஸாவுடன் வாழச் சென்றான். அங்கு அவன் அந்திம காலம் முழுவதையும் அமைதியுடன் கழித்திருக்க முடியும். ஆனால் வாழ்வு முழுவதும் போராடிவந்த களைப்பும், மூப்பும், நோயும், கவலையும், சூன்ய உணர்ச்சியும், விரக்தி மனப்பான்மையும் அவனைச் சித்தப்பிரமை கொள்ளச் செய்துவிட்டன. தன்னுடைய வாழ்வு எனும் விளக்கில் எண்ணெய் வற்றி விட்டதென்றும் சீக்கிரம் அது அணைந்து போகும் என்றும் அடிக்கடி சொல்லி வந்தான். பல விதமான நோய்கள் அவன் உடலிலும் நெஞ்சிலும் கோர நாடகமிட்டு வந்தன.]

"என் வரையில் அனைத்தும் முடிந்துபோயின. இந்த உலகில் நான் எதிர்பார்ப்பது இனி எதுவுமில்லை. எவருக்கும் அஞ்சவேண்டியதுமில்லை. நான் தரித்திரன். துரதிர்ஷ்டக்காரன். ஆனால் கடவுளைப்போல எந்தவித ஆசாபாசமும் இல்லாதவன். நான் தன்னந்தனியனாய், நோயாளியாய் மரணப் படுக்கையில் கிடக்கிறேன். என்றோ ஒருநாள் நான் வறுமையாலோ, குளிர் வாடையாலோ விறைத்து இறந்துவிடக் கூடும்; ஆனால், அதனால் யாருக்கும் தொல்லையிராது. எனக்கும் கவலை இல்லை; பிறரும் கவலைப்பட வேண்டியதில்லை... இந்த அந்திம காலத்திலே நான் சாவையும் வாழ்வையும், உடல் நோயையும் உடல் நலத்தையும், இகழையும் புகழையும் சமத்துவமாகவே பாவிக்கிறேன்!" என்று ரூஸோ தன் 'சிந்தனைகள்' எனும் நூலில் எழுதுகிறான். சமத்துவத்தை நிலைநாட்டப் பிறந்த ரூஸோ கடைசி மூச்சுவரையில் எதையும் சமத்துவமாகவே பாவித்து வந்தான்!

ரூஸோவின் அறுபத்தாறுவது வயதில், 1778-ம் வருஷம் ஜூலை மாதம் 2-ம் தேதி அருணோதயமாகி 7-மணி ஆனபோது, பஞ்சணையில் அவன் பிரேதமாக விழுந்துகிடந்தான். அவனுடைய முகம் வீங்கிப் புடைத்திருந்தது. அவன் இறந்தது மூர்ச்சை ரோகத்தாலா, அல்லது தற்கொலையா என்று வந்துபார்த்த வைத்தியர்களால் கூற முடியவில்லை.

'உலகில் எங்கும் துரோகத்தையே கண்டு மனம் ஒடிந்து போய் சித்தப்பிரமை கொண்டிருந்த ரூஸோ, தனக்குக் கடைசி வரையில் விசுவாசமான ஒருத்தி என்று நம்பியிருந்த அவனுடைய துணைவி திரேஸாவும், ஒரு குதிரை லாயப் பையன் மீது மோகம் கொண்டு துரோகம் செய்ததைக் கண்டபோது மனம் வெடித்து இறந்துபோனான்' என்று சிலர் கூறுகிறார்கள். 'திரேஸா ஓடிவந்து தாங்கிக் கொள்வதற்குள் முதுகெலும்பு வழியாகப் பனியாறு ஓடுவதாகச் சொல்லிக் கொண்டே மூர்ச்சையாகி இறந்துபோனான்' என்று வேறு சிலர் கூறுகிறார்கள். காரணம் எப்படியிருந்தாலும் உலக சரித்திரத்தையே சுதந்திரத்திசையில் திருப்பிவிட்ட ரூஸோவின் ஜீவன் உடலெனும் சிறையிலிருந்து விடுபட்டு சுதந்திரமாகப் பறந்து விட்டது!

ரூஸோ இறந்த பிறகுதான் அவனுடைய தேவையையும் மதிப்பையும் உலகம் உணர்ந்தது. அவனுடைய பிரேதத்தை ஜனங்கள் திரண்டு வந்து தரிசித்துச் சென்றார்கள். அவனுடைய இலட்சியக் கனவுகளை நனவுலகை நோக்கித்திருப்பி, அவனுடைய எழுத்துக்களை மாபெரும் பிரஞ்சுப் புரட்சி வடிவமாக்கினார்கள். பலத்தின் அநீதிகளை எதிர்க்கப் பலஹீனத்தின் சகாப்தத்தை தன் சவத்தின் மீது எழுப்பிவிட்டான் ரூஸோ!

ரூஸோவின் சவம் அவன் விரும்பியவாறே ஏர்மெனூன் வில்லா தோட்டத்தில் தான் புதைக்கப்பட்டிருந்தது என்றாலும் பதினாறு வருஷங்கள் கழித்துப் பிரஞ்சுப்புரட்சி ஜுவாலை விட்டு கிளம்பியபோது அவனுடைய பிரேதம் குக்கிராமப் புதை குழியிலிருந்து தோண்டியெடுக்கப்பட்டு, சகலவிதமான ஆடம்பர மரியாதைகளுடன் பாரீஸ் மாநகரம் நோக்கி ஊர்வலமாக எடுத்துச் செல்லப்பட்டது. அவனுடைய எந்த நூலை நரகமாகக் கருதி, எந்தப் பாரீஸ் மாநகரம் தீயிலிட்டுக் கொளுத்தியதோ அதே பாரீஸ் மாநகரம் அதே நூலான 'சமுதாய ஒப்பந்தத்'தைச் சுவர்க்கமாகக் கருதி அஞ்சலி செலுத்தியது!

அவனுடைய விசித்திரமான மனப்பாங்குகளையும், உணர்ச்சிகளையும், சுயசரிதையையும் வைத்துக்கொண்டு சிலர் அவனைப் பற்றி பலவாறாக அவதூறுகள் கூறினாலும் அவன் கடைசிவரை ஒழுக்கசீலனாகவும் நேர்மையாளனாகவுமே வாழ்ந்துவந்தான். பால்ய தசை முதல் அவன் பலரகச் சீமாட்டிகளின் ஆதரவிலே வளர நேர்ந்தாலும், பழக்கத்தின் காரணமாக அவர்கள் மீது அவனுக்குப் பாசம்ஏற்பட்டாலும்,அவற்றைக் காதல்என்று அவன் வாயாலே வர்ணித்தாலும்,அவையெல்லாம் உடல் இச்சைகளல்ல; ஒருவித மானசீக நட்பே தவிர வேறல்ல. பிரான்ஸ் தேசத்திலே மோகப் போதை வெள்ளமாய் புரண்டு, ஒழுக்கஹீனம் சர்வ் சாதாரணமாகக் கருதப்பட்டு வந்த காலத்திலே, அவன் ஒழுக்கத்தைப் பெரிதும் மதித்துவந்திருக்கிறான். பல சீமாட்டிகளின் ஆசைவலைகளைப் புறக்கணித்தும், தன் ஆசைகளைக் கட்டுப்படுத்தியும் வந்திருக்கிறான்.

"ரூஸோ ஒரு அரக்கனுமல்ல ; ஒரு ஞானியுமல்ல ; மனிதத் தன்மையோடு கூடிய ஒரு மனிதன்தான்!" என்று ரூஸோவே தன்னைப்பற்றிக் கூறுகிறான். அவனுடைய துயரமயமான வரலாற்றை அவனுடைய சுயசரிதையின் கடைசி வாசகங்களைக் கொண்டே முடிப்போம்.]

"நான் என்னைப்பற்றிய உண்மையை யெல்லாம் சொல்லி விட்டேன்.........இனி நான் பகிரங்கமாகவும் பயமின்றியும் கூறுவேன் : எவனாவது என் எழுத்துகளைப் படிக்காமலும், என்னுடைய சுபாவம், குணாதிசயம், நடையுடைபாவனைகள், ஆசைகள், சுக துக்கங்கள், பழக்கவழக்கங்கள் முதலானவற்றைத் தன் சொந்தக் கண்களால் ஆராய்ந்து பாராமலும், என்னை ஒரு அயோக்கியன் என்று கருத முடியுமானால், அவன் தான் பரம அயோக்கியன் ; அவனுடைய மூச்சை அமுக்கிக் கொன்றாலும் தகும்!"

## இரண்டாம் பகுதி

# ரூஸோவின் நூல்கள்

### ரூஸோ எழுதிய நூல்களின் பெயர்களும் எழுதிய காலமும்

1. இலக்கியம், கலை, விஞ்ஞானம் இவைகளைப் பற்றிய விரிவுரை [1749]
(Discourse on the Arts and Sciences)
2. மனிதர்களிடையே ஏற்றதாழ்வுகள் ஏற்பட்டதற்கு மூலகாரணம் என்ன? [1753]
(Discourse on the Origin of Inequality)
3. பிரெஞ்சு சங்கீதத்தைப் பற்றிய கடிதங்கள் [1753]
(Letters on French Music)
4. நாடக மேடையைப் பற்றிய கடிதங்கள் [1758]
(Letters to D' Alembert on the Theatre)
5. அரசியல் பொருளாதாரத்தைப் பற்றிய விரிவுரை [1758]
(Discourse on Political Economy)
6. ஜூலி அல்லது புதிய ஹெலாய்ஸே நாவல் [1761]
(Julie or the New Heloise)
7. எமிலி அல்லது கல்வி [1762]
(Emile or Education)
8. சமுதாய ஒப்பந்தம் [1762]
(The Social Contract)
9. மலைக் கடிதங்கள் [1764]
(Letters from the Mountain)
10. குற்ற அங்கீகாரம் (சுய சரிதை) [1765–1770]
(The Confessions)
11. சம்பாஷணைகள் [1775–1776]
(Dialogues)
12. சிந்தனைகள் [1777-1778]
(Reveries)



## நூல் ஒன்று

**கலைகளும் தத்துவ விஞ்ஞானங்களும் அபி விருத்தி யடைந்திருப்பதால் ஒழுக்கம் உயர்ந்திருக் கிறதா? வீழ்ந்திருக்கிறதா?**

[1749-ல் இந்தக் கட்டுரை பரிசுப் போட்டிக்காக எழுதப் பட்டது; அதன் சுருக்கம்]

"சிந்திக்கும் சக்தியற்ற இயற்கையிலிருந்து மனிதன் தனது முயற்சியால், தனது சிந்தனையினுல், தனது புரிந்துக்கொள்ளும் சக்தியால் வெளிவந்தான். இது மிகவும் நல்லதுதான். ஆனுல் பிறகு என்ன நிகழ்ந்தது? தனது சக்திகளை அழிவுக்குத்தான் பயன் படுத்தி வருகிருன். அவன் அணிந்திருக்கும் நாகரிகம் என்ற முகமூடியானது அவன் தன் சகோதர மனிதர்களைப் புரிந்துக் கொள்ள முடியாதவாறு தடுத்துவிடுகிறது. உண்மையும் எளி மையும் நிறைந்த வாழ்க்கையை வாழ்ந்துவந்த முன்னுள் மனிதன், இப்போது கொடிய, காரத்தனமான, கேவலப் புத்தி யுள்ள, வாழ்க்கையின் சுகங்களை மிக அதிக அளவுக்கு விரும்பும் புதிய மனித இனத்தைப் படைத்துவிட்டிருக்கிருன். கலைக ளெல்லாம் வாழ்க்கையின் சுகங்களிலிருந்துதான் பிறந்தது; விஞ்ஞானமே மூடநம்பிக்கைகளிலிருந்து முளைத்தது! ஆடம்பர மானது மறைக்கப்பட்டு, முகமூடி அணிந்திருக்கும் கோபம்—துரோகம்—பொய்—புரட்டு, பரிகாசம் முதலானவை இன்றைய நாகரிக சமூகத்தை அழுக்காக்கி, பாழ்படுத்துகின்றன. இயற்கை வாழ்வு வாழ்ந்து வந்த ஆதி மனிதனே மிகவும் நல்லவனு

யிருந்தான்; ஆனால் சமூக நாகரிகத்தை அவன் தன் இச்சைகளுக்குப் பயன்படுத்தி வாழத் துவங்கிவிட்ட பிறகு அவன் கெட்டே போய்விட்டான். வாழ்க்கையின் சுகங்கள் அதிகரிக்க, அதிகரிக்க, கலைகள் பூரணத்துவமடைய அடைய, ஆடம்பரம் பெருக பெருக, உண்மை வீரம் தேய்ந்து போகிறது; ஒழுக்கங்கள் துப்புரவாக மறைந்துபோகின்றன.''

''நம் உடலுக்குத் தேவைகள் இருப்பது போலவே நம் உள்ளத்திற்கும் தேவைகள் உள்ளன. கலாசாரமானது நம் வாழ்க்கை முறைகளை பண்படுத்துவதற்கு முன்பாக, கலையும் விஞ்ஞானமும் அபிவிருத்தி அடைவதற்கு முன்பாக, ஆதி மனிதனின் பழக்கவழக்கங்கள் முரட்டுத்தனமாக இருந்தது என்பது உண்மைதான். ஆனால் அவை இயற்கைத் தன்மையுடையனவாக இருந்தன. அவன் அப்பொழுது நடந்துகொண்ட முறையைக்கொண்டு அவனுடைய சுபாவம் இன்னதென சுலபமாகப் புரிந்துகொள்ள முடிந்தது. மனித சுபாவம் அந்தக் காலத்தில் அவ்வளவு சிறந்ததாக இல்லையென்றாலும், ஒருவரையொருவர் சுலபமாகப் புரிந்துகொள்ள முடிந்ததால் பரஸ்பர நம்பிக்கை இருந்தது; இந்த நம்பிக்கை அவர்கள் பலரக குற்றங்களைச் செய்யாமலிருக்கும்படி தடுத்தது. ஆனால் இன்றைக்கோ மனிதனின் வாழ்க்கையில்—வாழ்க்கை முறைகளில், ஒரு தெளிவான கலாசாரமும், நாகரீகத்தன்மையும், புகுந்துவிட்ட பிறகு-எல்லா மனிதர்களின் நடவடிக்கைகளும், பழக்கவழக்கங்களும் ஒரே அச்சில் வார்த்ததுபோல வித்தியாசமின்றி காணப்படுகின்றன. அதனால் சமூகத்தில் ஒரு மனிதன் இன்னொரு மனிதனுடன் பழகும்பொழுது எத்தகைய மனிதனுடன் பழகுகிறோம் என்பதை அறிந்துகொள்ள முடியாத பரிதாபகரமான நிலையில் அவன் இருக்கிறான். இதனால் எத்தனையோ தவறுகளும், குற்றங்களும் விளைகின்றன. உண்மையான நட்பு; நன்மதிப்பு...... இவை இந்நாளில் இல்லாமலே போய்விட்டன. வீண் அவநம்பிக்கை, பயம், தூஷணை, வெறுப்பு, துரோகம் — இவையெல்லாம் நாகரீகம் என்ற உருவத்தில் ஒளிந்துகொண்டு, நெளிந்து, உலகத்தை நாசமாக்கி வருகின்றன. இவ்வளவு துன்பங்களுக்கும், விபரீதங்களுக்கும் மூலகாரணம் என்ன? கலையும், விஞ்ஞானமும் அபிவிருத்தி அடைந்திருப்பதுதான் மூலகாரணமாகும்! உலக சரித்திரம் இதற்குச் சான்று கூறுகிறது. (உதாரணமாக, ஒருகாலத்தில் மாபெரும் வல்லரசாக விளங்கிய எகிப்து தேசம் தத்துவத்தையும், கலாசாரத்தையும், கலைகளையும் வளர்த்துக்கொண்டதனால் என்ன ஆயிற்று? அடி வலுவற்று அந்நிய நாடுகளுக்கு அடிமையாகிவிட்டது!)

ஆராய்ச்சி ஞானமும், ஒழுக்கமும் ஒன்றிற்கொன்று முரணானவையா என்று கேட்கலாம். அவ்வாறு ஒற்றுமைப்

படுத்தியும், வேற்றுமைப் படுத்தியும் பார்ப்பது வெறும் ஏமாற்றத்தைத்தான் தரும். எந்தக் கலாசார, விஞ்ஞான அபிவிருத்திபற்றி நாம் பெருமைப்பட்டுக் கொள்கிறேமோ அதே விஞ்ஞான அபிவிருத்தியின் பலாபலன்களை சற்று ஆராய்ந்து பார்த்தால் நாம் ஏமாற்றத்தைத்தான் காண்போம். உதாரணமாக, வானசாஸ்திரம் என்பது மூடநம்பிக்கையினின்றும் முளைத்தது; கணிதசாஸ்திரம் என்பது லாபம் சம்பாதிக்க வேண்டும் என்ற பொருளாசையிலிருந்து பிறந்தது; பௌதிக சாஸ்திரம் என்பம்தா பூததத்துவ மர்ம வேட்கையிலிருந்து தோன்றியது. கலாசார முறைகள், தரும நியாயங்கள் இவையாவும்கூட மனிதனின் மமதையிலிருந்து பிறந்தவைகள்தாம். கலாசார விஞ்ஞானம், தத்துவ ஞானம் என்பன போன்ற ஆடம்பரம் நிறைந்த பெயர்களெல்லாம், உயர்ந்த உண்மைகளை விளக்குபவை என்று நாம் நம்பிவிட முடியாது. ஒன்றின் மெய்ப்பொருளை நாடிச் செல்லும் பாதையில் எத்தனையோ பொய்மைகளைக் கடக்க வேண்டியுள்ளது. இந்தப் பொய்மைகள் நாம் ஆவலுடன் தேடிப் போகும் மெய்ப் பொருள்களைவிட பன்மடங்கு ஆபத்தானவை. ஒருவன் ஒன்றின் மெய்ப்பொருளைக் கண்டு பிடித்து விட்டான் என்று வைத்துக்கொண்டாலும் அவன் அதை நல்ல முறையில் உபயோகப் படுத்துவான் என்பது என்ன நிச்சயம்? சிறந்தவர்கள்தான் விஞ்ஞானத் தத்துவ ஞானங்களின் மெய்ப் பொருள் பயிற்சியில் ஈடுபடவேண்டும் என்றிருந்தால் மட்டுந் தான் அதனல் நல்ல பிரயோசனம் உண்டாகும்".

"கலைகளின் விஷயத்தில் ஈடுபாடும், கவனமும் ஏற்பட்டால் அவை கடைசியில் பகட்டில்தான் போய் முடிவதுண்டு. எந்த ஜாதிக்குக் கலாச்சாரப் பகட்டில் பாசம் உண்டாகி விடுகிறதோ, அந்த ஜாதி தனது போராட்டக் குணத்தை இழந்துவிடும். சரித்திரம் இதற்கு மிக அழகான சான்றுகளை அள்ளித் தெளிக்கிறது. போராட்டபாங்குள்ள ஜாதிதான் தனது சரித்திரத்தைக் காப்பாற்றிக் கொள்ளும் திராணியைப் பெற்றுள்ளது. மேலும் அந்த இனத்திற்கு ஒழுக்கமும் இருந்தால் அதுதான் சுதந்திரத்தோடு விளங்குவதற்கு தகுதியுடையதாகும்".

* * *

"உங்களுடைய பிள்ளைகள் ஆடம்பரமான காலாச்சார ஸ்தாபனங்களுக்குச் செல்கின்றனர். அங்கே அவர்கள் தங்களின் தாய் மொழியைக்கூட மறந்து விட்டு செத்துப்போன பாஷைகளிலேயே மகா பண்டிதர்களாகவும் விளங்குவார்கள்; பாட்டுக்களுக்கு அர்த்தம் தெரியாமலே பாட்டிசைப்பார்கள். துணிச்சல், விரிந்த மனப்பான்மை, நிதானம், ஈவிரக்கம்—இவைபற்றி அவர்கள் கிஞ்சித்தும் கவலை கொள்வது கிடையாது. தெய்வீக வாக்கு என்றுலே அவர்களுக்குப் பயம் உண்டாகிவிடும்"

"நமது நாகரீக வளர்ச்சி, திறமைக்கு முக்கியத்துவம் கொடுத்து பண்பியலை மலினமாக்கிவிட்டது. ஒரு மனிதன் 'நேர்மையுடையவனா' என்று மக்கள் கேட்கமாட்டார்கள். 'அவன் திறமைசாலியா?' என்றுதான் கேட்கின்றனர். அவனிடத்தில் திறமை இருந்தாலே போதும்; நன்றாக எழுதப்பட்டிருக்கும் புத்தகத்தை அதன் உபயோகத்தைப் பற்றி சிந்திக்காமலே ஏற்றுக் கொள்வார்கள்! நல்ல பேச்சாளர்களுக்குப் பரிசுகள் வழங்கப் படுகின்றன; ஆனால் நல்ல செயல்களுக்கு எவ்விதமான பரிசுகளும் வழங்கப்படுவது கிடையாது. தத்துவஞானிகள் என்று தம்மை அழைத்துக் கொள்பவர்களெல்லாம் வாய் ஜாலக்காரர்களான வெறும் வியாபாரிகளே! இப்படிப் பட்டவர்களைத்தானே உலகம் போற்றிப் புகழுகிறது! இவர்களின் உபதேசத் தத்துவங்களை சாசுவதமாக்கி வைக்க அச்சடிக்கும் கலையும் கண்டுபிடிக்கப் பட்டிருக்கிறது! (இந்த அச்சடிக்கும் கலையினால்தான் ஐரோப்பாக் கண்டத்தில் அதிகக் குழப்பம் உண்டாயிற்று!)

"எங்களைப் போன்றவர்களுக்குப் பரலோகம் ஒருவிதத் திறமையையும் கொடுக்கவில்லை; நாங்களும் இப்படியே இருந்து விடுகிறோம் கவனிப்பாரற்று! நாம் புகழைத்தேடி--நம் கைகளுக்கு எட்டாமற் ஓடிவிடும் புகழைத்தேடி—நாம் போக வேண்டாம். இந்த நிலையில் நாம் அதைத்தேடி ஓடினாலும், அது கிடைத்தபிறகு, அதற்காக நாம்பட்ட துயர்களையெல்லாம் திருப்பித்தாராது. நாம் நமது அபிப்பிராயங்களிலேயே மகிழ்ச்சி காணாமலிருக்கையில் பிறருடைய அபிப்பிராயங்களில் எதற்காக மகிழ்ச்சி பெறத் துடிக்க வேண்டும்"

[ரூஸோவுக்கு கலைகளைப் பற்றியும், விஞ்ஞானத் தத்துவங்களைப் பற்றியும், என்ன தெரியும். அவனுக்கு அவைகளைப்பற்றி தெரிந்தது மிக சொற்பமே. ஆனால் மனித சமுதாயத்திற்கு அவைகளால் ஏற்பட்ட விளைவுகளை ரூஸோ மிகத்தெளிவான நோக்கத்தோடு ஆராய்ந்தான். கலைகள், விஞ்ஞானங்களின் அபிவிருத்தியினால் ஏற்பட்ட விளைவுகளைவிட, நாகரீக அபிவிருத்தியால் ஏற்பட்ட விளைவுகளைப் பற்றித்தான் ரூஸோ இந்தக் கட்டுரையில் அதிகப்படியாகக் குறிப்பிடுகிறான்.]





## நூல்: இரண்டு

**மனிதர்களிடையே ஏற்றத்தாழ்வுகள் ஏற்பட்டதற்கு மூலகாரணமென்ன? இயற்கை நியதி அதனை அங்கீகரிக்கிறதா?**

***[ What is the Origin of Inequality among men and is it authorised by Natural Law? ]***

[இந்தக்கட்டுரை 1755-ம் வருஷம் 'டிஜோன்' கலைக்கழகத்திற்காக எழுதப்பட்டது. இந்தக் கட்டுரைக்குப் பரிசுப் பொருள் கிடைக்கவில்லை; ஆனால் பாராட்டுக் கிடைத்தது; உலகமெங்கணும் ஒரு புதிய விழிப்பை ஏற்படுத்தியது.]

[மனித சமுதாயத்தில் நிலவும் ஏற்றத் தாழ்வுகளுக்கு மூலகாரணம் தனிச் சொத்துரிமை என்றுதான் குறிக்கப் படுகிறது. ஆதிகாலத்தில் மனிதன் இயற்கை வாழ்வு வாழ்ந்து கொண்டு இஷ்டப்படியெல்லாம் திரிந்துக் கொண்டிருக்கும் பொழுது சொத்துரிமை கிடையாது. ஆனால் சுதந்திரமும், சமத்துவமும் இருந்தது. பழைய நல்ல பண்புகள் யாவும் பணப் பேயாசையும், ஆத்திரமும் உள்ள ஒருசிலரால் பின்னர் ஓட்டப் பட்டு விட்டன. சொத்து—பட்டம்—அந்தஸ்து, இவை மனித சமுதாயத்தில் ஏற்றத்தாழ்வுகளைப் புகுத்தி விட்டன. எல்லா மனிதர்களும் சமநிலையில் பிறக்கின்றனர் என்று ரூஸோ (பலர்

நினைப்பது போல) கூறவேயில்லை. சுதந்திர உரிமையுடன்தான் மக்கள் பிறக்கின்றனர்; ஆனல் சமத்துவ உரிமையுடன் அவர்கள் பிறப்பது கிடையாது. இயற்கையான ஏற்றத் தாழ்வுகளுக்கும், சமுதாய ஏற்றத் தாழ்வுகளுக்கும் ஒருவிதமான சம்பந்தமும் கிடையாது. ஒரு மனிதன் நேர்மைக் குணம் படைத்தவனுக, தேக ஆரோக்கியம் உள்ளவனுக இருக்கலாம்—ஆனல் இந்தக் காரணங்களுக்காக அவன் சமூகத்தில் இன்னல்களை அனுபவிக்கக் கூடாது என்ற நியதி கிடையாது. ஆனல், அறிவிலிகளும், முட்டாள்களும், அங்கஹீனமுள்ளவர்களும் பணமும் அந்தஸ்தும் பரம்பரையாகப் பெற்று; சமூகத்தில் உயர்ந்த அந்தஸ்துக்கள் வகிக்கலாம்—அவன் அரசனுகவும் இருக்கலாம்!

இந்தக் கட்டுரை—அனுதிகாலத்தில் இயற்கை வாழ்வு வாழ்ந்து வந்த ஆதி மனிதனின் வர்ணனையுடனும் ஆரம்பமாகிறது. இன்றைய சமுதாய அமைப்பும், தனிச் சொத்துரிமையும் இல்லாத ஆதிகாலத்து சமுதாயத்தில் சமத்துவ மனிதன் வாழ்ந்து வந்ததாக சித்தரிக்கிருன் ரூஸோ. ஆதலால் ஆதாமும் ஏவையும் வசித்த, சரித்திரத்திற்கு எட்டாத ஓர் அனுதியான சமத்துவ சமுதாயத்தை உருவாக்குகின்ருன் ரூஸோ. இந்த ஆதிகால சமத்துவ மனிதன் யாரென்றும் அவனின் வாழ்க்கையைப் பற்றியும் ரூஸோவால் தெளிவுடன் கூற முடியவில்லை—கூறவும் முடியாது!

ரூஸோவின் அந்த அனுதி மனிதனுக்குச் சரியான முறையிலே சிந்திக்கத் தெரியாது. ரூஸோ கூறுவது போல, அந்த ஆதி மனிதன், தன்னந்தனியனுய், யாதொரு தொழிலையும் செய்யாதவனுய், எப்பொழுதும் ஆபத்துத் தன்னை அணுகும் நிலையில் வாழ்ந்து வந்தான். தன்னைக் காப்பாற்றிக் கொள்ளவேண்டும் என்பதே அவனின் ஓயாத சிந்தனையாக இருந்துவந்தது. தனது பசியைத் தணித்துக் கொள்ள பிற மிருகங்களைக் கொன்றும், பிற மிருகங்கள் தம் பசியை அடக்கிக்கொள்ள தன்னைக் கொல்லாமலிருக்கத் தன்னைப் பாதுகாத்தும் வந்தான். இதனுல் காணும், கேட்கும், நுகரும் புலன் சக்தி அந்த மனிதனுக்கு அதிகரித்தது. வெகு தூரத்துக்கு தன் கண்களால் கூர்ந்து நோக்கும் சக்தியையும், பல பொருள்களின் வாசத்தை நுகரும் சக்தியையும் அவன் பெற்றிருந்தான். அவன் மனதில் "எண்ணங்கள்" (*Ideas*) உதயமாக வேண்டிய காரணத்தால், அவன் மேற்கூறிய சக்திகளின் தன்மையை சிறிது இழக்கவேண்டியிருந்தது. இப்படியாக அவன் மனதில், 'எண்ணங்கள்', உதயமாக ஆரம்பித்த பிறகு அவன் பாழான பாதையில் நடக்க ஆரம்பித்து விட்டான். தனது தேக இச்சைகளைப் பூர்த்தி செய்து கொண்டு, தனக்கு உணவும், பெண்ணும், நல்ல உறக்கமும், தங்க நிழலும் கிடைத்து —இந்த நிலையில் அவன் மிகுந்த சந்தோஷத்துடன் வாழ்ந்து

வந்தான். அவன் எண்ண ஆரம்பித்த பிறகு, அவனின் அமைதி குலைக்கப்பட்டது. கூட்டுறவால் உண்டாகும் நன்மைகள் இல்லாமல், தன் சகோதர மக்களிடமிருந்து பிரிக்கப்பட்டு, அவன் வாழத் தொடங்கினன். தனியான வாழ்க்கையை நாகரிக மனிதனுல் வாழ்ந்திருக்க முடியும்; காட்டு மனிதனுல் வாழ்ந்திருக்க முடியாது. பழைய மனிதன் நாய் போல மோப்பம் பிடிக்கும் சக்தியுடனும், பூனைபோல மரத்தில் ஏறி மகிழ்ச்சியுடனும் வாழ்ந்தான் என்றும் ரூஸோ வர்ணிப்பதை முழுவதும் ஒப்புக்கொள்ள முடியாது.]

[ரூஸோவின் எழுத்துப்படி, ஆதியில் மனிதன் இயற்கை வாழ்வு வாழ்ந்து கொண்டிருந்தான் தன்னந்தனியனுய். அப்போது ஒரு மனிதனுக்கு இன்னெரு மனிதனின் உதவியோ, தயவோ தேவைப்படவில்லை. அவனவன் தன் ஆகாராதிகளையும், இதரத் தேவைகளையும் தானே தேடிப் பூர்த்தி செய்து கொண்டான். தன் இச்சைப்படியெல்லாம் திரிந்தான்—வாழ்ந்தான்—மடிந்தான். இதனுல் தேகபலம் என்பதைப் பொறுத்தமட்டிலும் எல்லோரிடமும் சமத்துவம் தென்பட்டது. அதாவது ஒருவன் பலசாலி, இன்னெருவன் பலஹீனன் என்ற நிலை அப்பொழுது கிடையாது. எல்லோரும் ஒரேமாதிரி பலசாலிகளாக இருந்தார்கள். பல நூற்றுண்டுகளுக்குப் பிறகு, சீதோஷ்ண நிலை மாற்றம் முதலான பல்வேறு காரணங்களால், இதர ஏற்பாடுகளினுல், அவனவன் தன் பிழைப்பிற்கு மற்றவனின் உதவியை நாடவேண்டிய சந்தர்ப்பம் வாய்த்தது. பல பிரதேசங்களில் வசித்த மக்களிடையே போக்குவரத்து முதலான விவகாரங்களும் அதிகரித்தது. நாளடைவில் உலோகப் பொருள்களும் உபயோகப்படுத்தப்பட்டன. பிறகு விவசாய முறை தோன்றியது. பின்னர், தான் உழுது பயிரிட்ட நிலத்தைத் தனக்கே உடமையாகச் செய்து கொள்ளத் துவங்கினன்.]

"எந்த மனிதன் முதன் முதலாக, ஒரு சிறு நிலப்பரப்பைச் சுற்றி வேலியமைத்து 'இது என்னுடையது' என்று சொல்லிக் கொண்டானே, அதை எல்லோரும் நம்பி விட்டார்கள் என்று எவன் புரிந்து கொண்டு விட்டானே, அவன் தான் முதன் முதலில் சமுதாய அமைப்புக்கு அஸ்திவாரம் இட்டவன். ஆனுல் அப்போதே வேறு எவனுவது ஒருவன் அந்த முதல் மனிதன் போட்ட வேலியைப் பிடுங்கியெறிந்து, பள்ளங்களை நிரப்பி, தன் சகோதர மனிதர்களை நோக்கி, "இவன் ஒரு மோசக்காரன்; பூமியிலிருந்து விளையும் பொருள்கள் எல்லோருக்கும் பொதுவான உடமை! எவனெருவனும் அவைகளைத் தன்னுடையவை என்று சொல்லிக்கொள்ள முடியாது. இந்த உண்மையை நீங்கள் மறந்து விட்டீர்களானுல் உங்களுக்கு அழிவு காலம் நிச்சயம்—" என்று குரல் கொடுத்திருப்பானேயாகில் எத்தனையோ போராட்

டங்கள், குற்றங்கள், கொலைகள் முதலான கொடிய விஷயங்களின் கோரப் பேய்ப்பிடியிலிருந்து இந்த உலகம் தப்பியிருக்கும்.

[ஆனால் இந்த சொத்துரிமை திடீரென்று மனித மனதிலே முளைத்துவிடவில்லை. எத்துணையோ வருடங்களாக, படிப்படியாகவே நகர்ந்து, எண்ணங்களின் பரிணாம வளர்ச்சியிலே உழன்று இறுதியிலே இந்த இயற்கை இராஜ்யத்திலே சித்தி பெற்றிருக்கிறது.]

"பலவகைத் தொழில்கள் தோன்றின; குடும்பங்கள் அமைத்துக்கொள்ளப்பட்டன. மக்கள் வெறுங்கைகளால் மரக்கிளைகளை ஒடிப்பதை மறந்து, கற்களால் செய்யப்பட்ட கோடரிகளை உபயோகப்படுத்த முற்பட்டனர். அவர்கள் கோடரிகளை கண்டுபிடித்துக் கொண்டார்கள். பிறகு தாய்மைஅன்பும் குடும்ப ஒற்றுமையும் நிலவும் குடும்பங்கள் நிறுவப்பட்டன. மனிதன் மற்றொரு மனிதனின் உதவியை நாட ஆரம்பித்த பிறகு சமத்துவம் மறைந்தது; சொத்துரிமை நுழைந்தது; உழைப்பு ஆரம்பித்தது: காடுகள் யாவும் உழும் நிலங்களாக மாற்றப்பட்டன; இவை மனிதனின் வியர்வையால் நனைக்கப்பட வேண்டியிருந்தன. அடிமைத்தனமும், வறுமையும் பயிர்களின் அறுவடையுடன் ஆரம்பித்தன. "......" கூடி வாழ்வது அவசியமாயிற்று, இது இல்லாவிட்டால் மனித சமூகமும், மனித வாழ்க்கையும் முழுமை பெற்றிரா."

"பிறகு......?

மனிதர்களிடையே போட்டி ஆரம்பித்தது; இத்துடன் பல தீய காரியங்களும் பிறந்தன. பலவீனர்களும் ஏழைகளும், பலசாலிகளாலும் பணக்காரர்களாலும் மிதித்து நசுக்கப்பட்டனர். பிறகு பல மக்களிடையே போர்துவங்கி பல நாடுகளிடையே போரில் முடிந்தது. தேசாபிமானம் என்ற பெயரால் கொலைகளும், கொடிய கொடூரங்களும் செய்யப்பட்டன. மனிதனை மனிதன் கொன்று வாழும் கோரக்காட்சிகள் துவங்கின. அரசர்களின் ஆணைக்கு மக்கள் கீழ்ப்படிந்து, பகுத்தறிவையும், சுய அறிவையும் அடகுவைத்து, அதிகாரத்தின் உறுமலுக்கும் சீற்றத்திற்கும் மக்கள் ஆளாயினர். கொடிய காரியங்களைச் செய்யக் கடவுள் சாட்சிக் கூண்டுக்கு அழைக்கப்பட்டு நிறுத்தப்பட்டார்.

"சொத்துரிமை தோன்றியது — சமுதாயத்தில் ஏற்றத்தாழ்வுகள் முளைத்தன; மனித தேகத்தின் பலத்தில் கூடுதல் குறைச்சல்கள் தோன்றின. விபரீதப் பலன்கள் விளைந்தன. பணம் உடையவன்,—ஏழை, என்ற பிளவு பின்னர் வந்த சமுதாய சட்டங்களால் நிலை நிறுத்தப்பட்டன. பணமுடையவன் ஏழையைத் தன் கோரப்பாதங்களால் மிதித்து வாழ்வது—சுரண்டுவது மனிதத்தன்மை நிறைந்ததாகக் கருதப்பட்டது."



## நூல்: மூன்று

### எமிலி—அல்லது கல்வி ஆராய்ச்சி

### [ *Emile or a Treatise on Education* ]

[அந்தக் காலத்தில் பள்ளி சென்று கல்வி பயிலாத ஒருவன், குழந்தைகளுடன் பழகியறியாத ஒருவன், தான் பெற்ற குழந்தைகளை அநாதை விடுதியிலே கொண்டுபோய் வளரவிட்ட ஒருவன், கல்வியைப்பற்றி—படிக்கக்கூடிய முறையிலே, வெகு அழகாக எழுதியிருந்தான். அந்த புத்தகத்தின் பெயர்—எமிலி, அதை எழுதியவனின் பெயர் ரூஸோ! குழந்தைகளுக்கு எப்படிக் கல்வி கற்பிக்கப்படவேண்டும் என்பதைப்பற்றி இந்த நூலில் வெகு அழகாக—விவரமாக, எழுதியிருந்தான் ரூஸோ! 1762—ம் வருடம் இந்தப் புத்தகம் வெளிவந்தவுடன் ரூஸோவின் வாழ்வின் போக்கு முற்றிலும் மாறியது. இந்தப் புத்தகம் வெளியான பிறகுதான், பழமை விரும்பிகள் பலரால் வெறுக்கப்பட்டு ரூஸோ வேட்டையாடப்பட்டு, விரட்டியடிக்கப்பட்டான். பழமை நாற்றம் வீசி, புழுத்துப்போயிருந்த பழைய கல்வி முறையை ஒழித்துக்கட்ட வேண்டுமென்று ரூஸோ எண்ணினான். இப் புத்தகம் வெளியாகும்பொழுது ரூஸோவுக்கு வயது ஐம்பது.

“இருபது வருஷங்களாக சிந்தித்து மூன்று வருஷங்களில் எழுதினேன்” என்று இப் புத்தகத்தைப் பற்றி ரூஸோ குறிப்பிடுகின்றான். பிற்காலத்தில் வகுக்கப்பட்ட கல்வித் திட்டங்கள் அனைத்திற்கும் ரூஸோவின் இந்தக் கல்வி நூல்தான் அஸ்

வாரமாக அமைந்தது. கல்வியைப்பற்றிப் பிற்காலத்தில் எழுதியவர்களெல்லாம் ரூஸோவின் எண்ணங்களையே அடிப்படையாகக்கொண்டு எழுதினார்கள். ஆனால் புராதனச் சம்பிரதாயங்களிலும், பழைய மூடப்பழக்க வழக்கங்களிலும் மூழ்கிக்கிடந்த அப்போதையச் சமுதாயம் 'எமிலி'யை எழுதிய ரூஸோவைத் துன்புறுத்தியது. 1762-ம் வருஷம் பாரீஸ்பட்டின பார்லிமெண்டின் உத்தரவின்படி, பாரீஸ் பட்டினத்து நீதி மன்றத்தின் முன் இந்தப் புத்தகம் தீயிலிடப்பட்டுக் கொளுத்தப்பட்டது. ரூஸோ பாரிஸ் பட்டினத்தை விட்டு வெளியேறி, தான் பிறந்த மண்ணில் அடைக்கலம் நாடிப்போனான். அங்கும் அவன் புத்தகம் தீக்கிரையாயிற்று. ரூஸோ உள்ளே நுழையக்கூடாது என்று பல ராஜ்யங்கள் தடையுத்தரவு விதித்தன. ஐரோப்பா முழுமையிலும் ஒலித்த சாபக்குரல் அவன் காதுகளில் நுழைந்து ரீங்காரமிட்டது. மதத்துவேஷி, நாஸ்திகன், பைத்தியக்காரன், ஆவல் மிகுந்த ஓநாய், என்றெல்லாம் நிந்திக்கப்பட்டு ரூஸோ வெருட்டியடிக்கப்பட்டான். அத்தகையப் புரட்சிக்கு மூல வித்தான அப்புத்தகத்தின் சாரம் கீழே தரப்பட்டுள்ளது.]

[மக்களுக்குக் கல்வி மிகவும் அவசியமானதால், ஆண் குழந்தைகள் எப்படி வளர்க்கப்பட வேண்டும், எப்படிக் கல்வி கற்பிக்கப்பட வேண்டும் என்பதையும், மற்றொரு பகுதியில் பெண் குழந்தைகளின் கல்வி, வளர்ப்பு இவையைப் பற்றியும் விவரமாக விளக்குகின்றான் ரூஸோ.]

"கடவுளால் படைக்கப்படும் பொழுது எல்லாப் பொருள்களும் நல்லவையாகவே இருக்கின்றன; ஆனால் மனிதனின் கைபட்டு, மனிதனால் கையாளப்படும் பொழுதுதான் அவைகள் கெட்டுப் போகின்றன. மனிதன் ஒரு மண்ணிலே பிறக்கக் கூடிய பொருளை மற்றொரு மண்ணில் உற்பத்தி செய்ய முயலுகிறான்; ஒரு மரத்தின் கிளைகளில் பழுக்கக்கூடிய பழத்தை மற்றொரு மரத்தின் கிளைகளிலே எதிர்பார்க்கின்றான். எல்லாப் பொருள்களையும் உருமாற்றி அவைகளை விகாரப்படுத்தும் பணியில் ஆழ்ந்து விடுகிறான். உருக்குலைந்தவை, விகாரமானவை, அங்கஹீனமானவை, முதலானவற்றில்தான் மனிதன் ருசி கொள்கிறான். எந்தப் பொருளையும் அதன் இயற்கைத் தோற்றத்தில் காண அவன் விரும்புவதில்லை. இயற்கை உருவம் குலைக்கப்பட்ட செயற்கை உருவங்களையே அவன் நேசிக்கிறான். இயற்கையின் நிலைகளைக் குலைத்து, தனது விருப்பங்களுக்கு இணங்க அவைகளை மாற்றியமைத்துக் கொள்வதில் அவன் பிரியம் கொள்கிறான். இப்படி மனிதன் செய்யாமலிருக்க வேண்டுமானால், அவனது மேற்கூறிய கொடிய இச்சையை மாற்றியமைத்துக் கொள்ள வேண்டுமானால், சரியான கல்வி முறை அவனுக்கு மிக அவசியமானது. இந்தக் கல்வி இல்லாவிடில் மனிதனின் போக்கு மிகக் கேவலமானதாயிருக்கும்."

[உண்மைதான்! கல்வியைக் கற்றுக் கொடுக்க ஆரம்பிப்பதற்கு முன்பு, குழந்தையை அதற்கேற்ப தயார்ப்படுத்த வேண்டும். இதற்கு தேக ஆரோக்கியமும், மகிழ்ச்சி மருவும் மனமும், கூர்மையான உணர்ச்சிகளும் மிக மிக அவசியமானவை. இந்த விஷயத்தில்தான் ரூஸோ, அவனுக்கு முன்னும் பின்னும் கல்வியைப்பற்றி எழுதியவர்களிட மிருந்து வித்தியாசப் படுகிறன். கல்வியைச் சரியான முறையில் மிக இளம் பிராயத்திலேயே கற்றுக் கொடுக்க வேண்டுமென வற்புறுத்துகிறன் ரூஸோ. 'இளமையில் கல்' என்ற தமிழ் மூதுரைக்கு ஏற்ப ரூஸோவின்வாசகம் அமைந்துள்ளது.]

"மனிதன் பிறக்கும் பொழுது எந்த நிலையில் இருந்தானே அதே நிலையில் அவனை விட்டு விட்டால் அவன் ஒரு இராட்சதனுகவே மாறிவிடுவான். அவன் வாழும் சூழ்நிலை அவனின் இயற்கைத் தன்மையை நிச்சயமாக நிலைகுலையச் செய்து விடும். கல்வி பெருத மனிதன் தனது தேவைகள் இன்னதென உணராமலேயே இறந்து போவான். அவனுடைய இயற்கைத் திறமைகளை வளர்த்துக் கொள்ளவோ, அவற்றினல் பயன் பெறவோ முடியாது. கல்விதான் மனிதனைப் பண்படையச் செய்கிறது. எத்தனையோ விதமான சம்பிரதாயப் பந்தங்கள் மனிதனின் இயற்கைத் தன்மையை நாசமாக்கி அவனைச் சீரழித்து வருகின்றன. ஆதலால் குழந்தையின் இளம் பிராயத்திலேயே அதற்குரிய கல்வியை ஆரம்பித்து அதன் வாழ்க்கையில் எவ்விதமான மூடப் பழக்க வழக்கங்களோ, சம்பிரதாயப் பந்தங்களோ நுழையவிடாமல் பாதுகாக்க வேண்டும்."

"தாயே பிள்ளைகளின் வளர்ப்பைக் கவனித்து வரவேண்டும். தாய் எப்படியோ, அப்படித்தான் குழந்தையும். தாயின் குணங்கள் யாவும் அப்படியே குழந்தைக்கு அமைந்து விடும். எனவே, தாய் தனது குழந்தையின் பராமரிப்பில் அதிகக் கவனம் செலுத்த வேண்டும். தாய் தனது சுயவளர்ச்சியிலும் அதிகக் கவனம் செலுத்தி வரவேண்டும். சர்வ ஜாக்கிரதையுடன் இருந்து வரவேண்டும். தாய்மார்கள் தங்களின் குழந்தைகளின் கவனிப்பை சம்பளம் பெறும் வேலைக்காரிகளிடமோ, செவிலித் தாய்களிடமோ ஒப்புவிப்பது தவறு. சில தாய் மார்கள் தங்களின் குழந்தைகளை மிகுந்த கவனத்துடன் காப்பாற்றுவதாக நினைத்து அவர்களைக் கெடுத்து விடுகிருர்கள். இயற்கையின் பரிசோதனைகளுக்கு குழந்தைகளைஉட்படுத்திப் பழக்காமல், இயற்கையிலிருந்து அவர்களைக் (குழந்தைகளை) காப்பாற்றி, கடைசியில் விபரீதமான ஆபத்துக்களுக்கு உள்ளாக்கி விடுகின்றனர். அதனல் ஆபத்துக்களைப் பொறுத்துக் கொள்ளக்கூடிய மனப்பாங்கு குழந்தைக்கு இல்லாமற் போய்விடுகிறது. தாயானவள் தன் குழந்தையை எல்லாவிதமான அனுபவங்களிலும் பழக்கப்படுத்த வேண்டும்.

உலக வாழ்க்கையின் பலவித கஷ்ட நஷ்டங்களை குழந்தையை அனுபவிக்கச் செய்ய வேண்டும். இப்படிச் செய்வதால்தான் குழந்தையின் வயது வளர வளர அது உலகத்தின் பலவித கஷ்ட நஷ்டங்களைப் பொறுத்து, வாழ்க்கையைச் சுவைத்து ரசிக்கும் மனேபாவம் வளரும்"

[தாய் தனது குழந்தைக்குச் சுதந்திரம் தவழ்ந்தாடும் சூழ் நிலையில் பாடங்களைக் கற்றுக்கொடுக்க வேண்டும். ஆனல் தந்தை என்ன செய்ய வேண்டும்? இன்றைய ஆட்சியின் கீழ் தந்தைக்கு இருக்கும் வேலைகளோ அதிகம். பிள்ளைகளுக்குக் கல்வி கற்றுக் கொடுக்க அவருக்கு அவகாசமே கிடையாது. ஆதலால் தன் பிள்ளைகளுக்குக் கல்வி கற்றுக்கொடுக்க நல்லதோர் உபாத்தி யாயரை நியமித்துக் கொடுப்பது போதுமானது. இப்படியாக நியமிக்கப்படும் உபாத்தியாயர், இளம்வாலிபனுகை, குழந்தைக்கு எல்லாத்துறைகளிலும் சிறந்த வழிகாட்டியாக விளங்கவேண்டும்; சிறந்த நண்பனுகவும் இருந்து வரவேண்டும். பிள்ளைக்கு முதற் பாடங்களைச் சொல்லிக் கொடுக்கக்கூடிய திறமைசாலியாக இருக்கவேண்டும். இந்த நிலையில் கல்விகற்றுக் கொடுக்கப்பட வேண்டிய எமிலி என்ற மாணவன் புத்தகத்தில் அறிமுகப் படுத்தப் படுகிறுன். அவன் இளைஞன்; சீமான் குடும்பத்தைச் சேர்ந்தவன்; தாய் தந்தையற்றவன். கல்வி கற்றுக்கொடுக்கப் போகும் உபாத்தியாயர் வேறுயாருமல்ல; ரூஸோ !.]

"குழந்தையின் வளரும் பாதையிலிருந்து மருத்துவ வைத்தி யர்கள் விலக்கப்பட வேண்டும். மாணுக்கனின் தேகபலம் விருத்தி யடைதல் வேண்டும். வலிமையற்ற உடலுக்குள் வலிமையற்ற மனம்தான் இருக்கும்—இருக்க முடியும். குணப்படுத்துவதாகக் கூறும் கொடிய நோய்களைவிடக் கொடியது--மருத்துவக் கலையும் மருத்துவ உலகமுமேயாகும்."

என்னைப் பொறுத்தவரையில் வைத்தியர்கள் குணப்படுத்துவ தாகக் கூறும் நோய் என்னவென்று எனக்கே தெரிவதில்லை— ஆனல் அவர்கள் குணப்படுத்தும் நோயாளிகளுக்கு என்ன நோய் களைக் கொடுக்கின்றனர் என்பது மட்டும் எனக்குத் தெரியும். அவை பயம், பேதமை, மரணத்தைப் பற்றிய அச்சம்! இவைகள் தாம் வைத்தியர்கள் உண்டாக்கும் நோய்கள். அவர்கள் உடம் பைக் குணப்படுத்துவதுடன், மனதின்கண் உள்ள தைரியத்தை யும் துப்புரவாகக் கொன்றுவிடுகின்றனர்."

[வைத்தியர்கள் மனிதர்களை நடைப்பிணக்களாகச் செய்து விடுகின்றனர். நமக்கு வேண்டியது மனிதர்களே; உயிரற்ற சடலங்களல்ல.]



"மருத்துவக்கலை, நாகரீகத்தின் முகமூடியை அணிந்துகொண்டிருப்பது; அது படாடோபமும், ஆடம்பரமும் மிக்கது; அது வேறு வேலையற்ற சோம்பேறிகளின் பொழுதுபோக்கு. மருத்துவ வைத்தியர்கள் சாகாவரம் பெற்றுவிட்டால் உலகத்திலேயே இழிவுள்ள உதவாக்கரைகளாக மாறிவிடுவார்கள். நோயை ஒழித்து அறிவூட்டும் உண்மையான மருத்துவ விஞ்ஞானத்தையும், மக்களை ஏமாற்றி உயிரை உறிஞ்சும் மருத்துவக் கலையையும் நாம் எப்படி வித்தியாசப்படுத்துவது? மருத்துவக்கலை நன்மை பயக்கிறது என்று நான் சொல்லவேமாட்டேன்; அது மனித இனத்திற்கே மிகவும் ஆபத்தானது."

[ஜுரத்தைத் தாங்கக்கூடிய சக்தியை குழந்தையின் உடல் வளர்த்துக் கொள்ளவேண்டும். ஜுரமானது இயற்கையாகவே குணமடையவேண்டும். ரூஸோ மருத்துவ வைத்தியத்தை எதிர்த்து, இயற்கை வைத்தியத்தினையே ஆதரிக்கிறன்.]

"வைத்தியக் கலையின் மிக முக்கியமான பாகம் சுகாதாரமேயாகும்; உழைப்பும் தன்னடக்கமும்தான் மனிதனுக்கு மிகச் சிறந்த வைத்தியர்கள். உழைப்பு மனிதனுக்குப் பசியை உண்டாக்குகிறது; அதிகப்படி அவன் சாப்பிட்டு தேக நலத்தைக் குலைத்துக் கொள்ளாமலிருக்க தன்னடக்கம் அவனுக்கு உதவுகின்றது."

[இளம்பிராயத்திலேயே ஆரம்பமாகும் கல்வி எந்த வயதில் முடிவடையவேண்டும்? ஒவ்வொருவரும் தம் சந்தர்ப்பத்திற்கேற்றபடி, சுற்றுச்சார்பு, சூழ்நிலை இவைகளுக்கேற்பவே கல்வி பயின்று வருவார்கள். "மனிதன் தன் முழுக் கல்வியைக் கற்றுவிட்டான்; அதற்குமேல் அவன் கற்கவேண்டியது ஒன்றுமே கிடையாது" என்று எந்த ஞானியும் கூறியது கிடையாது! மனிதன் தன் இயற்கையின் விளிம்புகளையும் முடிவுகளையும் அவனலேயே காண முடியாது.]

[எமிலிக்கு—அவன் ஆசிரியன் துப்பாக்கி முதலிய ஆயுதங்களைப் படிப்படியாக உபயோகிக்க கற்றுக்கொடுக்க வேண்டிய முறையும் அழகாகக் கூறப்பட்டுள்ளது.]

"சிந்தனை செய்ய ஆரம்பிப்பது மிகவும் சுலபமான காரியமல்ல; ஆனல் ஒருமுறை மனிதன் சிந்திக்க ஆரம்பித்துவிட்டால் பிறகு அவன் சிந்திக்கும் பழக்கத்தை கைவிடவே மாட்டான்; மாணக்கன் உலகத்தையும், இயற்கையையும், பூமியின் மேலுள்ள பல பொருள்களையும் ஊடுருவிப் பார்த்து கவனித்து (*Observation*) பிறகு தனக்குத்தானே சிந்திக்க ஆரம்பிக்க வேண்டும்."

"சிறுவனுக்கு வயதான பிறகே சரித்திரம் கற்றுக் கொடுக்கப்பட வேண்டும். ஆனால் சங்கீதம் பற்றி அவனுக்குச் சீக்கிரத்தில் தெரிந்துவிட வேண்டும்."

"செடி நன்றாக வளர வேண்டுமானால், மண்ணைக் கிளறி, காலா காலத்தில் நீர் பாய்ச்சி, எருவிட்டு, புழு பூச்சி முதலியன அணுகாதபடி காப்பாற்றப்பட வேண்டும். இது போலவே மனிதன் பண்பாடு பெற வேண்டுமானால் அவனுக்குக் கல்வி மிகவும் அவசியமானது."

"நல்ல உயரமுள்ளவனாகவும், பலசாலியாகவும் பிறக்கும் மனிதனுக்கு அந்த உயரத்தையும், பலத்தையும் உபயோகிக்கத் தெரியவேண்டும்; இல்லாவிடில் அவைகளால் அவனுக்கு ஒருவித உபயோகமும் கிடையாது; அதற்கு மாறாக அவனுக்கு அவைகளால் தீங்கு நேரிடலாம். அவன் திடகாத்திரமானவன் என்று தெரிந்த மக்கள் அவனது ஆபத்துக் காலத்தில் அவனுக்கு முன் வந்து உதவி செய்யாமல் இருந்துவிடக்கூடும்."

"நாம் பிறக்கும் சமயத்தில் பலத்துடன் பிறப்பது இல்லை; ஆனால் நமக்கு வாழ்க்கையில் பலம் தேவைப்படுகிறது. நமக்கு மற்றவரின் உதவி, பகுத்தறிவு எல்லாம் தேவைப்படுகின்றன. நாம் பிறக்கும் சமயத்தில் நம்மிடத்தில் இல்லாதவைகளை, நமது வாழ்க்கையில் தேவைப்படுபவைகளை—இவை எல்லாவற்றையும் கல்வி நமக்கு அளிக்கிறது. இந்தக் கல்வியை நாம் மூன்று வழிகளிலிருந்து பெறுகிறோம்—இயற்கையிலிருந்து, சகோதர மனிதர்களிடமிருந்து, நம்மைச் சுற்றியுள்ள பொருள்களிடமிருந்து! நமது அங்க அவையங்கள், புலன்கள் இவைபெறும் வளர்ச்சி--நமக்கு இயற்கையிலிருந்து கிடைக்கும் கல்வியாகும். இந்த வளர்ச்சியை எப்படிச் சரியான முறையில் உபயோகிப்பது என்பது நம் வாழும் சகோதர மனிதர்களிடமிருந்து நாம் பெறும் கல்வியாகும்; நம் சூழ்நிலையில் நமக்கு ஏற்படும் அனுபவங்கள், நாம் சுற்றுப்புறப் பொருள்களிடமிருந்து பெறும் கல்வியாகும். இம் மூன்றுவிதப் பேராசிரியர்களின் போதனைகளில் மாறுபாடு உண்டாகும் காலத்தில்தான் மனிதனுடைய வளர்ச்சி குன்றுகிறது."

"இம் மூன்றுவிதப் போதனைகளில் இயற்கையின் போதனையும், சுற்றுபுறப் பொருள்களின் போதனையும் மனிதனுடைய அதிகாரத்திற்கு அடங்காதவை; மனிதன் போதிக்கிற போதனையைக் கட்டுப்படுத்த முடியும் என்று நினைப்பதுகூட வெறும் மயக்கம்தான். கல்வியில் பூரணவெற்றி அடையமுடியும் என்பது இயலாத காரியம்."

"ஒரு செடியை நேராக நிமிர்த்தி வளர்த்தோமானால் அது நிமிர்ந்து வளருகிறது; குறுக்கே படுக்கவைத்து வளர்த்தோமானால்

அது அப்படியே வளருகிறது. அது எப்படி வளர்ந்தாலும் அதன் தன்மைகள் மாறுபாடு அடைவதில்லை! அது போலவே மனிதன் வாழும் சூழ்நிலையையும், சுற்றுச் சார்பையும் ஒட்டியே அவனுடைய பழக்க வழக்கங்கள் அமையும். சூழ்நிலைகள் மாறினல்—பழக்க வழக்கங்கள் மாறும். சிலர் கல்வியை புகழ்வதும் இகழ்வதும், போற்றுவதும் தூற்றுவதும், அவரவரின் சூழ்நிலையைக் கொண்டே அமையும்."

"இயற்கையைப் பொறுத்த மட்டில் எல்லா மனிதர்களும் சமமானவர்களே. எல்லா மனிதர்களின் தொழிலும் மனிதத் தன்மையுடன் வாழ்வதுதான். மனிதத் தன்மையுள்ள மனிதன் எந்தத் தொழிலில் பிரவேசித்தாலும் அதில் சிறந்து விளங்குவான்."

"கல்வியின் நோக்கம் யாது? மனிதனையும், அவன் வாழும் சூழ்நிலையையும் புரிந்துகொள்வதுதான். வாழ்வின் சுகதுக்கங்களை ஒரே மாதிரியாகப் பாவிப்பவர்கள் சிறந்த முறையில் கல்வி பயின்றவர்களாவார்கள். கற்றலில் சிறந்து நிற்க வேண்டும். நாம் எப்பொழுது வாழத் துவங்குகின்றோமோ அப்பொழுதே கல்வி கற்கத் துவங்குகிறோம்."

"குழந்தைகளுக்கு எளிமையான பழக்க வழக்கங்களையே கற்றுக் கொடுக்கவேண்டும். ஆடம்பரமான, பகட்டான உடைகளால் அவர்களை உடுத்தி வருவோமானால் அவர்கள் நாளடைவில் கெட்டுப்போவார்கள். கோடை காலத்திலும், குளிர் காலத்திலும் ஒரே மாதிரியான உடைகளில் அவர்களை உடுத்திப் பழக்கவேண்டும். அவர்கள் தங்களைத் தாங்களே கவனித்துக் கொள்ளும் மனப்பாங்கு பெறும்படி செய்யவேண்டும். சிலர் சிறு குழந்தைகளுக்கு எல்லாவித ஆடைகளையும் அணிவித்து உருத்தெரியாமல் செய்துவிடுகின்றனர். இதுபோன்ற குழந்தைகள் நாளாவட்டத்தில் மெலிந்து எளிதில் நோய்வாய்ப்பட்டு நலிகின்றன. தலையில் ஒருவிதத தொப்பியும் அணிந்து கொள்ளாமலிருப்பது நன்று! குழந்தைகள் தாகமென்று கேட்டால் குளிர்ந்த நீரைக் கொடுக்கவேண்டும். வேறுவிதமான பானங்களைக் கொடுத்துக் கொடுக்கக்கூடாது.

"சிறுவயதில் குழந்தை சுதந்திரமாக வாழட்டும். வாழ்வின் இன்பங்களோ சில; அதுவும் இளம் பிராயத்தின் நினைவுகளோ மிகவும் இன்பம் நிறைந்தவை."

"மாணவன் தான் வாழும் உலகத்தில் தனக்கான இடத்தைப்பற்றித் தெளிவாகத் தெரிந்துகொள்ளவேண்டும். உழைப்பில் அவன் தனது சிறு வயதிலிருந்து விருப்புக்கொள்ளவேண்டும். அவனுக்கு வயதானதும் தச்சு வேலைக்கான கருவிகள் அவனுக்

குக் கொடுக்கப்படவேண்டும். தச்சு வேலை மிகவும் சிறந்தது! உடலுக்கும், உள்ளத்திற்கும் நல்ல உழைப்புத் தருவது"......" எமிலி, இந்தத் தச்சு வேலைக்கான கருவிகளையும் இதரக் கருவிகளையும் உடைத்துவிட்டால், உடனே புதிய கருவிகள் கொடுத்து விடாதீர்கள்—தனது உடைமைகளின் மதிப்பைப் பற்றி அவன் தெரிந்துகொள்ளவும் அவைகளைக் கவனித்துக்கொள்ளும் பொறுப்பையும் உணர வேண்டும்.]

"வெறும் பயனற்ற வார்த்தைகள் அவன் உள்ளத்தில் நிரப்பப்படக்கூடாது; மனப்பாடம் செய்யும் பழக்கத்தை அவன் கற்றுக்கொள்ளவே கூடாது; குழந்தையின் இளகிய இளம் உள்ளம் கண்ணாடிபோன்றது; அது பார்க்கும் பொருள்களெல்லாம் அந்தக் கண்ணாடியில் பிம்பமாகத் தெரியும்; அப்பொருள்கள் அதன் கண் முன்னிருந்து விலக்கப்பட்டால் கண்ணாடியிலிருந்து பிம்பம் மறைந்துவிடும். மனப்பாடம் செய்து குழந்தை ஒப்புவிக்கும் விஷயமும் அது போன்றதுதான். அப்போது அவன் ஒப்புவிக்கும் விஷயங்கள் அதைக் கேட்பவர்களுக்குத்தான் விளங்குமே தவிர, அந்தக் குழந்தைக்கு விளங்கவே விளங்காது! இந்த மனப்பாட முறை மிகவும் மோசமானது."

"எமிலி இயற்கையின் மாணக்கனாக வளர்ந்து வரவேண்டும்; அவன் தன் சொந்த அனுபவங்கள் மூலமாகவே பல விஷயங்களைப்பற்றித் தெரிந்துகொள்ளவேண்டும். வெறும் கால்களுடன், செருப்பு அணிந்துகொள்ளாமல் அவன் இங்கு மங்கும் ஓடி விளையாடவேண்டும். உபாத்தியாயரும் அவனைப் பின்பற்றி ஓடி விளையாடவேண்டும். ஆனால் அவன் பாதையில் உள்ள கண்ணாடித்துகள் விலக்கப்படவேண்டும்."

"குழந்தைகள் எளிய, சாதாரண உணவுகளைச் சாப்பிடப் பழகவேண்டும்; தேவையான அளவுக்கே அவர்கள் சாப்பிட வேண்டும்; ஓடி விளையாடி மகிழவும் வேண்டும்."

"குழந்தைகளின் உயிரைக் காப்பாற்றி விட்டால் போதும் என்று நினைப்பது மிகவும் தவறானது; அவர்கள் பெரியவர்களான பிறகு தங்களின் உயிர்களைக் காப்பாற்றிக் கொள்வது எப்படி என்பதைத் தெரிந்துகொள்ள அவர்கள் மாணவர்களாயிருக்கும்பொழுதே கற்றுக்கொடுக்கவேண்டும். சுகதுக்கத்தையும், செல்வத்தையும் வறுமையையும், உஷ்ணத்தையும் குளிரையும் ஒரே மாதிரியான மனப்பான்மையுடன் பொறுத்துக்கொள்ளும் மனப்பக்குவம் குழந்தைகளுக்கு உண்டாகவேண்டும். மரணத்திலிருந்து எப்படித் தன்னைக் காப்பாற்றிக்கொள்வது என்று குழந்தைக்கு போதிப்பதைவிட, அதற்கு வாழ்வதெப்படி என்று கற்றுக்கொடுப்பது சாலச் சிறந்ததாகும். வாழ்க்கை என்றால் என்ன அர்த்தம்; மூச்சு விட்டுக்கொண்டிருப்பதா? இல்லை

நிச்சயமாக இல்லை! நமது மனதை, நமது இந்திரியங்களை, நமது சக்திகள் எல்லாவற்றையுமே உபயோகத்திற்குக் கொண்டு வருவதுதான் வாழ்க்கை! இந்த உலகத்திலே நமக்கென்று ஒரு தனித்துவம் உண்டு என்று எப்பொழுதும் நம்மை உணரும்படி செய்துகொண்டிருப்பதுதான் வாழ்க்கை! நீண்ட நாட்களுக்கு உயிருடன் வாழ்ந்திருப்பது வாழ்க்கை ஆகாது. வாழும் ஒவ்வொரு விநாடியும் வாழ்ந்துகொண்டிருக்கிறோம் என்று உணர்ந்து வாழ்கிறோமே அதுதான் உண்மையான வாழ்க்கை"

"தனது பன்னிரண்டாவது வயதில் எமிலி தனது முதல் புத்தகமான- 'ராபின்சன் குரூஸோ'வைப் படிக்கவேண்டும். பூகோளப் பாடத்தையும், பிரபஞ்ச அமைப்புப் பற்றிய பாடத்தையும் அவன் தன் அனுபவ மூலமாகவே கற்க வேண்டும்."

"காந்த சக்தி பற்றிய விஞ்ஞானப் பாடத்தை அவன் தெரிந்து கொள்ள வேண்டும். கண்ணாடி டம்ளரில் தண்ணீரை நிரப்பி அதில் குச்சியைப் போட்டால் ஒளியின் '*Refraction*' பற்றிய விளக்கம் அவனுக்குத் தெரிந்துவிடும். அவனுக்குத் தெரியும் விஷயங்களெல்லாம் அவன் புரிந்துகொண்டவைகளாக இருக்க வேண்டும்."

"பதினைந்திலிருந்து இருபது வயதுவரை எமிலியின் கவனிப்பு ஜாக்கிரதையாக இருக்க வேண்டும்; இப்பொழுது தான் அவனைச் சரியான முறையில் சிந்திக்கவைக்க வேண்டும்; சிந்திப்பது சுலபமானதல்ல; ஒரு முறை சிந்திக்கத் துவங்கி விட்டால் அவன் சிந்தித்துக்கொண்டே யிருப்பான். இப்போது எமிலி, புளூடார்ச் (*Plutarch*) எழுதிய வாழ்க்கை வரலாறுகளைப் படிக்க வேண்டும்."

"உழைக்கவேண்டும். சம்பாதித்து வயிற்றை நிரப்புவதற் கல்ல; சமூகத்தில் உரிய பெருமையுடன் வாழ்வதற்கு!"

"நகரங்களில் வாழ்வது எனக்குப் பிடிக்காது; மற்றவர் களுக்கு ஒருவன் உதாரண புருஷனாக (*Ideal man*) இருக்க விரும்பினால் அவன் கிராமததில்தான் வாழவேண்டும். மனிதனுக்கு வயதான பிறகு கிராம வாழ்க்கைதான் மிகவும் சிறந்ததாகும்."

"சில சமயங்களில் எமிலியின் உள்ளத்தில் இரக்கத்தையும் பச்சாதாபத்தையும் தளிர்விடச் செய்யும் காட்சிகளைக் காண்பித்து வர வேண்டும்."

"மாணவன் 'இயற்கையான நம்பிக்கை' (*Natural faith*) என்பதைப் பற்றித் தெரிந்துகொள்ள வேண்டும். இந்த நம்பிக் கையின் தத்துவம் என்ன? கடவுளியலை நம்ப வேண்டும்— கடவுளை உலகமாகக் காணவேண்டும். ஆனால் வேதப் புத்தகம்,

கோவில், குருமார், வழிபாடு, சாங்கியங்கள் ஒன்றுமே வேண்டாம். பலவிதமான தெய்வங்களும் பலவிதமான மதங்களும் அநியாயத்திற்கும், துன்பத்திற்கும், துவேஷத்திற்குமே வழி வகுக்கின்றன.''

"வாழ்க்கை என்பது என்ன? மனித ஆத்மா அழியாதது? சிரஞ்சீவியானதா? இது எனக்கே தெரியாது! எனது எல்லையுள்ள அறியும் சக்தி, எல்லையற்ற எதையும் காணமுடியாது! அழிவற்றது, முடிவற்றது—இவையெல்லாம் என்னைப் பொறுத்த வரை என் அறியும் சக்தியினின்று தப்பியோடி விடுகின்றன. என்னால் எதை ஊர்ஜிதப்படுத்த முடியும், எதை மறுத்துவிட முடியும்?... இறுதியில் மனித உடல் மரணத் தீயால் தீய்க்கப் பட்டு, பாகம் பாகமாக பிரிக்கப்பட்டு அழிவுறுகிறது என்று என்னால் காண முடிகிறது... ஆனால் இது போலவே மனிதனின் சிந்திக்கும் அங்கம் எப்படி அழிவுறுகிறது என்று என்னால் காணவே முடிவதில்லை; அது எப்படி இறக்கின்றது என்று என் கற்பனையிலும் கற்பித்துப் பார்க்க முடியாத நான், அது இறப்பதில்லை என்று எண்ணவேண்டியுள்ளது.''

[உண்மை என்பதில் தான் கடவுளைக் காணவேண்டும்; உண்மை நிறைந்த அர்ப்பணத்தைக் கடவுளால் புறக்கணிக்க முடியவே முடியாது! மதத்தின் கடமைகள் - மனிதனின் கோவில் கூட்டங்களுக்கு அப்பாற்பட்டவை; நீதி நிறைந்த உள்ளம்தான் உண்மையான கடவுளின் கோவில்; நம்பிக்கையின்றி, நற்குணம் இல்லை!]

[மேற்கூறியுள்ள ரூஸோவின் வாசகத்தைக் கேட்டு மத குருமார்கள் அவன்மீது பாய்ந்து எதிர்த்தனர். சமூகத்தை விட்டே ரூஸோ துரத்தப்பட வேண்டும் என்று உறுமினர்.]

"வேதாந்தம், தத்துவஞானம் இவைகளைவிட மதத்தால் அதிக நன்மை உண்டு; தத்துவஞானம் நன்மை செய்ய நினைப்பதைவிட மதம் அதிக நன்மை செய்துள்ளது'' என்றும் கூறுகின்றான் ரூஸோ!

['எமிலி'யின் கடைசி அத்தியாயத்தில், ஸோபி (*Sophie*) என்ற பெண்ணுக்குக் கல்வி கற்றுக்கொடுக்கவேண்டிய முறையைப் பற்றி எழுதுகிறான் ரூஸோ. ஸோபி என்ற பெண் பிற்காலத்தில் எமிலியை மணக்கவேண்டியவளாம். "பெண்களைப் பெண்களாகவே வளர்க்க வேண்டும். அவர்களை ஆண்களாக வளர்ப்பது கூடாது; அப்படியாக வளர்ப்பது வளர்ப்பவர்களுக்கே கெடுதல்'' என்பது அடிப்படைக் கருத்து.]

[நவீனக் கண்களுடன் 'எமிலி'யை நோக்கும்பொழுது என்ன குற்றங்கள் தென்பட்டாலும், 'எமிலி' ரூஸோவின்

சிறந்த எழுத்துப் படையலாகும். இது எழுதப்பட்ட காலத்தில் இதன் புதுமை மணம் எல்லோரையும் கவர்ந்தது. ருஷிய ஞானி டால்ஸ்டாய் தன் பிள்ளைகளை இந்த முறையில்தான் வளர்த்தாராம். தாய் தந்தையரின் மனதில் ஒளியைப் புகுத்தி, அவர்கள் தம் பிள்ளைகளுக்கு வேண்டிய விஷயங்களை இந்நூல் உணரச் செய்தது. வளரும் உடலின், வளரும் உள்ளத்தின் தேவைகளைப் புரியவும் வைத்தது; புதுமை விரும்பிகளுக்கு எண்ணப் படையலாகவும் விளங்கியது. இதை மதவாதிகள் வெறுத்தனர். எந்த வைதீகக் குருவும் இந்தப் புத்தகத்தை கண்ணெடுத்துப் பார்க்கவும் அஞ்சினன். "இந்தப் புத்தகத்தைக் கொளுத்துங்கள்! அதை எழுதியவனைக் கொளுத்த முடியாவிட்டாலும், புத்தகத்தை எரித்த சாம்பல் காற்றில் தூவப்படட்டும்" என்ற அபாயக்குரல் வைதீக பீடமெங்கும் கேட்டது. இந்தப் புத்தகம் வெளிவந்த பிறகு ரூஸோ வேட்டையாடப்பட்டான். அவன் புத்தகங்கள் அவன் கண்முன்னே கொளுத்தப்பட்டன. ஆனால் அவன் ஒரு ஜீவ நதி; அதைச் சகதிக்குட்டை என்று தூற்றியவர்களெல்லாம் இப்போது மறைந்துவிட்டனர்; ஜீவநதியோ எப்பொழுதும்போல ஓடி, மனித ஜாதியை வளப்படுத்திக்கொண்டே யிருக்கிறது!]





# நூல்: நான்கு

## சமுதாய ஒப்பந்தம்

## [ *The Social Contract* ]

## முன்னுரை

இப்பொழுது மக்கள் வாழும் வாழ்க்கை முறையையும், அவர்களுக்காக இயற்றப்படும் சட்டங்களையும் வைத்துக்கொண்டு மக்களின் பொது வாழ்வு சம்பந்தப்பட்ட விஷயங்களில், ஒருவிதக் குறிப்பிட்ட ஒழுங்கான, நியாயமான முறையில் இவைகளை அமைப்பது இயலுமா? என்ற ஆராய்ச்சியை நான் இங்கு செய்யப்போகிறேன். மக்களுக்கு வழங்கப்படும் நீதி அவர்களுக்குப் பயனுடையதாக இருப்பதற்கு, நீதி வேருகவும் பயன் வேருகவும் பிரிந்து போகாமல் இருப்பதற்காக, மக்களின் உரிமைகளையும் நன்மைகளையும் ஒன்றுபடுத்திக் கொண்டே எனது ஆராய்ச்சியில் இறங்குவேன்.

அரசியல் விஷயங்களைப் பற்றி எழுதுவதற்கு நான் என்ன அரசனு, அல்லது சட்டங்களை இயற்றுபவனு என்ற கேள்விகள் என்னைப்பற்றிக் கேட்கப்படலாம். அல்ல என்றுதான் பதில் கூறுவேன்; அதே காரணத்தால்தான் நான் அரசியலைப்பற்றி எழுதுவேன் என்று கூறுவேன். நான் ஒரு அரசனுகவோ அல்லது சட்டங்களை இயற்றுபவனுகவோ இருந்தால் என்னென்ன செய்யப்பட வேண்டுமென்பதைப் பற்றியே காலத்தை வீணுக்கிக்

கொண்டிருக்க மாட்டேன். என்ன செய்யவேண்டுமோ அவற்றைச் செய்வேன்; இல்லையேல் ஒன்றும் பேசாமல் மௌனமாகவே இருந்து விடுவேன்.

ஒரு சுதந்திர அரசின் பிரஜையாகப் பிறந்த நான், அதனுடைய அரசியல் அமைப்பில் அங்கம் வகித்து வருவதால், பொது ஜன விவகாரங்களைப் பற்றிப் பேசுவதற்கு எனது குரலானது எவ்வளவுதான் பலஹீனமாக இருந்தாலுங்கூட, அவற்றைப் பற்றிய அபிப்பிராயங்களைத் தெரிவிக்க எனக்கு நிச்சயமாக உரிமையுண்டு; அவற்றைப்பற்றி நான் அதிகம் அறிந்துகொள்ள வேண்டிய கடமையும் உண்டு. பற்பல அரசாங்கங்களின் அரசியல் அமைப்புப்பற்றி நான் ஆராய்ந்து வருகையில் என் பிறந்த நாட்டை நேசிக்க வேண்டியப் புதுப் புதுக் காரணங்களைத் தேடுவேன். அவற்றைக் கண்டு பிடித்தால் நான் ஆனந்த மடைவேன்.

## 1. முதல் விஷயம்

மனிதன் பிறக்கும் பொழுது சுதந்திரம் உள்ளவனுகத்தான் பிறக்கிறுன். ஆனுல் எங்கே நோக்கினும் அவன் அடிமைத் தளைகளில் பிணைக்கப்பட்டவனுகவே காட்சியளிக்கிறுன். ஒவ்வொரு மனிதனும், தான் மற்றவர்களுக்கு எஜமானன் என்று நினைத்துக் கொண்டிருக்கிறுன்; ஆனுல் அப்படி நினைப்பவன்தான் மற்ற எல்லோரையும்விட பெரிய அடிமையாகவும் கிடக்கிறுன். இந்த மாறுட்டநிலை எப்படி உண்டாயிற்று? இது எனக்குத் தெரியாது! ஆனுல் இந்த நிலையை மாற்றியமைக்க முடியுமா? இந்தப் பிரச்சனையை என்னுல் தீர்த்துவைக்க முடியுமென்றே எண்ணுகிறேன்.

பலாத்காரத்தாலும், அதிகாரத்தாலும் அடக்கப்படும் மக்கள் அடிமைத் தளைகளுக்கு அடங்கி வாழ்கின்றனர் என்று வைத்துக் கொள்வோம்; சரிதான். அதே மக்கள் தம்மை ஆளும் அதிகாரத்திலிருந்து விடுவித்துக் கொள்ளநினைத்து, அப்படியே தம்மை விடுவித்துக் கொள்கின்றனர்; இதுவும் சரியானதே. ஏனென்றுல், எந்த நியாயத்தின் பேரில் பலாத்காரத்தினுல், அதிகாரத்தினுல் அவர்களின் உரிமைகள் பறிக்கப்பட்டதோ, அதே நியாயத்தைக் கொண்டு இழந்த உரிமையைப்பெற்றுக்கொள்ளும் நியாயம் புலப்படும். சமூதாய ஒழுங்கு என்பது புனிதமான உரிமையாகும். இதே மற்றெல்லா உரிமைகளுக்கும் அடிப்படையாகவும் அமைந்திருப்பது. இந்த உரிமை என்பது இயற்கையிலிருந்து தோன்றி வருவது அல்ல! ஆதலால் அந்த உரிமை, சம்பிரதாயங்களிலிருந்து (Conventions) உண்டாகிறது. இந்தச் சம்பிரதாயங்கள் என்னவென்பதை நாம் தெரிந்து கொள்ளவேண்டும்.

## 2. பழங்காலத்துச் சமுதாயங்கள்
## *(Primitive Societies)*

பழங்காலத்துச் சமுதாயங்களிலே மிகவும் பழமையானதும் இயற்கையானதுமான சமுதாயம் குடும்பமாகும். குழந்தைகள், தங்கள் பாதுகாப்பிற்காகவும், தங்கள் நலனுக்காகவும் தேவைப் படும் வரையில்தான் தங்கள் தந்தையிடம் அன்பு செலுத்தி, அவருடன் வாழ்ந்து வருகின்றனர். இந்தத் தேவையானது முடிந்தவுடனே, தந்தைக்கும், குழந்தைக்குமிடையிலே உள்ள இயற்கையான பந்தம் அறுபட்டு விடுகிறது- தனது தந்தைக்குக் கீழ்ப் படிந்து நடக்க வேண்டிய கடமையிலிருந்து விலகிக் கொண்ட குழந்தைகளும், தம் பிள்ளைகளைக் காப்பாற்றிக் கவனிக்க வேண்டிய கடமையிலிருந்து விலகிக் கொண்ட தந்தையும், —சுதந்திரமாக வாழ ஆரம்பித்து விடுகின்றனர் – இருவரும் சம அந்தஸ்து அடைந்து விடுகின்றனர். இதற்குமேலும் தந்தையும், பிள்ளைகளும் ஒன்ருகப் பந்தப்பட்டிருப்பார்களே யாளுல், அவர்களிடையே உள்ள உறவு இயற்கையானதல்ல; வலிய ஏற்படுத்திக் கொண்ட உறவாகும். மேலும் இந்தக் குடும்ப உறவு சம்பிரதாயங்களின் மீதே கட்டப்படுவதாகும்.

இப்படியாக, குழந்தைகள் தம் தந்தைக்குப் பிறந்திருந்தும், அவருடன் வாழ்ந்து வந்தும், கொஞ்ச காலத்திற்குப் பிறகு தனிப் பட்டு, சுதந்திரமாக வாழும் 'பொது சுதந்திரமானது' மனித சுபாவத்தின் இயற்கையான விளைவேயாகும். மனிதனுடைய முதல் தேவை என்னவென்ருல் தனது பாதுகாப்பிற்கும், தன் க்ஷேமத் திற்கும் தேவையானவற்றைக் கவனிப்பதுதான். நல்லது எது வென்றும், தீயது எதுவென்றும் பகுத்தறியும் சக்தி ஏற்பட்டு விட்டபிறகு தனது நலனுக்காக வேண்டிய தேவைகளை அவனே நிர்ணயித்துக் கொள்ள ஆரம்பித்து விடுகிருன். இந்த நிலையை அடையும் மனிதன் தனக்குத்தானே எஜமானனுகி விடுகிருன்.

குடும்பம் என்பது பழங்கால சமுதாயங்களுக்கு ஒரு 'மாதிரி' (நமூனு) போன்றது. இந்த 'மாதிரி'யைக் கொண்டுதான், அரசியல் சமுதாயங்கள் அமைக்கப்படுகின்றன. குடும்பத்திற்கு எஜமானன் தந்தையாவான் சமுதாயத்தின்; எஜமானன் அரசனுவான்; குடும்பத்தின் பிரஜைகள் குழந்தைகளாவார்; சமுதாயத்தின் பிரஜைகள் மக்களாவார். எல்லோரும் சுதந்திரத்துடன் ஒரே மாதிரியாகத்தான் பிறக்கின்றனர். ஆளுல் தங்கள் சொந்த நன்மை வசதிகளுக்கேற்ப தங்கள் சுதந்திரத்தைப் பராதீனப் படுத்திக் கொள்கின்றனர். ஒரு குடும்பத்திற்கும் — ராஜ்யத் திற்கும், தகப்பனுக்கும்—அரசனுக்கும் இடையில் உள்ள வித்தியாசம் என்ன? தந்தையானவன் தனது குழந்தைகள் மீது அக்கரை எடுத்துக் கவனித்து அன்பு செலுத்துவதற்கு, குழந்தைகள்

மீது அவன் பொழியும் அந்த அன்புதான் அவன் பெறும் பிரதி பிரயோஜனமாகும். அரசனே தன் ராஜ்யத்தை ஆளுகின்றேம் என்ற மகிழ்ச்சியினல்தான் தனது பிரஜைகள்மீது அன்பு செலுத்தி வருகிருன். மந்தையிலுள்ள கால்நடைகளை எஜமானன் கொன்று தின்பதற்காக அக்கரையுடன் கவனிப்பதுபோல் அரசனின் நிலை மாறிவிடுகிறது. மக்கள் கால்நடைகளைவிட மோசமான அடிமைகளாகி விடுகிருர்கள்.

## 3. பலசாலியின் ஆதிக்கம்

## (*The Rule of the Strongest*)

பலசாலியானவன். தனது பலத்தின் உதவி ஒன்றினலே எப்பொழுதும் எஜமானனகைப் பிறர்மீது ஆதிக்கம் செலுத்திவர முடியுமா? முடியாது; தனது ஆதிக்கத்தை ஒரு உரிமையாகவும், தனக்கு மற்றவர்கள் அடங்கி நடப்பதை ஒரு கடமையாகவும் மாற்றினல்தான் முடியும்! இப்படியாக, பலசாலிகள் தம் பலாத்காரத்தினல் வலிய அடைந்துவந்த உரிமை பின்னர் ஒரு தத்துவமாக நிர்மாணிக்கப்பட்டுவிட்டது. பலாத்காரம் என்பது ஒரு ஸ்தூல சக்தியாகும்; அதன் அதிகாரத்திற்கு அடங்கி நடப்பது மனப்பூர்வமாக அல்ல; அவசியத்தை முன்னிட்டே ஆகும். அதனல் அதைக் கடமை என்று சொல்லிவிட முடியுமா? பலாத்காரத்தின் இந்தப் போலி உரிமையினல் விளையக்கூடியது, தீமையும், விவரிக்க முடியாத அறியாமையும்தவிர வேறல்ல! மக்கள் கட்டாயப்படுத்தப் படாதபொழுது, கீழ்ப்படிந்து நடக்கவேண்டிய கதி மறைந்துவிடும் ஆதலால் இந்த உரிமை என்பதற்கும், பலாத்காரத்திற்கும் எத்தகைய சம்பந்தமும் கிடையாது. எல்லா அதிகாரங்களும் கடவுளிடமிருந்துதான் வருகின்றனவாம்; ஒப்புக்கொள்கிறேன். கடவுளிடமிருந்துதான் எல்லா வியாதிகளும் வருகின்றன என்பதும் உண்மையே! இதனல் நோய் வரும் பொழுது நாம் வைத்தியரை அழைக்கக் கூடாது என்று அர்த்தமாகுமா? நான் கானகத்தின் நடுவில் பணமூட்டையுடன் போய்க்கொண்டிருக்கும் பொழுது ஒரு திருடன் என்னை வழிமறித்து என்னிடமுள்ள பணமூட்டையைப் பறித்துக் கொள்கிருன்; நான் அவனின் பலாத்கார சக்திக்குப் பயந்து என்னிடமுள்ள பண முடிப்பை அவனிடம் தந்து விடுகிறேன். ஆனல் அந்தப் பண முடிப்பை என்னல் மறைத்துவிட முடியும் பொழுதும், என் கடமை என்று எண்ணி அந்தப் பணமுடிப்பை அவனிடம் கொடுத்து விட வேண்டியதுதான? அவனிடமுள்ள துப்பாக்கி என்னைவிடப் பலமான சக்தியுடையதுதான். ஆனல் பலாத்காரத்திற்கு உரிமையும் இல்லை! நியாயமும் இல்லை! நாம் சட்டரீதியான அதிகாரிகளைத்தான் கீழ்ப்படியக் கடமைப் பட்டவர்களாயிருக்கிறேம்.

## 4. அடிமைத்தனம் *(Slavery)*

எந்தத் தனிமனிதனுக்கும் தன் சகோதர மனிதன் மீது அதிகாரம் கிடையாது; பலாத்காரத்திற்கு உரிமையும் கிடையாது. சட்டரீதியான அதிகாரங்கள் அனைத்திற்கும் சம்பிரதாயங்களே அடிப்படையாகும்.

"ஒரு தனிப்பட்ட மனிதன் தனது சுதந்திரத்தைத் தன்னுடைய எஜமானனுக்காகப் பராதீனப்படுத்திவிட்டு அடிமையாவது போல, முழு மக்கள் கூட்டம் ஏன் தங்கள் சுதந்திரத்தைப் பராதீனப்படுத்திவிட்டு அரசனுக்கு அடிமையாகி விடக்கூடாது?" என்று கேட்கிறான் குரோஸியஸ். இதை ஒப்புக்கொள்வதா? கூடாது! நிச்சயமாகக் கூடாது! 'பராதீனப்படுத்துவது' என்றால் விற்றுக் கொள்வது; தனி மனிதன் தன் சுதந்திரத்தைப் பராதீனப்படுத்தி அடிமையாவதால் அவன் தன்னை விற்றுக்கொள்கிறான் என்று அர்த்தமாகிவிடாது; தன் வயிற்றுப் பிழைப்புக்காக மட்டும் தன்னை விற்றுக் கொள்கிறான். ஆனால் முழு மக்கள் கூட்டம் தங்களை எதற்காக விற்றுக் கொள்ளவேண்டும்?

எதேச்சாதிகாரி தன் நாட்டில் பொது அமைதியை உண்டாக்குகிறான் என்கிறார்கள். அப்படியேயிருக்கட்டும். அவனுடைய பேராசை காரணமாக, யுத்தங்களும், நிர்வாக ஊழலினால் உண்டாகும் துன்பங்களும் மக்களுக்கிடையே உள்ள சச்சரவுகளைவிட அதிகம் வாட்டினால், அத்தகைய எதேச்சாதிகாரி பாதுகாக்கும் பொது அமைதியினால் என்ன இலாபம்? மக்கள் கற்குகைகளில் அமைதியுடன் வாழலாம் — ஆனால் அத்தகைய வாழ்க்கை அவர்களுக்குத் திருப்தியளிக்கும் என்று சொல்லிவிட முடியுமா?

ஒரு மனிதன், யாதொரு பிரதி பிரயோஜனமும் இல்லாமல் தன்னைப் பிறிதொரு மனிதனிடத்தில் பராதீனப்படுத்திக் கொள்கிறான் என்று நினைப்பது முட்டாள்தனமானது. இப்படியாக ஒருவன் தன்னைச் செய்துகொண்டாலும் அவன் தனது சுய அறிவை இழந்தவனாக இருப்பான். இதுபோலவே முழு மக்கள் கூட்டம் யாதொரு பிரதி பிரயோஜனமுமின்றித் தங்களை ஒரு அரசனிடத்தில் ஒப்புவித்துக்கொள்வதும் அர்த்தமில்லாதது; பைத்தியக்காரத்தனம் உரிமைகளை அளிப்பதுமில்லை!

தனி மனிதனொருவன் தன்னைப் பிறிதொருவனுக்கு அடிமைப்படுத்திக்கொண்டாலும், தன் பிள்ளைகளின் சுதந்திரத்தைப் பராதீனப்படுத்தி அவர்களை அடிமைகளாக்க அவனுக்கு உரிமை கிடையாது. அது போலவே ஒரு எதேச்சாதிகார அரசாங்கம் தரும நியாயமான முறையில் இயங்க வேண்டுமானால், அதன் ஆட்சியை ஒப்புக்கொள்ளவோ, நிராகரிக்கவோ அதன் ஒவ்

வொரு தலைமுறைக்கும் உரிமை அளிக்கவேண்டும். தன்னை அடிமையாக்கிக்கொள்ளும் மனிதனின் இச்சா சக்தியினின்று சுதந்திரத்தைப் பிரித்து விடுவது அவன் செய்யும் செயல்களிலிருந்து தருமத்தையும், நீதியையும் நீக்கிவிடுவது போன்றதாகும். ஒருபுறம் பூரண சுயேச்சாதிகாரத்தையும், மறுபுறம் முடிவற்ற கீழ்ப்படியும் தன்மையையும் கொண்டுள்ள சம்பிரதாயம் பயனற்றது; முரண்பாடானது. நமது தேவைகளை ஒருவனிடமிருந்து பெற்றுக்கொள்ளும் உரிமை நம்மிடம் இருக்கையில், நாம் அவனுக்குக் கடமைப்பட்டிருக்கிறோம் என்று கூறுவது பொருத்தமாகுமா? என் கீழ்உள்ள அடிமையொருவனின் உடமைகளும், உரிமைகளும் என்னுடையவனவாக இருக்கையில், அவன் என்னிடமிருந்து எத்தகைய உரிமைகளை எதிர்பார்க்க முடியும்? இது போலவேதான் சுயேச்சாதிகாரியிடமிருந்து உரிமைகளை எதிர்பார்ப்பதுமாகும்!

ஒரு மனிதனை மற்றொரு மனிதன் அடிமைப்படுத்திக்கொள்ள உரிமை உண்டு எனும் கொள்கை யுத்தத்திலிருந்து பிறந்தது என்று குரோஸியஸ் முதலானோர் கூறுகின்றனர். யுத்தமென்பது தனியொரு மனிதனும், மனிதனும் சம்பந்தப்பட்ட விஷயமாகாது! யுத்தமானது, தோல்வி யடைந்தவர்களைக் கொல்ல வெற்றிபெற்றவர்களுக்கு என்றைக்குமே உரிமை கொடுத்தது கிடையாது. கொல்ல உரிமை இல்லையானால், அடிமை கொள்ளவும் உரிமையில்லை. தோல்வியுண்டவர்களின் உயிரைக் கொடுத்து அதற்கு ஈடாக அவர்களின் சுதந்திரத்தைப் பறித்துக்கொள்வது நியாயமற்றதாகும். அடிமைப்படுத்தும் எந்த உரிமையும் நியாயமற்றது; முறையற்றது; கேவலமானது; அடிமைத்தனம், உரிமை, இவ்விரண்டு சொற்களும் ஒன்றுக்கொன்று முரண்பாடானவை; தனிப்பட்டு நிற்பவை. ஒருமனிதன் இன்னொரு மனிதனைப் பார்த்தோ, ஒருஅரசன் ஒருதேசத்தைப் பார்த்தோ பின்வருமாறு கூறுவானேயாகில் அது சுத்த முட்டாள்தனமானது. "முழுவதும் உன் செலவில், முழுவதும் என் நன்மைக்காக என் இஷ்டப்படி உன்னோடு ஒரு ஒப்பந்தம் செய்துகொள்கிறேன். எனக்கு இஷ்டமான காலம் வரையில் அந்த ஒப்பந்தத்தை அனுஷ்டித்து வருவேன். நீயும் அதுபோலவே எனக்கு இஷ்டமான காலம் வரையில் அனுஷ்டித்து வர வேண்டும்".

## 5. முதல் சம்பிரதாயம் ( *First convention* )

தனிப்பட்ட மனிதர்கள் எத்தனைப்பேர்களாக இருந்தாலும் வேறொரு மனிதனுக்கு அடிமைப்பட்டு வந்தால், அது எஜமானன்—அடிமை விஷயமாயிருக்குமே யொழிய, ஒரு சமுதாயம்—அதை ஆளும் அதிபன் என்ற விஷயமாயிராது. அதுபோன்ற

மனிதன் உலகத்தில் பாதி மக்களை அடிமைப்படுத்தினாலும் அவன் ஒரு சமுதாயத்தின் தலைவனாக இருக்கமாட்டான். அவனுக்குப்பின் அவன் ஆண்டுவந்த ஏகாதிபத்தியம் தீயால் தீய்க்கப்பட்டு சாம்பலான மரம்போல, இருந்த இடம் தெரியாமல் சிதறுண்டு போகும். சமுதாயம் என்றால் அதற்குப் பொதுச் சொத்துக்களும் அரசியல் அந்தஸ்தும் இருக்க வேண்டும். ஒரு ஜாதி தன்னைத் தனியொரு எதேச்சாதிகாரிக்கு ஒப்புவித்துக் கொள்ளக் கூடுமென்று குரோஸியஸ் கூறுகின்றான். அப்படியானால் அது தன்னைப் பூரணமாக ஒப்புவித்துக்கொண்ட பிறகு தனது யோக்யதையை இழந்துவிடுகிறது. எந்த சட்டத்தின் பேரில் ஒரு எதேச்சாதிகாரியைத் தேர்ந்தெடுக்கின்றார்களோ, அந்த சட்டத்தைப் பரிசீலனை செய்வதற்கு முன்பு, எந்த மக்கள் ஜாதி, எப்படி ஒரு மக்கள் ஜாதியாயிற்றோ அந்தச் சட்டம் பரிசீலனை செய்யப்பட வேண்டும்; ஏனெனில் இதுதான் முதல் முதலாக ஏற்பட்ட சட்டம்; சமுதாயத்தின் உண்மையான அடிப்படை.

முன்பாகவே உள்ள சம்பிரதாயங்களை வைத்துக்கொண்டு ஒரு ஆட்சியாளன் தேர்ந்தெடுக்கப்பட வேண்டும்; இல்லையேல் எல்லோரின் ஒரு முகமான ஒப்புதலின் பேரில் ஆட்சியாளன் நியமிக்கப்பட வேண்டும். இவ்விரண்டுமில்லாமல் பெரும்பான்மையானவரால் — பெரும்பான்மையானவரின் முடிவுக்குச் சிறுபான்மையானவர் கட்டுப்பட வேண்டும் என்பது என்ன நியாயம்? பத்துப்பேரின் ஒப்புதலில்லாமல், நூறு பேர் மட்டும் ஒரு அரசனை நியமிக்கும் உரிமையை எங்கிருந்து பெற்றார்கள். ஆகவே பெரும்பான்மையான வாக்குரிமைச் சட்டம் சம்பிரதாயத்தினாலே நிலை பெற்றது எனவும், ஒரு காலத்திலாவது ஏகமனதான தேர்ந்தெடுப்பு என்ற சம்பிரதாயம் இருந்திருக்குமெனவும் கொள்ளலாம். ஆகவே முதல் சம்பிரதாயமாகும்.

## 6. சமுதாய ஒப்பந்தம் (*Social Pact*)

இயற்கை நிலையிலே தனித்து வாழ்ந்த மனிதன் அப்படியே நிரந்தரமாக வாழ்ந்து வரமுடியுமா? அவனுடைய பாதுகாப்புக்கு இடையூறாக, அவனுடைய முன்னேற்றத்தின் பாதையிலே கிடந்த தடைகளையெல்லாம் தாண்டி வரும் நிலையைக் காலகதியில் மனிதன் அடைந்துவிட்டான். அதற்கு மேலும் பழைய இயற்கை நிலையில் மனிதனால் தனித்து வாழ முடியாது! கால வளர்ச்சிக் கேற்ப வாழும்முறையை மாற்றி யமைத்துக் கொள்ளாவிடில் மனித இனம் அஸ்தமித்துப் போகும்.

மனிதர்கள் புதிய சக்திகளைச் சிருஷ்டிக்க முடியாது; ஆனால் மனித சமுதாயம் தன்னிடம் ஏற்கனவேயுள்ள சக்திகளை ஒன்று

கூட்டித் திரட்டி, தங்களைப் பாதுகாத்துக்கொள்ள தங்களுக்கு எதிராகவுள்ள சக்திகளை அழிக்கவேண்டியுள்ளது. அதற்கு வழி? அந்த எதிர்சக்திகளுக்கு விரோதமாயுள்ள சக்திகளையெல்லாம் ஒன்றுதிரட்டி அவற்றின் மீது பிரயோகிக்கவேண்டும். சிதறிக் கிடக்கும் பல சக்திகளை ஒன்றுதிரட்டினால்தான் ஒரு புதிய கூட்டுச் சக்தி உண்டாகும்.

ஆனால் ஒவ்வொரு தனி மனிதனுக்கும் அவன் சுக வாழ்விற்காகத் துணைக் கருவிகளாக விளங்குபவை அவனுடைய சொந்த பலமும் சுதந்திரமுமேயாகும். அவற்றை அவன் பிறரிடத்தில் அடைமானம் வைத்தால் தனக்கே கேடு தேடிக்கொள்பவன் ஆவான். ஆனால் ஒவ்வொரு மனிதனும் தன் சொந்த க்ஷேமத்தையே நாடுவானாகில் சமுதாயமும், புதுக்கூட்டுச் சக்தியும் எப்படி ஏற்படமுடியும்?

தனிமனிதனுடைய சொத்துக்களையும், சுதந்திரத்தையும் பிறர் அபகரித்துக்கொள்ளாவண்ணம் பாதுகாக்க, பலர் கூடி பரஸ்பரமாக—பரஸ்பரப் பாதுகாப்பில் பங்குபெற்று வாழும் ஒரு சமுதாயமும் ஏற்பட வேண்டும். அப்படி ஒரு சமுதாயமாகச் சேரும்பொழுது எந்த மனிதனும் தனக்கே சொந்தமான சுதந்திரத்தை இழந்து விடாமலும், தன் ஒருவனுக்கே கீழ்ப்படிபவனாகவும் சமுதாயத்தின் சுதந்திரத்தைப் பாதுகாத்து வர வேண்டும். இத்தகைய மக்களின் கூட்டமைப்புக்குரிய அடிப்படைப் பிரச்சனைக்கு பரிகாரமளிப்பதைத்தான் சமுதாய ஒப்பந்தம் என்கிறோம். அத்தகைய கூட்டமைப்பில் சமுதாயத்தின் பொதுநன்மைக்காக எல்லோரும் மனமுவந்து ஒவ்வொரு மனிதனும் தன் உரிமையைப் பராதீனப் படுத்துகிறான். எல்லா மனிதர்களும் ஒருவிதமான பொதுவிதிக்கேற்ப தம் உரிமைகளை சமுதாயத்திற்குப் பராதீனப்படுத்தி விடுகின்றனர். இதில் ஒரு சிலர் பிறருக்குப் பாதகமாக நடந்து கொண்டால் பரஸ்பரம் பாதகமாக நடந்துக்கொள்வர் என்று அவர்களுக்கே தெரியும். தனிப்பட்ட மனிதர்கள் மனமொப்பியே தங்கள் உரிமைகளைப் பொதுச் சமுதாயத்திற்கு பராதீனப் படுத்திக் கொள்கின்றனர். தனிப்பட்ட மனிதன் தன்னுடைய நலனுக்காகவும் தனது உரிமைகளை மற்றவர்களைப் போலவே பராதீனப் படுத்துகிறான். சமுதாயத்தில் வெறுக்கும் சரிசமமான பாகம் உண்டே தவிர, அதிகப்படியான சலுகைகள் கிடையாது. எல்லோரும் ஒரு பொதுச் சமுதாயத்தில் சரிசமமான உறுப்பினன் ஆவதின் மூலம், தான் இழக்கும் உரிமைக்குப் பதில் அதிகப்படியான சக்தியைப் பெற்றுவிடுகிறான்.

"பொதுஜன சக்தியின் மேன்மையான அதிகாரத்திற்கு நம்மில் ஒவ்வொருவனும் தன்னுடைய முழுசக்தியையும்,

தன்னையுமே ஒப்படைத்து விடுகிறவர்களாகிறோம். இதற்குப் பிரதி பிரயோஜனமாக ஒவ்வொரு உறுப்பினனும் அந்த முழுப் பொருளின் பிரிக்க முடியாத அங்கங்களாக உறுப்பெறுவதை நாம் அடைகிறோம்.''— இது தான் சமுதாய ஒப்பந்தத்தின் அடிப்படைத் தத்துவச் சாறாகும்.

இத்தகைய சமுதாய ஒப்பந்தத்தின்கீழ் மனமும் உடலும் ஒற்றுமை உணர்ச்சியாகவுள்ள ஒரு மக்கள் சமூகம் உண்டாகிறது. இப்படிக் கூட்டமைப்பான முறைமேற்படிச் சமுதாயத்தின் சக்தியாகவும்—ஜீவத்துடிப்பாகவும் அமைகிறது. அது குடியரசு (Republic) அல்லது சமுதாய ஸ்தாபனம் (Body Politic) என்று அழைக்கப்படும். அந்தக் கூட்டமைப்பானது செயலற்ற நிலைமையில் ராஜ்யம் (State) என்றும், செயலாற்றும் பொழுது அரசு (Sovereign) என்றும், பிற அமைப்புகளுடன் ஒப்பிடப்படும் பொழுது அதிகாரம் (Power) என்றும் அழைக்கப்படும். அந்த அமைப்பைச் சேர்ந்த தனிப்பட்ட உறுப்பினர் கூட்டாக அழைக்கப்படும்பொழுது ஜனம் (People) என்றும், தனிப்பட்ட முறையில் நகரத்தார் (Citizens) என்றும், ஆட்சியின் சட்ட திட்டங்களுக்குட்படும் 'முறையில்' பிரஜைகள் (Subjects) என்றும் அழைக்கப்படுவர். ஆனால் இந்தப் பதப்பிரயோகங்களைக் குழப்பிக்கொள்ளாமல், எந்தெந்த சந்தர்ப்பங்களில் எந்தெந்தப் பெயர்களை உபயோகிக்க வேண்டும் என்று தெரிந்து கொள்ளவேண்டும்.

## 7. அரசு (*Sovereign*)

சமுதாய ஒப்பந்தத்தில் அரசு தன்னுடைய உரிமைகளில் ஒரு பாகத்தை பராதீனப் படுத்தக்கூடாது; மற்றொரு அரசுக்குப் பணிந்து விடவும் கூடாது. இப்படிச் செய்வதால் அரசு அழிபட்டுவிடும்.

தனிப்பட்ட மனிதர்களின் கூட்டுறவுதான் சமுதாய ஒப்பந்த மாகும். அந்தத் தனிப்பட்ட நபர்களிடமிருந்துதான் அரசு உண்டாகிறது. இந்தத் தனிப்பட்ட நபர்களின் நன்மையும், அரசின் நன்மையும் ஒன்றாகத்தானிருக்க முடியுமே தவிர, ஒன்றுக் கொன்று பாதகமாக இருக்கமுடியாது. பல அவயவங்களைக் கொண்ட தேகமானது, அவ்வவயவங்களுக்கு ஊறு செய்ய நினைப்பது வழக்கமல்ல என்பதுபோல இத்தகைய சமுதாய ஒப்பந்த அமைப்பில் எந்த அங்கத்தினனாவது தனக்குரிய பிரஜையின் கடமைகளைச் செய்யாமல், பிரஜா உரிமைகளை மட்டும் அனுபவிக்க வேண்டுமென நினைப்பானேயாகில் அது அரசுக்கு ஊறு விளைக்கும்.

சமுதாய ஒப்பந்தத்தின் விருப்பங்களுக்கு எவனொருவன் கீழ்ப்படியாமலிருக்கிறானோ, அவன் அதற்குக் கீழ்ப்படியும் படியாகச்செய்யப்படவேண்டும். அவன் அப்படிச் செய்யப்படாமலிருந்தால் அவன் சுதந்திரத்துடன் வாழமுடியாது. பிரஜைகளுக்கு அந்தக் கடமையுணர்வு ஏற்பட்டால்தான் அரசின் நிர்வாக யந்திரம் ஒழுங்குடன் நடைபெறும்.

## 8. சமுதாய ராஜ்யம் (*Civil State*)

ஆதிமனிதன் இயற்கை நிலையில் வாழ்ந்துவந்த காலத்தில் அவ்வப்போது அவனுடைய இஷ்டப்படியெல்லாம், எழுகிற உணர்ச்சி பாவங்களுக்கேற்ப செயல்களைச் செய்து வந்தான். சமுதாய அமைப்பில் வாழத் துவங்கிவிட்ட பிறகு, தான் செய்யும் காரியங்கள் நியாயமானவையா, தருமம் நிறைந்தவையா என்று யோசித்த பிறகுதான் செயல்களைச் செய்து வருகிறான். உணர்ச்சிக்குப் பதில் இப்பொழுது கடமையே அவன் செய்யும் செயல்களை நிர்மாணிக்கிறது. ஆனால் உணர்ச்சிகளின்படி எதையும் செய்யும் சுதந்திரத்தை ஓரளவு இழந்து விடுகிறான் என்பது உண்மையே. ஆனால் வேறு ஒருவகையில் அவன் புதிய இலாபங்களைப் பெறுகிறான். அவனின் எண்ணங்களும், இலட்சியங்களும் விசாலமடைகின்றன ; ஆத்மா புனிதத்தன்மை பெறுகிறது. அறியாமையுடன் கூடிய ஒரு சுதந்திர மிருகமாக விளங்கியதற்குப் பதில் இப்போது அறிவுள்ள ஒரு கடமை மனிதனாக மாறுகிறான். சமுதாய ஒப்பந்த வாழ்வில் ஒரு புது முறையான மனோ சுதந்திரத்தைப் பெறுகிறான் ; நிர்ப்பயமான ஆஸ்தி உரிமையையும் அடைகிறான்.

## 9. உண்மையான சொத்துரிமை (*Real property*)

சமுதாய ஒப்பந்த அரசு அமைக்கப்படும்பொழுது அதன் அங்கத்தினர்களாகச் சேருகின்றவர்கள் அனைவரும் நிலையில் தங்களையும், தங்கள் அதிகாரங்களையும், தங்களைச் சேர்ந்த சொத்துக்களையும் சமுதாய அரசுக்குப் பொதுச் சொத்துக்களாகப் பராதீனப்படுத்தி விடுவார்கள். அப்போது தனி மனிதனுடைய சொத்துக்கள் கைமாறினாலும், அவற்றின் தன்மை மாறுவது கிடையாது. தனிப்பட்டவனின் சொத்து, சமுதாயத்தின் பொதுச் சொத்தாக இருக்கையில் பத்திரமாக இருக்கும்.

நிலத்தின் மீது முதல் ஆக்கிரமிப்பு உடைமை (The Right of First Occupancy) பலசாலியின் உரிமையைவிட அதிகப் பாத்தியதை உடையதுதான். ஆனால் அது, சொத்து என்று சட்ட ரீதியாகப் பெற்ற பிறகுதான் அது உண்மையான உடைமையாகும். முன்பு பலஹீனமாயிருந்த முதல் ஆக்கிரமிப்பு உடைமை, சமுதாய அரசின்கீழ் பலமான உடைமையாகி

விடும். இந்த முதல் ஆக்கிரமிப்பு உடைமையைச் சட்டத்தின் மூலம் ஊர்ஜிதப்படுத்த வேண்டுமானல் — முதலாவதாக, எந்த நிலத்தை ஒரு மனிதன் ஆக்கிரமிக்கிருனே அந்த நிலத்தில் அதற்கு முன்பாக வேறு யாரும் வசித்திருக்கக்கூடாது; ஒருவன் சுவாதீனப்படுத்திக்கொள்ளும் நிலம், அவனது ஜீவனத்திற்குப் போதிய அளவுதான் இருக்கவேண்டும்; மூன்ருவதாக உழுது சாகுபடி செய்வதன் மூலமே, ஒருவன் ஒரு நிலத்தின் பாத்தியத்தைக் கொண்டாட முடியுமே தவிர வெறும் சடங்கின் மூலம் பாத்தியப்படுத்திக்கொள்ள முடியாது.

சமுதாயமானது, தனிப்பட்ட நபர்களின் சொத்துக்களைப் பொதுச் சொத்துக்களாகப் பராதீனப்படுத்திக்கொள்ளும் பொழுது, அவற்றை அந்நியர்கள் தம் அதிகாரத்தின் கீழ் கொண்டுவர முயலும்பொழுது, சமுதாயமானது தனது கூட்டுச் சக்தியின் மூலம் அவர்களை எதிர்த்துப் பொதுச் சொத்துக்களைக் காப்பாற்றும். தனிப்பட்ட நபர்கள் தங்களின் சொத்துக்களை ராஜ்யத்தின் சொத்துக்களாக மாற்றிவிடுவதனல் பரஸ்பரம் நன்மையுண்டாகிறது. ஒவ்வொரு உறுப்பினனும் பொதுச் சொத்தில் உரிமையுள்ளவனய், அதில் தனக்குரிய பங்குகளை அனுபவித்து வருவான். சமுதாய ஒப்பந்தம் என்பது மனிதனுக்கு தேக பல ரீதியில் ஏற்படும் சமத்துவமின்மைக்குப் பதில் கடமை ரீதியான நியாய சமத்துவத்தை அளிக்கிறது. அதனல் பலத்திலோ, அறிவிலோ பலஹீனமாய் உள்ளவர்கள் கூட சம்பிரதாயத்தின் மூலம், சட்ட ரீதியான உரிமையின் மூலம் சமத்துவ முடையவர்களாக ஆகிவிடுகின்றனர்.

## 10. அரசு பராதீனப்படுத்த முடியாததாகும் (*That Sovereignty is Inalienable*)

ஜனசக்தி, ராஜ்ய சக்திகளின் உதவியினல் பொது நன்மைக்கு ஆவன செய்கிறது; மனிதர்கள் தனிப்பட்டு வாழ்வார்களேயானல் அவர்களிடையே பூசல்கள் கிளம்பாதிருக்கத்தான் சமுதாயமுறை அமைக்கப்பட்டது. பலபேரின் நன்மைகளும் ஒன்றுபட்டு இருப்பதையே சமுதாயக் கட்டுப்பாடு என்று அழைக்கிருேம். பொது நலத்தை நோக்கமாகக் கொண்டுதான் சமுதாய நிருவாகம் நடைபெறவேண்டும்; ஜன சக்தியின் இச்சையின்படியேதான் ராஜ்ய காரியங்கள் நடைபெறவேண்டும்.

பொது ஜன அபிப்பிராயத்தை நடை முறையில் கொண்டு வருவதற்குத்தான் அரசு என்று பெயர். ஆதலால் இந்த அரசு எந்தத் தனிமனிதஞெருவனுலும் பிறிதொரு மனிதனுக்குப் பராதீனப்படுத்த முடியாது. அரசு அதிகாரம் ஆள்விட்டு மாறலாமே தவிர, அரசின் நோக்கத்தையோ, சக்தியையோ மாற்ற முடியாது.

## 11. அரசு பிரிவினை செய்ய முடியாதது
## (*Sovereignty is Indivisible*)

குடிமக்களின் இச்சையிலிருந்து பிறப்பதே ஜனசக்தியாகும்: அதன்படி ஏற்படுவதே சட்டமாகும். குடிமக்களின் ஒரு பாகத்தினருடைய—ஒரு பகுதியினருடைய சங்கற்பம் மட்டுமே நடைமுறையில் இருப்பதானால் அதை அரச நிர்வாக உத்திரவு என்று தான் சொல்ல வேண்டும்.

அரசியலைப்பற்றி எழுதுபவர்கள் அரசு என்பதை அதன் அடிப்படைத் தத்துவத்தில் பிரிக்க முடியாமல், அதன் நோக்கத்தில் மட்டும் பலவாருக அரசைப் பிரித்துக் காண்பிப்பது வழக்கம். அதைச் சட்டசபை அதிகாரம் (Legislative Power) நிர்வாக அதிகாரம் (Executive Power), வரி விதிக்கும் உரிமை (Power of Taxation), யுத்த உரிமை, என்றெல்லாம் பிரித்துக் காட்டுவது இயல்பு. ஆனால் இவை அதிகாரத்தைப் புரயோகிப்பதால் உண்டாகும் பரிணமங்களே தவிர, அரசுக்குத் தனிப்பட உள்ள அதிகார உரிமைகளாகா. இதை உணராததால்தான் அரசின் உரிமைகள் என்ன, குடிமக்களின் உரிமைகள் என்ன என்று இரண்டையும் பிரித்துப்பார்த்துக் குழப்புகிருர்கள்.

## 12. பொது ஜனசக்தி பிசகு செய்ய முடியுமா?
## (*Whether General Will can err*)

நாட்டிலுள்ள பலவிதமான கட்சிகளால் பொது ஜன அபிப்பிராயம் ஏமாற்றப்படும் பொழுது, ஜனசக்தி தனக்குத் தேவையான பொது நன்மையைத் தீர்மானிப்பதில் பிசகிவிடக் கூடும். அதனல் எத்தனை மனிதர்கள் உள்ளனரோ அத்தனை வாக்காளர்களுக்குப் பதிலாக, எத்தனை கட்சிகள் உள்ளனவோ அத்தனை வாக்காளர்கள் தான் இருப்பர். இப்படிக் கட்சி இயக்கம்—இந்த ரீதியில் வாக்களிப்பு (Voting) நடத்தப்படுமேயானல் குறைவான அபிப்பிராய பேதங்கள் இருப்பது பொலத் தோன்றும். ஆனல் அதனுடைய பலனும் குறைவாகத் தானிருக்கும். எல்லாவற்றையும்விட மேலோங்கியுள்ள ஒரு கட்சியின் அபிப்பிராயத்தை பொதுஜன அபிப்பிராயம் என்று எப்படிச் சொல்லிவிட முடியும்? இந்த முறையில் பொதுஜன அபிப்பிராயத்தைத் தெளிவான முறையில் பெறவேண்டுமானல் ஏதாவது ஒரு கட்சியின் ஆதிக்கம் இருக்கக் கூடாது. ஒவ்வொரு மனிதனும் தனது சொந்த அபிப்பிராயத்தைத் தெரிவிக்கக்கூடிய நிலையில் இருக்க வேண்டும். நாட்டில் பல கட்சிகள் இருக்குமேயானல், அவற்றுள் ஏற்றத்தாழ்வுகள் ஏற்படாதபடி, எந்தக்

கட்சியும் மற்றதைவிட மேலோங்காதபடி, அந்தக் கட்சி உறுப்பினரின் எண்ணிக்கை அதிகரிக்கப்படவேண்டும். [கட்சி அரசியல் உண்மையான அரசாட்சியாகாது.]

## 13. அரசு சக்தியின் வரையறைகள்

*(The Limits of Sovereign Power)*

ஒவ்வொரு மனிதனுக்கும் தன் தேகத்தின் அவயங்களை உபயோகிப்பதில் பூரண ஆதிக்கம் இருப்பதுபோல, சமுதாய அரசுக்குத் தன் அங்கத்தினர்களின் மீது பூரண ஆதிக்கம் உண்டு. இந்த அதிகாரம் சமுதாய ஒப்பந்தத்தினால் அளிக்கப்பட்டு விடுகிறது.

சமுதாய ஒப்பந்தத்தின் பலனாக, ஒவ்வொரு மனிதனும் தன்னுடைய சுதந்திரம், சொத்து, சொந்த சக்தி இவைகளில் ஒரு பாகத்தைப் பராதீனப்படுத்தும்பொழுது, பராதீனப்படுத்தப்படும் பகுதியானது சமுதாய நன்மைக்கு முக்கியமான பயனைக் கொடுப்பதாயிருத்தல் வேண்டும். அந்தப் பயனை நிர்ணயிக்கும் உரிமை அரசினுடையதாகும். பொது நன்மையைத் தரும் சேவையையே அரசு தன் மக்களிடமிருந்து எதிர்பார்க்கிறது. அதுபோலவே அரசுக்கும், தனி மனிதருக்குச் செய்ய வேண்டிய சில கடமைகள் உள்ளன. அரச சக்தியின் நோக்கம் பொதுவானதாக இருத்தல் வேண்டும்; சமத்துவமாக இயக்கப்பட வேண்டும்.

சமுதாயத்தில் சில சமயங்களில் சில பிரச்னைகள் தோன்றுகின்றன. மக்கள் பல பிரிவுகளாக பிரிந்து தம்மிடையே முரண்பாடான அபிப்பிராயங்களைக் கொண்டிருக்கும்பொழுது, அரச சக்தியினால் தீர்ப்பு நிச்சயமாகச் சொல்லவே முடியாது. அரச சக்தியினால் பலமுள்ள கட்சியினுடைய அபிப்பிராயத்தைத்தான் சொல்ல முடியும். அரசசக்தி பொது நன்மைக்குப் புறம்பாகக் குறிப்பிட்டதொரு இலட்சியத்தைக் கொண்டிருக்குமானால் அது தன்னுடைய தன்மையை யிழந்து விடும்.

அரச காரியம் என்பது என்ன? அது உயர்ந்த நிலையில் உள்ளவர்களும், கீழ் நிலையில் உள்ளவர்களும் செய்துகொள்ளும் ஒப்பந்தமாகாது. ஏற்றத் தாழ்வுகள் இல்லாமல், எல்லோரின் நன்மையையும் தனது நோக்கமாகக் கொண்டு ஸ்திரமான நிலையுடன் இருப்பதாகும். இந்த ஒப்பந்தத்திற்குக் கீழ்ப்படியும் வரை, மனிதன் வேறு எவருக்கும் கீழ்ப்படியவே வேண்டியதில்லை; உண்மையான சுதந்திரத்துடன் ஸ்திரமாகத் தான் சமுதாயத்திற்காக வாழ்ந்து வருவான்.

## 14. வாழவும் சாகவும் உள்ள உரிமை

## *(The Right of Life and Death)*

ஒவ்வொரு மனிதனுக்கும் தன்னுடைய உயிரைப் போக்கிக் கொள்ளும் உரிமை தன்னிடம் இல்லாதபோது இந்த உரிமை அரசுக்கு மட்டும் எப்படியிருக்கும்? இந்தக் கேள்வி சரியானதல்ல. ஒவ்வொரு மனிதனும் தன்னுடைய உயிரைக் காப்பாற்றிக் கொள்வதற்காக, அந்த உயிரை ஆபத்துக்குள்ளாக்கும் உரிமை அவனிடமே உள்ளது. வீடு தீயினல் பற்றிக்கொண்டு எரிந்து கொண்டிருக்கையில், தன்னைக் காப்பாற்றிக்கொள்ள, மாடியிலிருந்துக் கீழே குதிப்பவனை தற்கொலை செய்துகொள்ள முயற்சித்தான் என்று குற்றம் சொல்லிவிட முடியுமா? சமுதாய ஒப்பந்தத்தின் கீழ் உள்ளவர்களின் நன்மையைப் பாதுகாத்துக் கவனிப்பது அதன் தலையாய கடமையாகும். "அதன் நன்மைக்காக உயிர் துறக்கவேண்டும்" என்று அரசு பிரகடனப்படுத்தினல், அந்தமனிதன் தன் உயிரையும் கொடுக்கத் தயாராயிருக்க வேண்டும். சமுதாய அரசானது தன் உரிமைகளைப் பாதிக்கக்கூடிய அளவில் நடந்துகொள்பவனைக் குற்றவாளி என்று தண்டிக்க வேண்டும். அவனைத் தனது பிரஜையாக அப்பொழுது எண்ணுமல், தன்னுடைய விரோதியாக எண்ணி அவனைத் தண்டிக்க வேண்டும். அதிகமான முறையில் ஒரு சமுதாயமானது மரண தண்டனை விதித்து வருமானல், அல்லது மன்னிப்பு அளித்து வருமானல் அது அந்த சமுதாயத்தின் பலஹீனத்தைத்தான் குறிக்கும். சமுதாயம் தன்னல் இயன்ற வரையில் தனது அமைப்பின் கீழ்உள்ள பிரஜைகளை உபயோகமுள்ளவர்களாகச் செய்ய முயலவேண்டும். நல்ல முறையில் ஆளப்படும் சமுதாயத்தில் அதிகப்படியான தண்டனைகள் விதிக்கப்படுவது கிடையாது.

## 15. சட்டம் (The Law)

அரசியல் சமுதாயத்திற்கு இயக்க சக்தியையும், சங்கற்ப சக்தியையும் கொடுப்பது சட்டமாகும். சட்ட திட்டங்களின் உதவியில்லாமல் ஒரு சமூகம் ஒழுங்கான முறையில் இயங்கி வருவது மிகவும் கடினம். எல்லா நீதியும் நமக்கு கடவுளிடமிருந்துதான் வருகின்றன; இது உண்மையாயின், அவ்வளவு மேன்மையான இடத்திலிருந்து நமக்கு நீதி வருமாயின் நமக்கு அரசாங்கமும், சட்டங்களும் தேவையில்லையே. மனிதனுடைய அறிவினின்றும், பொதுவான நீதி உண்டாவது பற்றி சிறிதும் சந்தேகமே கிடையாது; ஆனல் இந்த நீதி நம்மிடையே இருப்பதற்கு அது பரஸ்பரம் எல்லா மனிதர்களாலும் அனுஷ்டிக்கப்பட வேண்டும்.

சட்டம் என்றால் என்ன? எல்லா மக்களும் ஒன்றுகூடி எல்லா மக்களுக்காகவும் ஒரு உத்திரவை அமுலுக்குக் கொண்டு வந்தால், அந்த உத்திரவு எல்லா மக்களின் நன்மைக்காகவே செய்யப்படுகிறது. இந்த விஷயத்தில் உத்திரவும், நோக்கமும் ஒன்றாகவே உள்ளன. இந்த நோக்கமானது பொதுமக்களின் நன்மையைக் குறிப்பது போலவே, உத்திரவும் அதே நோக்கத்தைத் தன்னகத்தே கொண்டுள்ளது. இதுபோன்ற உத்திரவைச் சட்டம் என்று சொல்லலாம். ஜனங்களை ஒரு கூட்டமாகவும் அவர்களின் செயல்களை ஒரு தொகுப்பாகவும் வைத்துச் செய்யப்படுவதுதான் சட்டமாகும். குறிப்பான ஒரு தனி மனிதனுக்காகவோ, அவனின் செயலுக்காகவோ சட்டம் இயற்றப்படக் கூடாது.

ஒரு சில மக்களால் செய்யப்படுவது சட்டம் என்ற பெயரால் அழைக்கப்படக் கூடாது; பொதுமக்களின் அபிப்பிராயங்களின் கூட்டுத் தொகையே சட்டமாகும். ஆட்சியாளன் சட்டங்களுக்கு மேற்பட்டவன் அல்ல; அவன் அரசின் பிரஜையாக இருக்கும் காரணத்தால் அவனும் அரசின் சட்டதிட்டங்களுக்கு உட்பட்டவனே ஆவான். ஆட்சியானது சட்டங்களுக்கு உட்பட்டு இருந்து வருமானால் அது குடியரசு ஆகும்.

மக்கள் கூட்டமைப்பாக வாழ்வதற்கு நிபந்தனைகளாக விளங்கும் சட்டங்களுக்கு, மக்கள் கீழ்ப்படிந்து வாழவேண்டும்.

## 16. சட்டங்களை நிர்மாணிப்பவர் ( *The Legislator* )

நல்ல சட்டங்களை இயற்ற நல்ல அறிவாளிகள் தேவைப்படுகின்றனர். மக்களின் மனப்போக்கை, ஆசாபாச உணர்ச்சிகளை நன்றாகப் புரிந்துகொள்ளும் திறமை இவர்களுக்கு வேண்டும். இவர்கள் தங்களுடைய சொந்த சுபாவங்களை இதில் உபயோகப்படுத்தக் கூடாது. பொதுமக்களின் சுக வாழ்விலே இவர்களின் எண்ணங்கள் பதிந்திருத்தல் வேண்டும். வருக்கால மக்களின் நன்மையும் இவர்கள் தம் கவனத்தில் கொள்ள வேண்டும்.

மக்களுக்கு நன்மை தரக்கூடிய ஸ்தாபனங்களை உண்டாக்க முயலுபவன் மனிதர்களின் சுபாவங்களை மாற்றும் ஆற்றல் படைத்தவனாயுமிருக்கவேண்டும். தனிப்பட்டு வாழும் மனிதனை சமுதாயத்திற்குப் பயனுள்ள அங்கத்தினனாக மாற்ற முயல வேண்டும். தனி மனிதனின் சக்திகளைப் பயன்படுத்திக்கொண்டு, அவற்றிற்குப் பதிலாக சமுதாயத்தின் துணைபெற்று வாழக் கூடிய சக்திகளை அளிக்கக் கூடியனவாக இயற்றப்படும் சட்டங்கள் தாம் நிறைவு கொண்டவைகளாக இருக்கும். சட்டத்தை நிர்மாணிப்பவர்கள், மனிதர்கள் மீது தமது ஆதிக்கத்தை பிரயோகிக்க முயலக்கூடாது. தங்கள் சொந்த விருப்பு வெறுப்புகளை

தாம் செய்யும் சட்டங்களில் புகுத்திவிடக்கூடாது. மனிதர்களை ஆளுகிற அதிகாரியே சட்டங்களை இயற்றுபவனு யிருக்கக் கூடாது. தெய்வத்தின் திருவாக்கு, சட்டம் என்று கூறுமல், முடிந்தவரை எளிய மொழியில் சட்டங்களை இயற்ற முயல வேண்டும்.

## 17. மக்கள் (The People)

கட்டிடம் கட்டுவதற்கு முன்பாக, கட்டிடம் கட்டுபவன் கட்டிடம் கட்டப்போகும் பூமியைப் பரிசோதித்து இந்தப் பூமி அந்தக் கட்டிடத்திற்குத் தகுந்த அஸ்திவாரமாக இருக்குமா என்று பரிசோதித்த பிறகுதான் கட்டிடம் கட்ட முற்படுவான். அதுபோல, சட்டத்தை நிர்மாணிப்பவர் தாம் இயற்றுவது என்னதான் நல்ல சட்டம் என்றாலும் அதைப் பொதுமக்கள் ஏற்றுக்கொள்ளக் கூடியவர்களா என்று ஆராய்ந்த பிறகே சட்டமியற்ற வேண்டும்.

மனிதன் தன் இளமையில்தான் ஒழுங்கான முறையில் வாழ்ந்து வருகிறுன்; அப்பொழுதுதான் அவன் மனம் தெளிவாகவும் சுத்தமாகவும் இருக்கும். வயது வளர வளர அவனுடைய மனம் சீர்கெட்டு போகிறது. தவருன எண்ணங்களும், துர்ப்பழக்க வழக்கங்களும் மனதில் படிந்து போன பிறகு, அவைகளை நீக்குவதும், சீர்திருத்துவதும் யாராலும் முடியாது. பயமும், அசட்டுத்தனமும் நிறைந்த நோயாளிகள் தம் நோயைத் தீர்க்கவரும் வைத்தியனைக் கண்டு அஞ்சி, நடுங்கி அவன் மீது வெறுப்புக் கொள்வதுபோல, மக்களினமும் தம்மிடம் பொதிந்து கிடக்கும் குற்றம் குறைகளைப் போக்க வருவோரின் மீது வெறுப்புக் கொள்வர்.

குழந்தைப் பருவமும், யௌவனப் பருவமும் வெவ்வேருனவை. இதுபோல மக்கள் இனத்திற்கும் குழந்தைப் பருவமும் உண்டு; யௌவனப் பருவமும் உண்டு. மக்கள் இனம் யௌவனப் பருவம் அடைவதற்கு முன்பு அதைச் சட்டங்களுக்கு உட்படுத்தக்கூடாது. ஆனல் இந்தப் பருவத்தை எப்பொழுது அடைகிறது என்று கணிப்பது மிகவும் கடினமான தாகும். இதைத் தெரிந்துகொள்ளாது மேற்கூறிய காரியங்களைக் செய்தால் தீமை விளையும். மக்களினங்களில் சில முதலிலிருந்தே ஒழுங்கான முறையில் நடந்து வருகின்றன; சில அநேக நூற்றுண்டுகளுக்குப் பிறகும் ஒழுங்குபடாமல் இருந்து வரக் கூடும்.

இயற்கையானது ஒரு மனிதனின் அங்க அமைப்புகளுக்கு ஒரு வரையறை விதித்துள்ளது. இது மீறப்படும்பொழுது குள்ளமானவர்களையும், மிகவும் பருத்த மனிதர்களையும் காண்

கிறோம். இது போலவே அரசியல் அமைப்புக்கும் வரையரை இருக்கிறது. அதன் அளவு சில சமயங்களில் மிகவும் விஸ்தார மாகவும் மற்றும் சில சமயங்களில் மிகவும் சிறியதாகவும் அமைந்து விடுகிறது. ஓர் ஆட்சியின் நாட்டுஎல்லை தேவைக்கு, அதிகமாகப் பெருகியோ குறைந்தோ இருக்கக் கூடாது. மக்கள் சமுதாயத்தின் பலத்திற்கும் வரையரை இருக்கிறது. இந்த அளவு மீறப்படும்பொழுது சமுதாயம் தன்னையே இழந்து விடக்கூடும். பொதுவாகச் சொல்லப் போனல், பெரிய ராஜ்ய அமைப்பைக் காட்டிலும் சிறிய ராஜ்ய அமைப்புப் பலம் கொண்டதாயுள்ளது. ராஜ்யத்தின் அளவு பெருகப் பெருக நிருவாகம் நடைபெறுவது கடினமாகிறது. மேலும் நிருவாகத் திற்கான செலவும் அதிகமாகிறது. நிருவாகம் பிரிக்கப்பட வேண்டிய நியதி உண்டாகிவிடுகிறது. இப்படி நிருவாகம், பல மாகாணங்களாகப் பிரிக்கப்படும்சமயம் செலவு மிகவும் அதிகரித்து விடுவதால், மக்கள் இந்தச் செலவுத் தொகையைக் கொடுக்கவேண்டிய நிலை உண்டாகும். மேலும், நிருவாகம் பல கிளைகளாகப் பிரிக்கப்படும்பொழுது ஊழல்கள் நிருவாகத்தில் உண்டாகின்றன. இந்த நிலையில்தான் சீரழிவு உண்டாக ஆரம்பிக்கும்.

அகன்ற சமுதாயத்தில், மக்கள் சட்டங்களைச் சரிவர அனு சரித்து வருகின்றனரா என்பதைக் கவனிக்க முடியாது. சூழ்ச்சி கள், கலகங்கள், சட்டதிட்டங்களைத் துஷ்பிரயோகம் செய்தல் முதலி யவைகளை எளிதில் தடுப்பது என்பது கடினமாகிவிடும். விஸ்தாரமான அகண்ட தேசத்தில் தேசபக்தி இருக்கமுடியாது. மாறும் பழக்க வழக்கங்களையும், வெவ்வேறன சீதோஷ்ண நிலையில் பகையும் உடைய பலவகை மாகாணமக்களுக்கு ஒரேவித மான சட்டத்தை அனுசரித்து வரும்படி செய்வதும் சரியானதல்ல. ஒவ்வொரு பிரிவும் ஒவ்வொரு சட்டமியற்றுவதும் சரியான தல்ல. நிருவாகம் பிரியப் பிரிய பளு அதிகமாகிறது. இது ஜனங் களின் வாழ்க்கைகளை பாதித்துவிடுகிறது. அநேக சட்டங்கள் இயற்றுவது கடைசியில் கலவரத்தில்தான் முடிவடைகிறது. இப்படியாக நிருவாகம் பிரிக்கப்பட்டு, நிருவாகத்தின் பளு அதிகரிப்பதால், பொதுநலம் கவனிப்பாரற்றுப் போய்விடும்; தன் தேகத்தின் பளுவைத் தாங்க முடியாது கீழே அசத்தும் தேகம்போல, விஸ்திரமாண மத்திய அரசாங்கமும் கீழே சாய்ந்து விடுகிறது.

இதுபோல, ராஜ்யத்தின் அளவு மிதமான முறையில் அமைப் பது, ராஜ்யாதிகாரிகளின் திறமையைப் பொறுத்தது. ராஜ் யத்தின் அஸ்திவாரம் பலமானதாக இருக்கவேண்டும். அதற்கு நல்ல முறையில் அமைந்துள்ள அரசியல் அமைப்பு (Constitution) தேவைப்படுகிறது.

மக்கள் சமுதாயத்தை இரண்டு விதமாக அளந்து பார்க்கலாம். ஒன்று அதன் நிலப் பரப்பை அளப்பது; மற்றது அதன் ஜன எண்ணிக்கையை அளப்பது. இவ்விரண்டும் பொருத்தமான முறையில் அமைய வேண்டும். மக்கள் தொகைக்குப் பொருத்தமாகவே நிலப்பரப்பின் அளவு அமைதல் நலம். இது மிகவும் முக்கியமான விஷயமாகும். மக்கள் சமுதாயத்தின் நிலப்பரப்புக்கும் அதன் ஜனத்தொகைக்கும் உள்ள விகிதத்தை நிர்ணயிப்பது சுலபமானதல்ல; நிலத்தின் தன்மை, செழுமை, அதில் உற்பத்தியாகும் பொருள்கள், சீதோஷ்ணநிலை—இவை எங்கும் ஒன்றாயிருப்பது கடினம். மக்களின் பழக்க வழக்கங்களும் இடத்திற்கு இடம் மாறுபடும். இதுபோன்ற விஷயங்களின் ரீதியில் சட்ட நிர்மாணம் செய்பவன், தன் கண்ணால் காண்பவையைக் கொண்டு இல்லாமல், இது செய்யின் இன்னது விளையும் என்பதை ஆராய்ந்த பிறகுதான் சட்டம் இயற்ற வேண்டும். மக்களின் வாழ்க்கையில் வருங்காலத்தில் இன்னின்ன மாறுதல்கள் உண்டாகும் என்பதையும் தம் கவனத்தில் கொண்டே சட்டங்கள் இயற்றல்வேண்டும். தாம் இயற்றும் சட்டங்களால் மக்களின் வாழ்வு சுகமாகவும், சுபிட்சமாகவும் இருக்கவேண்டும் என்பதையும் கவனிக்கவேண்டும். இயற்றப்படும் சட்டங்களால் சமூகத்தில் குழப்பம் விளையாமலும் பாதுகாக்க முடியுமா என்று கவனிப்பதும் முக்கியமாகும்.

## 18. பலவகையான சட்டமியற்றும் முறைகள்

## (The Different Systems of Legislation)

எல்லா மக்களுக்கும் பொதுவான நன்மை எதன்கண் அடங்கியுள்ளது; சட்டமியற்றுவதன் முக்கிய நோக்கம் என்னவாயிருக்க வேண்டும் என்று காணுமிடத்து நாம் சுதந்திரம், சமத்துவம்—இவ்விரண்டையே காண்கிறோம். சமுதாயத்தின் சக்தி சுதந்திரத்தில் அடங்கியுள்ளது; சமத்துவம் இல்லாமல் சுதந்திரம் மட்டும் தனித்திருக்க முடியாது.

சமத்துவம் என்றால் என்ன? தனி மனிதனுக்கு அளிக்கப்படும் சுதந்திர அதிகாரத்தைக் கொண்டு அவன் பலாத்காரம் செய்யாமலிருக்க வேண்டும்; தனக்குள்ள அதிகாரத்தைக் கொண்டு அவன் பிறரை அடக்க முயலக் கூடாது. சட்டத்திற்குக் கீழ்ப்படிந்தும், தத்தம் சமூக நிலைக்கேற்ப அதிகாரத்தைப் பயன்படுத்தல் வேண்டும். மற்றொரு மனிதனை விலை கொடுத்து வாங்கும் நிலையில் ஒருவன் செல்வந்தனாயிருக்கக் கூடாது; தன்னைப் பிறனுக்கு விற்றுக் கொள்ளும் நிலையில் ஒருவன் ஏழையாயுமிருக்கக்கூடாது. இத்தகைய சமத்துவம்

ஏற்படுவது கடினம் என்று சிலர் கூறினாலும், முயன்ற வரை இந்த நிலைமை உண்டாக்க முயலவேண்டும்—இதற்குச் சட்டம் உதவியாயிருக்கவேண்டும். சட்டத்தின் நோக்கம் — சுதந்திரம் சமத்துவம்—இவையிரண்டையும் அளிக்க முயல்வதாயிருக்க வேண்டும். நாட்டின் இயற்கைநிலை, உற்பத்திநிலை, மக்களின் மனப்பான்மை இவற்றை அனுசரித்தே சட்டங்கள் இயற்றப் படவேண்டும். ஒரு சமுதாயத்தின் மக்களுக்கும், அதன் அரசுக்கும் இயற்கையான முறையில் ஏற்பட்டுள்ள சம்பந்தம் வலுப்படுத்தப்பட வேண்டிய முறையில் சட்டங்கள் இயற்றப் படவேண்டும். நாட்டின் மக்கள்நிலைமை அனுசரிக்காமல் ஏதோ ஒரு இலட்சியத்தை மனதில் வைத்துக்கொண்டு இயற் றப்படும் சட்டங்களால் பிரயோசனம் இல்லை—இது போன்ற சட்டங்களால் அரசாங்கத்து அமைதி குலையும், அதனால் ஸ்திர மற்ற ராஜ்யம் நாளடைவில் அழிந்துபோகும்.

## 19. சட்டங்களின் பாகுபாடு

### (Division of The Laws)

சமுதாயத்தில், அரசாங்க அமைப்பு, ஒழுங்கான சிறந்த முறையில் நடைபெற வேண்டுமானால், அது தன் காரியத்தில் எப்படி நடந்து கொள்ள வேண்டும், மக்களிடத்தில் எப்படி நடந்துகொள்ள வேண்டும் என்பதைப் பகுத்துணர வேண்டும். இவ்விதமான சம்பந்தங்களை சட்டங்களால்தான் ஒழுங்கு படுத்த முடியும். இந்த மாதிரியான சட்டங்களை அரசியல் சட்டங்கள், அல்லது அடிப்படையான சட்டங்கள் எனலாம். (Political Laws or Fundamental Laws)

மக்கள், தம்மிடையே பரஸ்பரம் ஒருவருக்கொருவர் எப் படி நடந்துகொள்ள வேண்டும், சமுதாயத்தின் விஷயத்தில் எப்படி நடந்துகொள்ள வேண்டுமென்பதை ஸிவில் சட்டங்கள் (Civil Laws) நிர்ணயிக்கும்; தனிப்பட்ட மனிதனொருவன் சட் டத்திற்குக் கீழ்படிய மறுத்துவிட்டால், குற்றம் புரிந்தால் அந்தச் சட்டத்தைப் பொறுத்து அவன் எவ்விதமான முறையில் நடத் தப்பட வேண்டுமென்று கிரிமினல் சட்டம் (Criminal Law) நிர்ணயிக்கும். இம் மூன்றையும் தவிர நான்காவது சட்டம்ஒன்று உள்ளது. இது எழுத்து வடிவத்தில் இல்லை; மக்களின் மனதில் உறைந்து வருவது—அதாவது ஒழுக்கம், பரம்பரைப் பழக்கம், பொது ஜன அபிப்பிராயம் இம் மூன்றுங் கூடிய ஒழுக்கச் சட்டமாகும். இது மிக முக்கியமானது. வளைவான கட்டிடத் திற்கு பிடிகோல்போல—இந்த ஒழுக்க நியதி மிகவும் முக்கிய மானது!

## 20. அரசாங்கம், பொதுவாக

## (Government In General)

சுயமாகச் செய்யப்படும் எல்லாவிதமான காரியங்களும் இரண்டு விஷயங்களின் சேர்க்கையால் விளைகின்றன. அதாவது ஒரு காரியத்தைச் செய்யவேண்டும் என்று மனதில் விரும்புவது; இரண்டாவது அதைச் செய்வது. முதலாவதான இச்சாசக்தியை சட்ட நிர்மாண அதிகாரம் எனலாம். இரண்டாவதான கிரியா சக்தியை நிருவாக அதிகாரம் அல்லது அரசாங்கம் எனலாம். இவ்விரண்டும் நல்ல முறையில் சேர்ந்து இயங்கவேண்டும்.

சட்ட நிர்மாண அதிகாரம்—மக்களுக்கே பொதுவுரிமையுடையதாக உரித்தானது. நிருவாக அதிகாரமோ மக்கள் கையில் இருக்கமுடியாது. அரசியல் செய்யப்படும் எல்லாச் செயல்களுக்கும் சட்டம் என்று பெயர்—இவற்றை நடைமுறையில் கொண்டு வருவதற்கு உதவுவது நிருவாக அதிகாரமாகும். இந்த அதிகாரத்தை தன்னிடத்துள்ள ஸ்தாபனமே அரசாங்கமாகும். எனவே மக்களுக்கும் அரசுக்கும் மத்தியில் உள்ளது, இவ்விரண்டிற்குமிடையில் தொடர்புக்காக உதவுவது, சட்டங்களை நடைமுறைக்குக் கொண்டுவருவது—அரசாங்கம்! அரசு—அரசாங்கம்—மக்கள்—இம்மூன்றுக்கும் சரியான முறையில் சம்பந்தம் அமையவேண்டும்; அவ்வாறு அமையாது ஏற்றதாழ்வுகள் ஏற்படும்போதுதான், அராஜகமும், அழிவும் சம்பவிக்கின்றன.

மக்களின் விருப்பத்தைப் பிரதிபலித்துக் கொண்டிருப்பது தான், அரசாங்கமாகும்-இந்த விஷயத்தில் வேற்றுமை தோன்றும் சமயம் மக்களுக்கும் அரசுக்கும் இடையில் உள்ள தொடர்பு தளரும், அந்தச் சமயத்தில் அரசாங்கம் மக்களின் விருப்பத்தைப் புறக்கணித்து சுயேச்சையாக நடக்க ஆரம்பித்தால் சமுதாய வாழ்வு அடியோடு நாசமுற்றுப்போகிறது.

## 21. பலவிதமான அரசாங்க அமைப்புகள் உண்டாவதற்கான அடிப்படைக் காரணம்

## (The Principel Which Constitutes the Different forms Government.)

ஓர் அரசாங்கத்தில் எவ்வளவுக்கெவ்வளவு அதிகமான அதிகாரிகளும் உத்தியோகஸ்தர்களும் இருக்கிறார்களோ அவ்வளவுக்கவ்வளவு அதன் பலஹீனத்தையே குறிக்கும். ஒவ்

வொரு அரசாங்க அதிகாரிக்கும் மூன்றுவித மனப்பான்மைகள் உள்ளன—முதலாவது தன்னலத்தை நாடும் சொந்த மனப்பான்மை; இரண்டாவது அரசாங்க நலத்தை நாடுவது; மூன்றுவது, பொதுமக்களின் நன்மையை நாடுவது. அதிகாரிகள் சுயநன்மையைக் கோரக்கூடாது, அரசாங்க நன்மையைக் கவனிக்கவேண்டியிருந்தாலும், அதையும் பிரதானமாகக் கொள்ளக் கூடாது; பொது மக்கள் நன்மை என்ற மூன்றுவது மனப்பான்மையைத்தான் சிறந்ததாகக் கொள்ள வேண்டும். இந்த மூன்றுவதன் மூலமாகத்தான், முதலிரண்டையும் அவன் நாடுதல் வேண்டும்.

அதிகமான உத்தியோகஸ்தர்கள் இருப்பின் அதிக ஆலோசனைக்கு இடம் உண்டாகி காரியப்படுவது காலதாமதமாகி பொது நன்மை சுருங்கிவிடும். குறைவான அதிகாரிகளால் தான் விசாலமான சமுதாயத்தை நல்ல முறையில் நிருவாகம் செய்யமுடியும்; ஆனால் தேவைக்குக் குறைவான அதிகாரிகள் இருந்தாலும் பாதகமே விளையும், அதிகாரிகள் எவ்வளவு தேவை என்பதை சட்ட நிர்மாணகர்த்தர்களே நிர்ணயிக்கவேண்டும்.

## 22. ஜன ஆட்சி (Democracy)

சட்டமியற்றும் அதிகாரமும், அதை நிருவாகம் செய்யும் அதிகாரமும், ஒன்றுபட்டுள்ள அரசியல் அமைப்பு சிறந்தது என்று சொல்லுவர். ஆனால் இந்த விஷயத்தில் அரசு, அரசாங்கம் இவையிரண்டும் ஒன்று சேர்க்கப்பட்டுத் தங்கள் இலட்சியத்தையே இழந்துவிடுகின்றன. சட்டமியற்றுபவர்களும், சட்ட பரிபாலன ஆட்சி செய்பவர்களும் ஒருவராகவே இருக்கும் முறை சரியானதல்ல; சமுதாயம் முழுவதும் பொதுக் காரியங்களில் கவனம் செலுத்த முயலவேண்டும். தனிப்பட்ட மனிதர்கள் தங்கள் செல்வாக்கைப் பிரயோகிக்க அரசாங்கம் அனுமதிக்கக் கூடாது. சட்டத்தை நிர்மாணிப்பவர்கள் தங்கள் சொந்த இச்சைகளை, தங்கள் இனத்தவருக்குச் சலுகைகளைத் தாங்கள் இயற்றும் சட்டங்களின் மூலம் பூர்த்திசெய்துகொள்ள அனுமதிக்கப்படக்கூடாது. மக்கள் ஆட்சி எங்கும் பூரணமாக நடைபெற்றது கிடையாது, முடியாது என்று சொல்பவர்கள் உண்டு. ஆனால் ஒன்று மட்டும் கவனத்தில் வைத்துக்கொள்ள வேண்டியது யாதெனில், எவ்வளவுக்கெவ்வளவு அதிகமான மக்கள் அரசாங்க நிருவாகத்தில் உரிமைகொள்கின்றனரோ, அவ்வளவுக்கவ்வளவு குறைவான அதிகாரிகள் இருக்கவேண்டும்.

சமுதாயத்தில் எல்லாமக்களும் அரசியல் நிருவாகத்தில் பங்குகொள்ளவேண்டுவதற்கு—தேசம் மிகவும் சிறியதாயிருக்க

வேண்டும்—எல்லா மக்களும் ஒருவருக்கொருவர் தெரிந்தவர்களாக இருத்தல்வேண்டும்—மக்கள் எளிய பழக்க வழக்கங்களையுடையவர்களாக இருத்தல் வேண்டும்—எல்லா மக்களும் சம அந்தஸ்து உள்ளவர்களாகவும், சம நிலையில் செல்வம் உள்ளவர்களாகவும் இருக்கவேண்டும்; மேலும் உரிமை, அதிகாரம் இவைகளை உபயோகிக்கும் காரியத்தில் ஒரேவித மனப்போக்குள்ளவர்களாயும் இருக்கவேண்டும்; மக்கள் அதிஆடம்பரமான வாழ்க்கை வாழ்பவர்களாக இருக்கக்கூடாது. ஒழுக்கமே ஒரு சமுதாயத்தின் அடிப்படையாக இருக்க வேண்டுமென்று மாண்டெஸ்க்யூ கூறுகிறன்.

ஜன ஆட்சி முறையான அரசியல் அமைப்பு உள்ள சமுதாயங்களில் குழப்பங்கள் விளையக் சந்தர்ப்பங்கள் உள்ளன என்று கூறுகிறார்கள். இதற்குக் காரணம் என்னவென்ருல், அந்த தேசத்து மக்கள் எப்பொழுதும் ஏதாவது மாறுதல் செய்யவேண்டும் என்று எண்ணிக்கொண்டுள்ளனர். இதற்குப் பதிலாக, “அமைதியுடன் கூடிய அடிமைத்தனத்தைவிட நாங்கள் ஆபத்துடன் கூடிய சுதந்திரத்தையே விரும்புகின்ருேம்” என்ற எண்ணமுள்ள ஜனங்கள் இருந்தால் ஜன ஆட்சி நன்கு பிரகாசிக்கும்.

## 23. மேன்மக்களாட்சி (Aristocracy)

ஆதிகாலத்தில், சமுதாயத்தின் ஆட்சி பல குடும்பத் தலைவர்களின் கைகளில் இருந்தது—அவர்களின் பழுத்த அனுபவம் நிருவாகத்திற்கு பேருதவியாயிருந்தது. அரசியல் அமைப்பில் உண்டான மாறுதல்களால் மனிதர்களிடையில் ஏற்றத்தாழ்வுகள் ஏற்பட்டன. வயதுக்கு இருந்த மதிப்பு, பணத்திற்கு மாற்றப்பட்டது. பிறகு பரம்பரை உரிமையும் உண்டாயிற்று. மேன் மக்கள் ஆட்சியில், மூன்று பிரிவுகள் உள்ளன— 1. இயற்கையானது; 2. தேர்ந்தெடுப்பது; 3. பரம்பரையாக வந்து கொண்டிருப்பது. இதில் இரண்டாவதுதான் சிறந்தது; மூன்ருவது மிகவும் கேவலமானது.

மக்களாட்சியில் எல்லா மக்களும் அதிகாரிகள்; ஆனல் மேன்மக்களாட்சியிலோ ஆளும் அதிகாரிகள் வெகு சிலரே; இவர்கள் பொதுமக்களால் தகுதி, திறமை, அனுபவம், என்ற ரீதியில் தேர்ந்தெடுக்கப்பட வேண்டும். இவர்களால் நடத்தப்படும் நிருவாகம் நன்ருயிருக்கும். இவர்கள் பொதுநலத்தையே கவனிக்க கூடியவராய் அமையவேண்டும். மக்களாட்சியின் கீழ் கிடைக்கக்கூடிய நன்மைகள் மேன்மக்களாட்சியில் இல்லா

மற்போனாலும், மேன்மக்களாட்சியின் கீழ் தனிப்பட்ட நன்மைகள் உள்ளன. நிருவாகப் பொறுப்பைக் கொண்டுதான் நிருவாக அதிகாரமும் அளிக்கப்படவேண்டும்; பணத்தைக் கொண்டு அதிகாரத்தை மேன்மக்கள் ஆட்சியினரிடம் ஒப்பு விப்பது தவறு!

## 24. மன்னராட்சி (Monarchy)

தனிமனிதனொருவன் பல சக்திகளின் சேர்க்கையாக பரிணமிக்கும்போது அவன் மன்னன் எனப்படுகிறான். ஒரு இயந்திரத்திற்கு வேண்டிய சக்திகள்யாவும் ஒரே ஒரு இடத்தி லிருந்து உற்பத்தியாவது போலவே, இங்கு அரசாங்க சக்திகள் யாவும் அரசனிடத்திலிருந்து புறப்படுகின்றன. இந்தச் சக்தியாவும் முரண்பாடானவையல்ல; ஒன்றுபட்டவை. குறைவான முயற்சி யினால் அதிகமான பலன் தருவது முடியாட்சி என்கிறார்கள். ஆனால் மன்னனின் இந்தச் சக்திகள் யாவும் பொது நன்மையை —மக்களின் பொதுப் பலத்தையுமே நாடவேண்டும். ஆனால் மன்னன் தங்கள் அதிகாரத்திற்குக் குறைவு உண்டாகா வண்ணம், சர்வாதிகாரமும் தங்களிடம் இருப்பதையே இச்சிப்பான். அதனால் மக்களைப் பலவீனர்களாகவும், பிளவுபட்டவர் களாகவும், தரித்திரக்காரர்களாகவும் ஆக்கவே முயல்வான். அரசன் சுயநலவாதி; தனது சுய அதிகாரத்தைத்தான் அவன் கவனித்து வருவான்! அத்தகைய யதேச்சாதிகாரி ஆளும் சமுதா யத்தின் அளவும் பெருகியிருந்தாலோ மக்களுக்கும் மன்ன னுக்கும் இடையில் உள்ள தொடர்பு அவ்வளவுக் கவ்வளவு விலகிவிடுகிறது. அதனால் அரசன் தனக்கும் மக்களுக்குமிடையே அநேகப் பதவிகளை உண்டாக்க வேண்டியுள்ளது. அதனால் உண்டாகும் தீமையை நாம் முன்னமே கண்டோம். அதிகாரி களைத் தேர்ந்தெடுக்கும் விஷயத்தில், பொதுமக்களின் அபிப் பிராயமே மன்னனின் அபிப்பிராயத்தைவிடச் சிறந்ததாகும்.

அரசன் பெரிய நாட்டை ஆளுவது அவன் திறமையைப் பொருத்துள்ளது. ஒரு தேசத்தை சேனபலத்தால் கைப்பற்றுவது சுலபம். ஆனால் அதை ஆட்சி செய்வது கடினம். யதேச்சாதி காரிக்கு நிறையத் திறமையிருந்தாலும், அது சுயநலத்துக்காகவே பயன் படுத்தப்படும்; அதனால் பொது ஜனங்களுக்கு நன்மை பிறந்துவிடாது. திறமையற்ற அரசனின் ஆட்சியின் கீழ் மக்கள் அனுபவிக்கும் துன்பங்களையே திறமையுள்ள அரசனின் ஆட்சியின் கீழும் அனுபவிப்பர். மற்றொரு தீமை என்ன வென்றால் மன்னராட்சியில் தொடர்ச்சியைக் காண்பது அரிது; எல்லா மன்னர்களும் ஒரே மாதிரியான திறமைசாலிகளா

யிருப்பது அபூர்வமாகும். ஒரு அரசனின் மரணத்திற்கும், அடுத்த திறமைசாலியான மன்னன் வருவதற்கும் இடையில் உள்ள முடியாட்சிப் போட்டியின் இடைக்காலம் மிகவும் ஆபத்தானது. இதற்காகவே பரம்பரை உரிமை உண்டாக்கப்பட்டது. ஓர் அரசியல் திட்டம், மன்னராட்சியின் கீழ் தொடர்ந்து நடைபெறமுடியாது. அரசாங்கத் தன்மையை தன் குணத்திலே இயற்கையாக கொண்டுள்ள அரசனைக் காண்பதுமரிது. திறமையுள்ள மன்னர்களுக்குப்பின், திறமையற்றவரும், கொடுங்கோலர்களும் வருவது இயல்பு. மக்கள் தீயவர்களாக இருப்பின் அவர்களுக்குக் கொடிய அரசரைக் கடவுள் நியமித்து அனுப்பினர் என்பது அப்பட்டமான பொய்யாகும். இதனல் மன்னராச்சியின் கீழ் மக்களுக்கு அநேக பாதகங்கள் விளைய இடமுண்டு.

## 25. நல்ல அரசாங்கத்தின் அறிகுறிகள்

## (The Marks of a Good Government)

எல்லாமுறைகளிலும், எல்லா வழிகளிலும் நன்மை பயக்கக்கூடிய அரசாங்கமுறை என்பது எது என்பதைச் சரியான படியாக நிர்ணயிக்க முடியாது. பலர் பலவிதமாகத் தத்தமக்கு வேண்டிய விஷயங்களைச் சொல்லி இன்ன இன்ன விதமான அரசாங்கந்தான் சிறந்தது என்று வாதிப்பார்கள். மக்கள் அனைவரும் தக்க பாதுகாப்புடனும், சுகத்துடனும் வாழ வேண்டும். வெளி நாடுகளின் உதவியைப் பெருமலும் அந்நிய நாட்டு மக்கள் குடியேருமலும், குடியேற்ற நாடுகளைக்கொண்டிராமலும், மக்கள் தொகையில் பெருகியிருக்கும் நாடு—அந்நாட்டு அரசாங்கமே சிறந்தது.

## 26. அரசாங்கத்தின் துஷ்ப்பிரயோகமும் சீரழிவுப் போக்கும்.

## (The Alure of the Government and its tendency to degenerate)

மக்கள் சக்தி பலம்பெற்றுவிடாமலிருப்பதற்கு எப்போதும் அரசாங்கம் தன்னுடைய எதிர்ப்புச் சக்தியை வளர்த்து வருகிறது. ஆனல் மக்கள் சக்தியையும், அரசாங்க சக்தியையும் சமநிலைப்படுத்த ஒரு நடுசக்தி கிடையாத காரணத்தால், நாளாவட்டத்தில் மக்கள் சக்தி அடங்கி முடங்குகிறது. அரசாங்கம் இரண்டு வழிகளில் சீர்கெட்டுப்போகிறது—ஒன்று அரசாங்கம் சுருங்கிப்போவது அல்லது கலைந்து போவது. மக்களாட்சி, மேன்மக்களாட்சியாகி,

முடியாட்சியாகி விடும்நிலை அரசாங்கம் சுருங்கிப் போவதாகும். தன்னையே பாதுகாக்கும் சக்தியை இழக்கும் சமயத்தில் அரசாங்கம் தனது அமைப்பை மாற்றியமைத்துக்கொள்ளும். அரசாங்கமானது மக்கள் ஆதிக்கத்தை சுவீகரித்துக் கொள்ளும் போது ஆட்சி சக்தியின் கட்டுக்கோப்பும் நாளடைவில் முறுக்குத் தளர்ந்துபோகும், சமுதாய ஒப்பந்தமும் ரத்தாகிவிடும்.

சில சமயங்களில், அதிகாரிகள் கூட்டாகப் பிரயோகிக்க வேண்டிய அதிகாரத்தைத் தனித்தனியாகத் தனிப்பட்ட முறையில் பிரயோகிக்க ஆரம்பிப்பார்களேயானால் அரசாங்கம் சீரழிந்து விடும்.

## 27. அரசியல் சமுதாயத்தின் அழிவு

### (The dissolotion of the body Politic)

தனது தேகத்தின் அழிவுக்குத் தானே மூலகாரணமாயுள்ள மனிதஉடல்போலவே, அரசியல் சமுதாயம் ஆரம்பிக்கும் சமயத்திலேயே, தனது அழிவுக்கான வித்துக்களைத் தானே கொண்டுள்ளது. தன் வாழ்நாளை அதிகமாக்கும் முயற்சியில் மனிதன் தோல்வியைத்தான் காணமுடியும்—ஆனால் நல்லதொரு அரசியல் அமைப்பின் உதவியினால் ஒரு ராஜ்யத்தின் வாழ்நாளை அதிகரிக்கச் செய்ய முடியும்.

மனித உடலின் அமைப்பு இயற்கையினால் அமைக்கப் படுகிறது ; ராஜ்யத்தின் அமைப்பு ஒரு கலையை பொறுத்திருக் கிறது. அரசியல் வாழ்வின் இலட்சியம்—அரசு அதிகாரம். சட்டம் செய்யும் அதிகாரம் படைத்த ஜன ஆதிக்கமானது, ஒரு அரசின் இருதயமாகும்; அந்தச் சட்டத்தை நடைமுறையில் கொண்டுவரும் அரசாங்கமானது அரசின் மூளையாகும் ; இவ்விரண்டும் அரசின்பல அங்க அவையவங்களின் இயக்கங்களைக் கட்டுபடுத்துவன. மூளையானது பாரிசவாயுவினால் பாதிக்கப்பட்டு மந்தப்பட்டால்கூட ஆசாமி உயிருடன் இருந்துவரலாம் ; ஆனால் இருதயத் துடிப்பு நின்றதும் உயிர் உடலைவிட்டு ஓடிவிடும். அதுபோலவே ஜன ஆதிக்கம் உரிமை இல்லாத விடத்து சமுதா யத்தின் உயிர் தீர்ந்துவிடும் ! சட்டங்களைவிட, சட்டங்களை நடைமுறையில் கொண்டுவரும் அதிகாரம்தான் வாழ்ந்திருப்பது. பழங்காலத்தில் ஏற்படுத்தப்பட்ட சட்டங்கள் மக்களுக்கு நன்மை பயக்கும் காரணத்திற்காகத்தான் அவற்றிற்கு மக்கள் கீழ்ப் படிந்து வருகின்றனர். பழைய சட்டங்களுக்கு மதிப்புக் கொடுப்பது நின்று போகும் பொழுதுதான் சமுதாயம் மாற்றமுறத் துவங்குகிறது.

## 28. அரசு அதிகாரம் நிலைபெறுவது எப்படி ?

## (How The Sovereign Authority is Maintained?)

மக்கள் எல்லோரும் ஒன்றுகூடி அரசியல் நிருவாகத்தில் பங்குகொள்ள இயலுமோ? எனக்கேட்கிறார்கள். ரோம சாம்ராஜ்யத்தில் சில நாட்களுக்கொருமுறை மக்களனைவரும் ஒன்றுகூடித் தங்களின் அரசுரிமையை பிரயோகித்து வந்தனர். இதுபோல முற்காலங்களின் மக்கள் ஒன்றுகூடி அரசு நிருவாகத்தில் பங்குகொண்டு வந்தனர். இதுபோல மக்கள் அடிக்கடி கூடவேண்டிய சந்தர்ப்பம் வாய்க்கின்றது. இம்மாதிரி யான காரியங்களில் மிக முக்கியமாகக் கவனிக்க வேண்டியது என்னவென்றால், அரசு அதிகாரம் பிரிக்க முடியாதது; பிரிக்க வேண்டின் அதை அழித்துத்தானாக வேண்டும். மற்றுமொரு முறையில், அரசியல் நிருவாக முறையில், ஒரு தலைநகரை நிர்மாணிக்கலாம். பிறகு ஒவ்வொரு நகரத்திலும், மக்கள் சபை கூடி நிருவாகத்தை நடத்திவரலாம். (மத்திய அரசாங்கம் சர்வாதிகாரமாயிருப்பதைவிட, நகராட்சி நிர்வாக அதிகாரங் களும் உரிமைகளும் பெருகுவதுதான் நல்லது.) இதற்குப் பல பாகங்களில் வசிக்கும் மக்கள் ஒரே முறையான வாழ்வு, சம சொத்துரிமை கொண்டவர்களாக இருக்கவேண்டும். இதுபோன்ற பொதுமக்கள்சபை பல இடங்களில் கூடுவதை அரசாங்கம் மறைமுகமாகத் தடுக்க முயலலாம். ஆனால் அது நேராதபடி மக்கள் பார்த்துக்கொள்ளவேண்டும். அரசாங்கத்தின் சக்தி அதிகமாக வளர வளர, மக்கள் சக்தி குன்றும் குறையும்; அந்தகைய ராஜ்யமும் நாளடைவில் மறைந்து விடும்!

## 29. மக்கள் பிரதிநிதிகள். (Representatives)

அரசியல் சமுதாயத்திற்குப் பணியாற்றுவதுதான் மக்களின் முக்கியமான கடமையாகும். நேரடியான உழைப்பிற்குப் பதில் பணத்தின் மூலம் வரி செலுத்திவிட்டுப் பேசாமல் தங்கள்பாடு தங்கள் வியாபாரப் பொழுதுபோக்குகளில் மூழ்கிவிடுவதும், தமது பிரதிநிதிகளை சட்டசபைகளுக்கு அனுப்பித் தாம் வீட்டி லிருப்பதும் சரியான தேசப்பணியாகா. செல்வ வாழ்க்கையில் திளைத்து, சோம்பேறித்தனமான வாழ்க்கையை வாழ்ந்து, தம் இச்சைகளின் இன்பங்களில் மூழ்கி தேச நலத்தையும் அதற்குறிய தேவையையும் ஜனங்கள் மறந்து விடுகின்றனர். உழைப்பும் சுதந்திரமும் ஒன்றுபட்டவை. அரசாங்க காரியங் களில் அலட்சிய பாவத்துடனிருக்கும் பொது மக்களைக் கொண்ட

நாடு உருப்படாது. "அரசியலைப்பற்றி எனக்கென்ன?" என்று கருதும் மனப்பான்மையுடைய பொது ஜனங்களை உடைய நாடு செத்துவிட்டதாகவே கருதலாம். அரசியல், மனிதனின் வாழ்வைப் பற்றிய கவலைகளைக் குறைக்காததால்தான், பொது ஜனங்கள் அரசியலைப்பற்றிக் கவலைப்படாமல் பிரதிநிதிகளைத் தேர்ந்தெடுத்து அனுப்புவதோடு தங்கள் பொறுப்புத் தீர்ந்து விடுவதாக நினைக்கிறார்கள்.

நாட்டின் நிருவாகத்தில் பொதுமக்களுக்குக் கவலையற்ற தன்மை, சுயநலம், பிறநாடுகளின் ஆக்கிரமிப்பால் எல்லை விஸ்தரிப்பு, அரசாங்க நிருவாகத்தில் காணப்படும் ஊழல்கள்—இவைதான். பிரதிநிதித்துவமுறை ஏற்படக் காரணமாயிருந்தன. பொதுமக்களின் இச்சைதான் அரசு! இந்த இச்சையை—பல மக்களுடைய இச்சைகளை, தனி ஒரு பிரதிநிதி பிரதிபலித்துக் காட்ட முடியுமா! உண்மையாக ஜனப்பிரதிநிதிகள் என்பது பெயரளவில்தான்; செயலில் அல்ல! இவர்கள் மக்களின் காரிய கர்த்தர்கள்—அவ்வளவுதான். பிரதிநிதிகளைத் தேர்ந்தெடுத் தனுப்பும் சுதந்திரமுடைய பொதுமக்கள், பிரதிநிதிகளைத் தேர்ந் தெடுத்தனுப்பிய பிறகு அரசாங்கத்திற்கு அடிமையாகி விடுகிறார்கள்.

பொது ஜனங்கள் நேரடியாக அரசியல் விவகாரங்களில் பங்கும் பொறுப்பும் கொள்ளவில்லையானால் அது பொது ஜன ஆட்சி ஆகாது. எந்த ஜாதி தனக்கென்று பிரதிநிதிகளைத் தேர்ந் தெடுப்பதோடு திருப்தியடைந்து விடுகிறதோ அது அப்போதே சுதந்திரத்தை அடகு வைத்துவிடுகிறது.

## 30. அரசாங்க ஸ்தாபனம்—ஒப்பந்தமாகாது

### (That the Institution of the Government is not a contract)

எல்லா மக்களும் சம அந்தஸ்து உடையவர்கள்; எல்லோ ருக்கும் நன்மையுண்டாக இன்னின்ன செய்யவேண்டும் என்பதைச் சொல்லப் பொதுமக்கள் எல்லோருக்கும் உரிமை உண்டு. தான் செய்யாதவைகளைப் பிறர் செய்யக்கூடாது என்று சொல்வதற்குமட்டும் உரிமை கிடையாது. அரச சக்திக்கு எல்லை வகுக்க முடியாது—அப்படி முயன்றாலும் அதை அழிப்பதாகும். அரசானது எல்லோருக்கும் பொதுவான காரியங்களையே செய்யும்—குறிப்பிட்ட, தனிமனிதனுடன் எவ்விதமான நடவடிக் கையையும் செய்யாது. "எங்களை ஆளுங்கள்!" என்று ஆட்சி அதிகாரத்தை ஒரு சிலரிடம் பொதுமக்கள் ஒப்படைப்பது தவறாகும். எங்கும் ஒரே ஒப்பந்தம் தானுண்டு. அதாவது, எல்லா மக்களும் சம அந்தஸ்தும், சம உரிமை கொண்டவராயும் ஒன்று சேருவதாகும். இதைத்தவிர வேறு ஒப்பந்தமே சமுதாய அரசி

யலில் கிடையாது. மக்கள் அரசு என்றமுறையில் பொதுவான தொரு சட்டத்தை நிறைவேற்றுவதோடு நில்லாமல், நிருவாக அதிகாரிகள் என்ற முறையில், குறிப்பிட்ட சட்டங்களையும் நடைமுறையில் கொண்டுவருவார்கள். இதுசாத்தியமே; இங்கிலாந்தில் உள்ள 'காமன்ஸ் சபை' மக்கள் சக்தியைப் பிரதிபலித்தும், தேவைப்படும்போது காரியகமிட்டியாகவும் மாறி அரசின் காரிய நிருவாகம் செய்யும் சபையாகவும் இருந்துவருகிறது. அரசாங்க ஸ்தாபனம் ஒரு ஒப்பந்தம் மட்டுமல்ல; அஃதொரு சட்டமுமாகும். நிருவாக அதிகாரிகள் பூரண அதிகாரம் கொண்டவர்களல்லர். அவர்களை நீக்கும் அதிகாரமானது பொதுமக்களுக்கே இருக்கவேண்டும். ஆளுவோர் ஆளப்படுவோர் என்ற ரீதியில் ஒருவித ஒப்பந்தமும்கூடாது. எல்லோரும் அரசியல் நிர்வாகத்தில் பொறுப்புள்ளவர்களாகவே இருக்கவேண்டும். மக்கள் எவ்விதமான அதிகாரிகளுக்கும் கீழ்படிவதாக ஒப்பந்தம் எப்பொழுதும் செய்துகொள்வதில்லை. ஆட்சிமுறையை மாற்றி அமைக்கவும் மக்களுக்கு உரிமை உண்டு, அரசுக்கு மக்களின் சுதந்திரத்தில் தலையிட உரிமை கிடையாது. மக்கள் இஷ்டப்பட்டால் சட்டங்களையும் ரத்துசெய்துவிடலாம். தமக்குத் தேவையற்றது என்று நினைக்கின் சமுதாய ஒப்பந்தத்தையும் ரத்து செய்து, பிரஜா உரிமையையும் துறந்து விட்டு, தன் சமுதாயத்தைவிட்டு வெளியே போய்விடவும் உரிமை உண்டு.

புத்தகம் நான்கு

## 31. மக்கள் சக்தி, அழிக்கமுடியாது.

### (That the General will is Indestructible)

பல மக்கள் எல்லோரும் ஒன்றுகச் சேர்ந்து தங்களை ஒரு சமுதாயமாகச் செய்துகொள்ளும்போது, பொதுநலம், மக்களின்சுகம்—இவைதான் அவர்களின் ஒரே இச்சையாகும். எல்லா மக்களின் மனதிலேயும் இந்த இச்சையிருந்தால் அரசசக்திகள் யாவும் பலமானதாகவும், எளிமை நிறைந்ததாயும் விளங்கும். எங்கும் பொது நலம் பரிணமிக்கும். நேர்மையும் சரள குணமும் கொண்டுள்ள மக்கள் வாழ்கிற சமுதாயத்திற்கு அதிகமான சட்டங்கள் தேவையில்லை. தனிப்பட்டவர்கள் தங்களின் சுயநல உரிமைகளுக்காகப் போராடுவார்களேயானல்—சங்கங்களும், கட்சி இயக்கங்களும் வலுக்குமேயானல்—சமுதாயக் கட்டுப்பாடு சீர்குலையும்; ராஜ்ஜியம் பல மற்றுப் போகும். பொது ஜன அபிப்பிராயத்தில் வேற்றுமைகள் காட்சியளிக்கும்; சுயநலவாதிகள் சந்தர்ப்பத்தைத் தங்கள் சுயநலத்திற்காகப் பயன்படுத்திக் கொள்வார்கள். ஆனல் அப்போதும் பொது மக்கள் இச்சை அடியோடு அருகி மறைந்து விடுவதில்லை.

ராஜ்யத்தின் நன்மையை மறந்து தனிமனிதன், 'தனிப்பட்ட நபர்களின், அல்லது தனிப்பட்ட இயக்கங்களின் நன்மை, என்று கருத முற்பட நேரிடும் போதுகூட, மக்களின் பொது இச்சை என்பது அழிக்கவே முடியாததாகும்.

## 32. வாக்குரிமை (Voting)

பொது மக்கள் சட்டசபைகளில் ஒற்றுமை காணப்படின், அங்கு பொது ஜன இச்சை உயர்ந்து இருக்கிறது என்று சொல்லி விடலாம்; இப்படியில்லாது வேற்றுமைகளும், விவாதங்களும் குழப்பங்களும் பொதுமக்கள் சபையில் காணப்படின், அந்தச் சமுதாயம் நாசபாதையிலே நடைபோடுகிறது என்றும் சொல்லி விடலாம். மக்கள் ஒற்றுமையான அபிப்பிராய பேதமற்ற அபிப்பிராயங்களைக்கொள்ளும் காரியம், வட்டம் போன்றது. இதன் ஒரு கோடியில் சுதந்திர நாட்டு மக்கள்; மற்ற கோடியில் அடிமை நாட்டு மக்கள். அடிமை நாட்டு மக்கள், அச்சமும், பிறரைப் பாராட்டும் மனப்பாங்கும் கொண்டு விடுவதால் சுயமாக சிந்தித்து தீர்க்கமான ஆலோசனைக்கு வரும் நிலையில் இருப்ப தில்லை; குறிப்பிட்ட ஒருவரைப் பாராட்டுவதற்காகவோ சபிப்ப தற்காகவோ மட்டுந்தான் 'ஓட்' (வாக்குரிமை) கொடுப்பவர்களாகி விடுகிறார்கள்.

மக்களின் அபிப்பிராயம் ஒன்றுபட்டிருக்க உதவுவது சமு தாய ஒப்பந்தமாகும். மக்கள் தன்னிச்சையாகச் செய்துகொள்ளும் சட்டமிது; மண்ணில் பிறக்கும் ஒவ்வொரு மனிதனும் சுதந்தி ரத்துடன் பிறக்கின்றான்; ஒவ்வொருவனும் தனக்கே எசமானன்; இப்படியானவனை அவன் இச்சைக்கும் நேராக யாரும் அடிமைப் படுத்திவிட முடியாது! அடிமையின் மகன் அடிமையாய் பிறக் கிறான் என்று முடிவு கட்டுவது அடிமுட்டாள்தனமாகும். முதலில் சமுதாயம் அமைக்கப்படும் சமயத்தில் அதில் சேராது அன்னியர் களாகவே வாழ்ந்தாலும், இந்த ஒப்பந்தத்திற்கு உடன்பட்டவர்க ளாகவே அவர்கள் கருதப்படுவர்.

## 33. தேர்தல்கள் (Elections)

சுய இச்சையுள்ளவர்கள்தாம் சுதந்திர மனிதர்களாவர். ஜன இச்சை என்பது பெரும்பாலான மக்களின் மனதில் மருவி வரும் அபிப்பிராயமாகும். ஒரு பிரச்னையானது பெரும்பாலான வரின் 'ஓட்டுகளின்' மூலம் (வாக்கெடுப்புகளின் மூலம்) நிறை வேறுமேயானால் அதுவே சட்டமாகி மற்றவரையும் கட்டுப்

படுத்துவதாகும். பெரும்பான்மையானவரின் வாக்குரிமைதான் ஒரு வியவகாரத்தைப்பற்றிய பொது ஜன அபிப்பிராயமுமாகும்.

அதிகாரிகளைத் தேர்ந்தெடுத்து நியமனம் செய்வதற்கான இரண்டு வழிகள் உள்ளன. ஒன்று நேரடியாகத் தேர்ந்தெடுத்து நியமனம் (Choice) செய்வது. மற்றொன்று சீட்டெடுப்பு (Lot) முறையாகும். இவர்களை நியமிப்பது அரசாங்கத்தின் கடமையாகும்.

அரசாங்க உத்தியோகங்கள் என்பது ஒரு தனி நபருக்கோ ஒரு தனி இனத்தவருக்கோ காட்டப்படும் சலுகைகள் அல்ல; பொறுப்புள்ள வேலையாகும்.

மக்களாட்சி முறை நடைபெறும், மக்கள் சமுதாயத்தில், இரண்டாவது முறையான திருவுளச் சீட்டின் மூலம் அதிகாரிகளை நியமனம் செய்வது சிறந்ததாகும். அதனால் தனிப்பட்டவர்களுக்கு உத்தியோகச் சலுகைகள் காட்ட இடமிராது. தகுதி, திறமை, ஒழுக்கம்—இவையைக் கொண்டுள்ள ஜனங்களடங்கிய சமூகத்தில் இந்தத் திருவுளச் சீட்டின் மூலம் அதிகாரிகளை நியமிக்கும் முறையை உபயோகிப்பதால் அதிகாரிகளும் ஒரே மாதிரியானவராக இருப்பார்கள்.

இவ்விரு முறைகளையும் ஒரே சமயத்தில் உபயோகித்தால், விசேஷத் திறமையும் தகுதியும் காண்பிக்க வேண்டிய உத்தியோகங்களுக்கும், நீதிபரிபாலனம், விவகாரங்களைப் பற்றிய ஞானம் இவற்றைக் காண்பிக்க வேண்டிய வேலைகளுக்கும், அதிகாரிகளை நியமனம் செய்ய, சீட்டு முறை மிக அதிகப் பயன்களைத்தரும். ஆனால் முடியாட்சியின் கீழே இரண்டு முறைகளும் இடம் பெறாது. மன்னன் தன் இஷ்டப்படிதான் அதிகாரிகளை நியமித்துக்கொண்டு போவான். அது பொது நலத்திற்காக ஆளப்படும் ஆட்சியாக ஆகாது!

## 34. 35. சர்வாதிகாரிகள்—கண்காணிப்பு அதிகாரிகள் (Dictatorship - Censorship)

சட்டம் ஒரு முறை இயற்றப்பட்ட பிறகு அதை மாற்றியமைக்க இயலாது. சமுதாயத்தில் ஏற்படும் சில சந்தர்ப்பத்திற்கு இந்தச் சட்டம் ஏற்றதாயில்லாமல் இருக்கலாம். புதுச் சட்டத்தை நெருக்கடியான ஒரு சூழ்நிலைக்காக இயற்ற வேண்டுமானல் அதற்கு எத்தனையோ சம்பிரதாயங்களை அனுஷ்டிக்க வேண்டியிருக்கும். புதிய சட்டத்தைப் புகுத்தும் சமயம் புதிய சிக்கல்கள் உண்டாகலாம். அதனால் தேசத்திற்கு எதிர்பாராத

நெருக்கடியோ ஆபத்தோ நேரிடுங்காலத்தில், குறிப்பிட்ட ஆபத்தைச் சமாளிப்பதற்கு ஒருவனையோ ஒரு சிலரையோ, சர்வாதிகாரிகளாக மக்கள் தேர்ந்தெடுக்கலாம். நாம் 'சர்வாதிகாரி' நியமிக்கப்படும் சூழ்நிலையை மேலே கண்டோம். அவனது கடமைகள் யாவை? இவன் மக்களின் அபிப்பிராயத்தைத் தழுவியே நடப்பவன்; நெருக்கடியைச் சமாளிப்பதற்குத் தேவையான குறிப்பிட்ட காலத்திற்குத்தான் அவன் 'சர்வாதிகாரியாக'நியமிக்கப்படவேண்டும்; அந்தக் காலம்வரை சட்டங்களை நடை முறையில் கொண்டுவரும் பொறுப்பு அவனிடத்தில் ஒப்புவிக்கப்படும். ஆனால் நெருக்கடி தீர்ந்த பிறகு அவனைச் சர்வாதிகாரியாக நீடிக்க விடக்கூடாது. நீடிக்கவிட்டால் அவன் கொடுங்கோலனாகிவிடுவான். கண்காணிப்பு அதிகாரிகள்—பொது மக்களின் அபிப்பிராயங்களை வெளிப்படுத்துபவராக வேண்டுமே தவிர, அவற்றை அடக்கிவிடுவோராக விளங்கக்கூடாது. சட்டங்களின் மூலம் மக்களிடையே ஒழுக்கத்தைப் புகுத்திவிட முடியாது. சட்டங்கள் சரியான முறையில் நடை முறைக்குக் கொண்டுவரப்பட்டால், மக்களின் அபிப்பிராயம் ஒழுங்கான பாதையில்செல்லும்படிக் கண்காணிக்கப்படுமேயானால் மக்களின் ஒழுக்கம் தானாகவே திருந்திவிடும். புதிய ஒழுக்கங்களைப் புகுத்துவதற்காக அல்ல, இருக்கும் ஒழுக்கங்களை சரியான முறையில் பாதுகாத்து வரவே கண்காணிப்பு அதிகாரிகள் நியமிக்கடவேண்டும். அவர்கள் மக்களின் அபிப்பிராயம் தவறான பாதையில் செல்லாமல் கண்காணித்துவரவேண்டுமே தவிர மக்களின் அபிப்பிராயத்தை அடக்க முயலக்கூடாது.

## 36. மக்கள் மதம் (Civil Religion)

அரசர்களுக்கு முன் தெய்வங்கள்தாம் ஆதி மனிதர்களுக்கு அரசனாயிருந்தன; அரசாங்கத்திற்குமுன் தெய்வ அரசு (*Theogracy*) இருந்தது. ஒவ்வொரு மக்களினமும் தன் தெய்வத்தைத் தொழுதுவந்த காரணத்தால், எத்தனை மக்கள் இனம் இருந்தனவோ அத்தனை தெய்வங்கள் உண்டாயின. போர்க்களத்தில் சந்திக்கும் இரு தரப்பினரும், ஒரு பொதுத் தலைவனைக் கொள்ளாதது போலவே, இரண்டு மக்களினம் இருவிதக் கடவுளரைத்தாம் தங்கள் தங்கள் சமூகத் தலைவராகக் கொண்டன. பல கடவுளர்கள் இருந்த காரணத்தால் பல சண்டை சச்சரவுகள் தோன்றின.

ஆதிகாலத்தில் அரசியலும், மதமும் ஒன்றுபட்டிருந்தன. அரசியல் காரணத்தில் உண்டான போர், மதப் போராகவே கருதப்பட்டது. ஒரு தேசத்தினர் வணங்கும் தெய்வத்தை மற்ற தேசத்தவர் வணங்கக்கூடாது என்ற நியதி இருந்தது. போரில் தோல்வி கண்டவர், வெற்றி கண்டவரின் தெய்வங்களை வணங்கும்படிக் கட்டாயப்படுத்தப்பட்டனர். ஏசுநாதர் வந்த பிறகு

அரசியலானது மதத்தைவிட்டுப் பிரிந்தது. பிறகு கடவுள் அரசு பூமிக்கு வந்துவிட்டதாகவும், அரசன் கடவுளின் அமிசம் என்றும் கூறப்பட்டது. இதை மதத்தின் தலைவர்கள் எதிர்த்தனர். அரசனுக்கும், மதத்தின் தலைவர்களுக்கும் தீராப் பகை மூண்டது. தனி மனிதனின் இயற்கை மதம், தேசத்தின் பொதுச் சடங்கு மதம் என்ற இரு பிரிவுகள் தோன்றின. மூன்றுவது மதமாக புரோகிதமதம் என்று ஒரு விபரீத மதம் தோன்றியது. இவர்களுக்கு எல்லாமே இரட்டையாக இருந்தன. இந்த மூன்று விதமான மதங்களில் புரோகித மதமானது மிகவும் குரூர மானது ; மிகவும் நாசத்தை விளைவிக்கக்கூடியது.

இரண்டாவது சொல்லப்பட்ட தேசிய மதம் தேசத்திற்குரிய மதமாகும். தெய்வ பக்தியுடன் தேசத்தின் சட்டங்களுக்கு அடங்கி நடக்க வேண்டும், தேசத்திற்கு செய்யப்படும் தொண்டு தான் தெய்வத் தொண்டு, தேசத்திற்கா உயிர் துறப்பது கடவுளுக்காகச் செய்யும் தியாகம், சட்டங்களைக் கீழ்படியாவிடின் தெய்வ நிந்தனை ஏற்படும், குற்றவாளி தெய்வத்தின் கோபத் திற்கு ஆளாவான்—முதலிய கருத்துக்கள் இம் மதத்தினுல் பரவின. ஆனுல் இதன் விளைவாக மக்கள் பொய்யையும், மெய்யையும் பகுத்தறியும் திறனை இழந்தனர்; மூட நம்பிக்கை களுக்குப் பாத்திரமாயினர் ; மனப்பூர்வமான கடவுள் பக்தி மறைந்தது ; சம்பிரதாயங்களும் சடங்குகளும் பெருகின. மக்கள் குறுகிய மதியினர் ஆயினர் ; சண்டை சச்சரவுகள் மலிந்தன. ராஜ்ய அமைதி குலைந்தது.

இனி, தனி மனிதனின் இயற்கை மதத்தைப் பார்ப்போம்... உத்தம மதமான கிறிஸ்துவின் மதமானது, ‘எல்லா மனிதர்களும் கடவுளின் குழந்தைகள்; சகோதரர்கள்; இந்த உறவு மனிதர்களை விட்டு விலகுவதில்லை’ என்று கூறியது. ஆனுல் இந்த மதம், மக்களைத் தங்கள் அரசுடன் இணையச் செய்யாமல், உலக விவ காரங்களிலிருந்து விலகச் செய்துவிட்டது. ஆனுல் என்னதான் சொல்லப்பட்டாலும், கிறிஸ்தவ அரசு, கட்டுக்கோப்பு உள்ளதாக இருக்கமுடியாது. இது என்னதான் ஒழுக்கத்தையும் சீலத்தையும் வளர்த்தாலும், இது இந்தப் பூலோக வியவகாரத்தை விட்டு விட்டு மறு உலக விவகாரங்களுக்குத்தான் முக்கியத்துவம் கொடுக்கிறது. எல்லாவற்றையும் கடவுளின் திருவருளுக்கு விட்டு விட்டுப்பேசாமல் இருக்கும் பக்தர்களைக் கொண்ட நாடு உயிர்ப் புள்ளதாக இயங்க முடியுமா? அத்தகைய பக்தர்களிடையில் வஞ்சகன் தோன்றி அவர்களை வெகு விரைவில் கவிழ்த்து விடுவான். அவர்களோ ‘யார் ஆதிக்கம் செலுத்திஞல் என்ன கவலை ; இந்தத் துன்ப உலகில் சுதந்திரமாயிருந்து என்ன பயன்? இந்தஉலகில் அடிமையாயிருந்தால்தான் என்ன...? நமக்கு வேண்டியது பரலோகம் அல்லவா?’’ என்று பேசாமல் இருந்து

விடுவார்கள். போர்க் களத்துக்கும் கடவுள்மீது பாரத்தைப் போட்டுவிட்டு, அலட்சியமுடன் செல்வர். இகலோக வாழ்வு அவர்களுக்கு அற்ப காரியமாகிவிடும்! அதனல் இம் மூன்றுவித மதத்தையும்விட, சமுதாய நலனைக் கவனிக்கும் ஒரு மதந்தான் நாட்டிற்கு ஏற்றதாகும்.

அரசன் அந்த மதத்தை மக்களுக்கு வகுத்துக் கொடுக்க வேண்டும். அந்த மதத்தின் சமுதாயக் கோட்பாடுகளை அவனே நிர்ணயித்தல் வேண்டும்—அவை சமுதாயக் கடமையைக் குறிப்பனவாகவே யிருக்கவேண்டும். பக்தி விசுவாசமுள்ள சுதந்திர பிரஜைகளாக மக்களை ஆக்கவே அந்தச் சமுதாய மதம் பயன்பட வேண்டும். அத்தகைய சமுதாய மதத்தின் கோட்பாடுகள் குறைந்தவையாகவே இருக்க வேண்டும். சமுதாயத் தொண்டு தான் கடவுள் தொண்டாகக் கருதப்பட வேண்டும். இத்தகைய புதிய சமுதாய மதம் மற்ற மதங்களைப்போல தங்களுக்கு பக்தர்கள் என்ற பெயரில் அடிமைகளைச் சிருஷ்டிப்பதாயிருக்கக் கூடாது.

"எங்களுடைய மதத்தில் சேராதவருக்கு மோட்சம் இல்லை" என்பவர் தேசத்திலிருந்து விரட்டியடிக்கப்பட வேண்டும்.

## முடிவுரை

அரசியல் உரிமையின் முக்கியக் கோட்பாடுகளை கூறினேன். அரசு ஒன்றைப் பலமான சமுதாய அடிப்படையின்மீது நிறுத்தி விட்டேன். அது சர்வதேச வெளித் தொடர்புகளை ஏற்படுத்தித் தன்னைப் பலப்படுத்திக்கொள்ள வேண்டும். அந்த வெளித் தொடர்புகள் நான் எடுத்துக்கொண்ட விஷயத்திற்கு அப்பாற்பட்டவையானதால் என்னுடைய நூலின் வேலை இதோடு முடிவடைகிறது.





## நூல்: ஐந்து

### ஜூலி நாவல்

[ரூஸோ எழுதிய காதல் கதை இது! இன்றைக்கு இந்தப் புத்தகத்தைப் படித்து மகிழுபவரின் எண்ணிக்கை மிகக்குறைவு. இருந்தாலும் 1761-ம் வருஷம் இந்தப் புத்தகம் பிரசுரிக்கப்பட்ட சமயத்தில் இது ஒரு பெரும் புரட்சியையே உண்டாக்கி வைத்தது. இப்புத்தகத்தின் முக்கிய கதா பாத்திரமாக வரும் ஸெயிண்ட் பிரு என்ற காதலன் காதலித்த முறை அந்தக் காலத்துப் பெண் வாசகர்களின் கவனத்தைப் பெருத்த அளவுக்குக் கவர்ந்து விட்டது. இப்புத்தகம் வெளிவந்த ஒரு வருடகாலத்திற்குள்ளாகவே ஆங்கிலம், ஜெர்மன், முதலிய மொழிகளில் மொழி பெயர்க்கப்பட்டது. இந்தப் புத்தகத்தில் அடங்கியுள்ள கதை மிகவும் நீண்டது. மேலும் விறுவிறுப்பற்ற போக்கில் கதை அமைந்துள்ளது. இன்னும் கூறப்போனல், நிறையக் கடிதங்கள் இடையில் மின்னலிடுகின்றன. இக் கதையில் உள்ள சம்பவங்கள் ஏதோ ஒரு அமானுஷ்ய உலகத்தில் நடப்பது போல வாசகர்களை பிரமிக்கச் செய்யும்.]

### ஜூலி அல்லது புதிய ஹெலாய்ஸ்
### (*Julie or the New Heloise*)

**கதையின் சுருக்கம்:** ஜூலி'டி எடாங் என்ற இளம் பெண்ணுக்குக் கல்வி கற்றுக் கொடுக்க அவளின் பெற்ரோர்கள்

ஸெயிண்ட் பிரூ என்ற வாலிபனை அமர்த்துகிறார்கள். உபாத்தியாயர் கன்னிப் பெண்ணுக்குக் காதல் பாடங்களை கற்றுக் கொடுக்க ஆரம்பித்து விடுகிறார். (இப்படி உபாத்தியாயர் கற்றுக் கொடுத்த முறை மிகஅழகாகவும், விவரமாகவும் புத்தகத்தில் விவரிக்கப்படுகிறது.) முட்டாள்தனமாக தம் இளம் பெண்ணுக்கு ஒரு இளைஞனைக் கல்வி கற்றுக்கொடுக்க அமர்த்திய தந்தை, அந்தக் காதலை வெட்டிவிடத் தீர்மானித்து, நற்குணம் படைத்த சீமான் உல்மார் என்பவருக்குத் தம் மகளை மணம் செய்து கொடுக்கிறார். ஒரே குறை! மாப்பிள்ளை கடைந்தெடுத்த நாஸ்திகர். காதல் பாடம் கற்றுவந்த காதலி இன்னொருவனுக்கு மனைவியாகிவிடவே, மன முடைகிறான் காதலன். அவனுக்கு ஆறுதல் அளிக்கும் முறையில் அவனது ஆங்கில நண்பர் ஒருவர் தன்னுடன் அவனை உலக சுற்றுப் பிரயாணத்திற்கு அழைத்துப் போகிறார். சுற்றுப்பிரயாணம் முடிந்த பிறகு ஊர் திரும்பிய காதலன் ஸெயிண்ட் பிரூவைக் கணவர் உல்மார் சீமான் வரவேற்றுத் தமது மாளிகையிலே வசிக்கும்படியும், தமது மனைவியைக் கவனித்துக் கொள்ளும்படியும், தம் பிள்ளைகளுக்குக் கல்வி கற்றுக்கொடுக்கும்படியும் கூறுகிறார். ஜூலி தனது கணவனுக்குத் துரோகம் செய்ய மனமில்லாமல், தனது முன்னாள் காதலை மறந்து கற்புநெறி பிறழாத வாழ்க்கை வாழ்ந்து வருகிறாள். ஒரு நாள் நீரில் மூழ்கவிருந்த தனது பிள்ளையைக் காப்பாற்றப் போய் அவளே இறந்துவிடுகிறாள். அதன் பிறகு மனைவியை இழந்த கணவனுக்கு ஆறுதல் கூறும் நண்பனாக இருந்து வருகிறான் காதலன் ஸெயிண்ட் பிரூ.

இது போன்ற கதையமைப்பைக் கண்டதும் இந்தக் கதை—தனது உள்ளத்து எண்ணங்களை எடுத்துச் சொல்லவும், தனது வாழ்க்கையில் நடந்த சில சம்பவங்களை உலகுக்கு எடுத்துக் கூறவும், கையாளப்பட்ட சாதனம் என்று சொல்லிவிடலாம். ரூஸோ, மனித வாழ்க்கையைப் பற்றிய தனது தத்துவத்தையும். ஆண்—பெண் உறவுபற்றி தனக்குள்ள எண்ணத்தையும், தனது, வாழ்க்கையில் நடந்த சில உண்மையான காதல் சம்பவங்களையும் —கதை உருவத்தில் உலகத்திற்கு எடுத்துக்காட்ட எண்ணினான்—செய்தான்! தன்னைக் காதலன் ஸெயிண்ட் பிரூவாகவும், தன் உண்மைக் காதலி மேடம்'டி ஹீடெடாட் என்பவளைக் கதாநாயகி ஜூலியாகவும், தான் உலகத்தில் எப்படி வாழ நினைத்தான் என்பதை உருவகிக்க உல்மார் சீமானாகவும் — சிருஷ்டித்துக் கொண்டான். தடாகத்தில் மின்னும் தெள்ளிய நீர், மரங்களின் பச்சை இலைகள்கொட்டிய பசிய நிழல், உயர்ந்து வளர்ந்து நிற்கும் அழகிய மரங்கள்—இவை போன்ற இயற்கையின் பொருள்களில் இன்பம் துய்த்த ரூஸோ, தனது நாவலில் இயற்கையன்னையை மிக அழகாக வருணித்திருக்கிறான்.

செயிண்ட் பிரு, தன் காதலி ஜூலி'க்கு எழுதும் கடிதம் :—

"இந்த அழகிய நிலப் பரப்பும், அதில் நிலைபெறும் பொருள்களெல்லாம் புன்முறுவல்பூத்து நிற்கின்றன ; எங்கும் நிறைந்துள்ள பசுமை புத்துயிருடன் தோன்றுகிறது ; தவழும் காற்று தூய்மையான மணத்துடன் கலவையிட்டு உலவுகிறது ; நீல வானமோ அமைதியுடன் காட்சியளிக்கிறது ; பறவைகளின் கீதத்தில்தான் மென்மையும், இன்பமும் பொதிந்து கிடக்கின்றன என்று எண்ணுகிறேன்; தெள்ளிய நீரோடையின், பாய்ந்தோடும் அருவியின் சலசலப்பு ஓசை என்னை மோகக்கிறக்கத்தில் ஆழ்த்துகிறது ; மலர்ந்து குலுங்கும் திராட்சைக் கொடிகளிலிருந்து கிளம்பும் இனியவாசம் எனக்கு மயக்க மூட்டுகிறது ; எங்கு நோக்கினும் ஒருவித இரகசிய இன்பம் எல்லாப் பொருள்களுக்கும் இன்ப மூட்டி, எழிலூட்டி என் உணர்ச்சிகளைச் சுண்டியிழுக்கிறது. தன்னை-தனது வனப்பைப் புகழ்ந்து, தூய்மையான நெருப்பால் எரிக்கப்படும் காதலனுக்காக இயற்கைத்தேவி மணமஞ்சம் அமைக்கிறுள் என்றே சொல்லலாம்! ஓ! ஜூலி! வா, நாமிருவரும் இயற்கைக்கு உயிரூட்டுவோம் ; காதல் கனவில் உள்ள அனல் படாவிட்டால் இயற்கைக்கு உயிர் இருக்காது!"

ஒரு நாள்! பூந்தோட்டத்தில் தனது மனைவியின் மலர் உதடுகளில் பருகிய தேன் முத்தத்தைப்பற்றி காதலனின் வர்ணனை.

"ஆ! என் ஜூலி!......எனது உணர்ச்சிகள் வற்றிப்போய் விட்டனவே ; இந்த அமர முத்தத்தால் நான் செயலற்றுக் கிடக்கின்றேனே!...........உனது சிவந்த உதடுகளிலிருந்து கொடிய நஞ்சையல்லவா குடித்து விட்டேன்! அத்தக் கொடிய விஷம் பொங்குகிறதே ; எனது இரத்த நாளங்களில் அனல் வேகம் பாய்ந்தோடுகிறதே! ஐயோ! என்னை அந்த விஷம் கொல்லுகிறதே! உன் இரக்கம் என்னை இறக்கவல்லவா செய்கிறது...! ஒரு கணநேர மாயையின், இன்பத்தின், மயக்கத்தின் அமர நினைவே! நீ என் மன அரங்கிலிருந்து அழிக்கப்படக்கூடாது! ஜூலியின் அழகுருவம் எனது மனப்பாறையில் செதுக்கப்பட்டு இருக்கும்வரை, எனது வேதனை கப்பிய உள்ளம் அவளைப் பற்றிய ஏக்கப் பெருமூச்சுக்களால் நிறைந்திருக்கும் வரை, நீதான் என் வாழ்க்கைக்கு சுவையூட்டும் இன்பம் ; எனது மனதை வாட்டி வதைக்கும் துன்பம்.........

அந்தக் கணத்தில் எனது மனம் அனுபவித்த ஆழ்ந்த உணர்ச்சி என்னுடைய நினைவிலிருந்து நீங்கவே நீங்காது. ஒரே வேண்டுகோள்! அது சர்வம் வேதனை—ஆம்! உனது முத்தங்களை நீயே வைத்துக்கொள்! என்னுல் அவைகளைப் பொறுத்துக்கொள்ளவே முடியாது. அவை துன்ப மயமானவை! அவை என் தேகத்

திற்குள் நுழைந்து எனது எலும்புக் குறுத்துக்குள் சுட்டெரிக்கின்றன ; ஒரே முத்தம்— என்னைப் பித்தனாக்கி விட்டது. நான் மீண்டும் எனது சுய நினைவைப் பெறுவேனா என்பது எனக்கே தெரியாத விஷயம்!........... ஓ! ஜூலி...........இந்த நிலையில் என்னால் வாழவே முடியாது. நான் கடைசியில் இறக்கத்தான் வேண்டும் உன் பாதங்களின் அருகே.........இல்லை! உன் பொன் நிறக் கரங்களில் சாய்ந்து கொண்டே நான் இறந்து விடுவேன்!'

[பதினெட்டாவது நூற்றாண்டில் வாழ்ந்த பெண் வாசகர்களின் மனதை, இக்காதலனின் உணர்ச்சிகரமான வார்த்தைகள் மயக்கி விட்டன ; இவன் போன்ற காதலன் தங்களுக்குக் கிடைப்பானா என்று ஏங்கிக் கிடந்தனர்.]

[ரூஸோ, இந்தக் காதல் நவீனத்தின் இடையிடையே, நாடக அரங்கின் அமைப்பு, சங்கீதத்தின் தன்மை வாழ்க்கை வாழவேண்டிய தன்மை, குழந்தை வளர்ப்பு, மகிழ்ச்சிகரமான சமத்துவம் நிலவும் இலக்கியக் குடும்பம் முதலான வற்றைப் பற்றியும் விவாதிக்கிறான்.]

காதலி ஜூலி இறந்து விடுகின்றாள்; அவளின் சடலம் படுத்துக் கிடக்கும் அறையினுள் அழைத்துச் செல்லப்பட்ட ஸெயிண்ட் பிரு பின்வருமாறு சொல்கிறான்:

"என் மனதிற்கு அடைக்கலம் தந்து, எனது ஆத்மா எல்லா வித இன்பங்களையும் பருகி மகிழ்ந்த அந்த இடத்தில் இப்பொழுது எதைக் காண்பேன்? எனக்கு அவ்வளவு இன்பங்களை தந்த அந்த இன்பப் பொருளில் இப்பொழுது மரணத்தின் நிழல் படிந்து விட்டது ; அழகு கருகி விட்டது!"





# ரூஸோவின் சிந்தனைகள்

## மதம்

### கடவுள்

கடவுளை மெய்மையில் தான் தேடிப் பார்க்க வேண்டும்; மெய்மை நிறைந்த அர்ப்பணத்தை யார் செய்தாலும் கடவுள் நிராகரிக்கமாட்டார்.

நீதி நிறைந்த நெஞ்சம்தான் கடவுள் உறையும் உண்மையான கோவில்.

கடவுள் எல்லாவற்றையும் நல்லவைகளாகத்தான் செய்கிறார்; மனிதன்தான் அவைகளைத் தீயனவாகச் செய்துவிடுகிறான்.

கடவுளை நாடுவதற்கு வேதப் புத்தகமும், ஆலயமும், சடங்குகளும், இடையில் தரகு வேலை செய்யும் குருமார்களும் தேவையில்லை!

பல கடவுளர்களும், பல மதங்களும் உலகத்தில் துன்பத்தைத் தான் புகுத்தியுள்ளன.

எல்லாவிதமான நீதிகளும் கடவுளிடமிருந்து வருகின்றன என்று கூறுகிறார்கள்; அவர் தான் நீதிகளின் மூலம் என்றும் சொல்லுகிறார்கள்; அப்படியானால், அவ்வளவு மேன்மை தங்கிய இடத்திலிருந்து நமக்கு நீதி வருகையில் நமக்கு அரசாங்கமும், சட்டங்களும் எதற்கு?

எல்லாவிதமான அதிகாரங்களும் கடவுளிடமிருந்துதான் வருகின்றன என்று சொல்லுகிறார்கள்; உண்மைதான்; ஆனால் அவரிடமிருந்துதான் எல்லா வியாதிகளும் வருகின்றன.

முதல் முதலில் கடவுள்தான் மக்களுக்கு ஆட்சியாளனுக இருந்தார்; கடவுளின் அரசாட்சிதான் மக்களின் இராஜ்யமாக இருந்து வந்தது.

என்னைப் பொறுத்த மட்டில், இந்த உலகத்தில் எல்லாம் முடிந்து விட்டன. இந்த உலகத்தில் இதற்குமேல் எதையும் நம்பியிருக்க வேண்டியதில்லை; எதைக்கண்டும் இந்த உலகத்தில் பயப்பட வேண்டியதில்லை; ஏழையும், துரதிர்ஷ்டசாலியுமான நான் எங்கோ அதள பாதாளத்தில் அழுந்தி யிருக்கிறேன்: ஆனால் ஒன்றுமட்டும் நிச்சயம் — கடவுளைப் போல ஆசா பாசங்கள் இல்லாதவன் நான்.

## நம்பிக்கை

சம்பிரதாய மதங்கள் அனைத்திற்கும் இது பொதுவானது— அதாவது செயலைவிட நம்பிக்கைதான் அவற்றின் முக்கியமான கோட்பாடாகும்.

## ஞானி

முதலில் மனிதனுக்கு மனிதப் பண்பாட்டைக் கற்றுக் கொடுத்து அவனை மனிதனாகச் செய்ய வேண்டும்; பிறகு அவன் தானாகவே ஞானியாகி விடுவான்.

## ஞான மார்க்கம்

நிம்மதியான அறியாமையிலிருந்து சாசுவதமான ஞானத்தை அடைவதற்காக நாம் செய்யும் பிரயத்தனங்களெல்லாம் இறுதியில் நமக்குத் துக்கத்தையே உருவாக்கித் தருகின்றன.

# கலாசாரமும் நாகரிகமும்

## கலாசாரம்

எந்த ஜாதிக்குக் கலாசாரப் பகட்டிலே பிடிப்பு உண்டாகி விடுகிறதோ, அந்த ஜாதி தன் போராட்டப் பண்பைத் துறந்து விடுகிறது.

வாழ்க்கையின் சுகங்கள் அதிகமான அளவில் பெருகப் பெருக, கலைகள் பூரணத்துவத்தை அடைய அடைய. ஆடம்பரம் அதிகரிக்க அதிகரிக்க, உண்மையான வீரமும் ஒழுக்கங்களும் துப்புறவாக அகற்றப் பட்டு விடுகின்றன.

## கலை, சட்டம், சரித்திரம்

ஆடம்பரம் நிறைந்த வாழ்க்கை, அநியாயம் செய்யும் மனிதர்கள், கொடுங்கோல் மன்னராட்சி — இவையில்லா விடில் முறையே கலை, சட்ட விவகாரங்கள், சரித்திரம்— இவையும் கிடையாது.

## நாகரிக மனிதன்

நாகரிக மனிதன் பிறக்கும் பொழுதும், வாழும் பொழுதும், பின்னர் சாகும் பொழுதும் அடிமையாகவே இருக்கிறான்; அவன் குழந்தையா யிருக்கையில் இறுக்கமான உடைகளால் இறுக்கப்பட்டிருக்கிறான். இறந்த பிறகு சவப் பெட்டியில் அவனை வைத்துக் கட்டிவிடுகின்

றனர்; அவன் வாழும்போதோ சமுதாயத்தின் சம்பிரதாயங்களாலும் சட்டதிட்டங்களாலும் கட்டுப்படுத்தப் பட்டிருக்கிறான்.

## கலை

பாட்டும், நாடகமும் ஒருவரை உலகத்தில் முன்னேறச் செய்து விடாது.

## மொழி

உச்சரிப்பு—மொழிக்கு ஆத்மா போன்றது! அது மொழிக்கு உயிரையும், உணர்ச்சியையும் ஊட்டும்.

## வைத்தியம்

வைத்தியம் என்பது இந்த நாட்களில் ஒரு பெரிய நாகரிகக் கோலம்; மிகவும் சகஜமான துங்கூட; அது சோம்பேறிகளுக்கு ஒரு பொழுதுபோக்கு. சதாத் தங்களைப் பற்றியே கவனமெடுத்துக் கொள்வதில் தங்கள் நேரத்தை யெல்லாம் என்ன செய்வது என்று தெரியாத வேலைபற்ற பேர்வழிகளுக்கு அது ஒரு கேளிக்கை! ......... அத்தகையவர்களுக்குப் பயமுறுத்தவும், ஏமாற்றவும் வைத்தியர்கள் தேவைதான். ஏனெனில் அவர்கள் அனுபவிக்கக்கூடிய ஒரே ஆனந்தத்தை வைத்தியர்கள்தான் தரமுடியும்—அதாவது செத்தொழியாமலிருக்கும் ஆனந்தத்தை!

## கல்வி

மனிதன் பிறந்த நிலையிலேயே விட்டுவிடப்பட்டால் அவன் மனிதனாக இருக்க மாட்டான்; அவன் வாழும் சூழ்நிலை அவனின் இயற்கைத் தன்மையை சூறையாடி விடும்—பலபேர் நடந்து செல்லக்கூடிய பாதையில் செடியை வளரவிட்டால் அது அழிந்து போகும்—கல்வியற்ற மனிதனும் அழிபட்டுத்தான் போவான்.

மனிதன் தன்னையும், தான் வாழும் சூழ்நிலையையும் புரிந்துகொள்ள உதவியாயிருப்பது கல்விதான்; வாழ்க்கையின் இன்ப துன்பங்களை சமமாக ஏற்றுப் பாவிப்பவர்கள் தாம் சரியான முறையில் கல்வி கற்றவர்களுமாவார்கள். கற்பது என்பது கற்றது நிற்பதாயிருத்தலாகும்.

குழந்தையின் வளர்ச்சி இயற்கையை யொட்டி அமைய வேண்டும் -- இதற்குக் கல்வி அவசியமானதாகும்.

நாம் பலஹீனர்களாகவே பிறக்கிறோம்; நமக்குப் பலம் அதிகமாகத் தேவைப் படுகிறது நாம் எதுவும் இன்றிப் பிறக்றோம்; நமக்குப் பலரின் உதவி தேவையாயிருக்கிறது! நமக்குப் பகுத்தறியும் திறனும் தேவையாயுள்ளது. நாம் பிறக்கும்போது நம்மிடம் இல்லாதவைகளையும், ஆனால் நாம் வளர நமக்குத் தேவையாயிருப்பவைகளையும் நமக்குத் தரக்கூடியது கல்வி ஒன்றுதான்.

மனிதனுடைய அறிவுக்கும் ஒருஎல்லை இருக்கிறது. மனிதன் உலகில் உள்ள எல்லாவற்றையுமே தெரிந்துகொண்டு விட்ட நிலையில் இல்லை; அது

மட்டுமல்ல, மற்றவர்களுக்குத் தெரிந்தவைகள் அனைத்தையும் முழுமையாகத் தெரிந்து கொள்ளாத நிலையிலும் இருக்கிறான்.

## மனித வாழ்க்கை

### மனிதன்

யோக்கியமும். பொறுப்பும், கண்ணியமும் உள்ள ஒரு மனிதனை உலகத்தின் மூலை முடுக்குகளிலெல்லாம் தேடுகிறேன்—ஆனால் இன்னும் என்னால் கண்டு பிடிக்கவே முடியவில்லை!

### இன்ப துன்பங்கள்

வாழ்க்கையில் எது பூரணமாக இன்பம் தருவது அல்லது எது துன்பம் தருவது என்று நம்மால் நிர்ணயிக்க முடிவதில்லை. வாழ்க்கையில் இன்ப துன்பங்கள் கலவையிட்டு இருக்கின்றன. ஒரே மாதிரியான உணர்ச்சியில் நாம் இரு கணங்களுக்கு இருப்பதில்லை. நன்மையும் தீமையும் நமக்குப் பொதுவானவை. ஆனால் அவற்றின் அளவு மாறுபடுகிறது. மிகக் குறைவான அளவு துன்பத்தை அனுபவிப்பவன் மகிழ்ச்சி நிறைந்தவனாக இருக்கிறான். வாழ்க்கையில் சில இன்பங்களை மட்டும் சுவைப்பவன் வேதனை நிறைந்தவனாகக் காணப்படுகிறான். எல்லோருக்கும் பொதுவானது யாதெனில், எல்லோரும் இந்த உலக வாழ்க்கையில்இன்பத்தைவிடத் துன்பத்தைத்தான் அனுபவிக்கின்றனர்.

மனித வாழ்க்கையில் இன்பமும் துன்பமும் ஒன்றை விட்டு ஒன்று இணைபிரியாமலேயே இருக்கின்றன. துன்பத்தின் சுழலில் இருக்கும்பொழுது அது எப்பொழுது தீருமோ என்ற உணர்ச்சி ஏற்படுகிறது; இன்பத்தைச் சுவைக்கும் போதோ அது எப்போதும் முடிவுற்று நீண்டு இருக்க வேண்டும் என்ற உணர்ச்சி ஏற்படுகிறது.

என்னுடைய துன்பங்கள் அனைத்தும் இயற்கையினுடையவை; என்னுடைய இன்பங்களோ என்னுடையவையே.

### இன்பம்

நான் எப்போதும் கூறுவது என்னவென்றால், உண்மையான இன்பத்தை அனுபவிக்கத்தான் முடியுமே தவிர, அதை விவரித்துச் சொல்ல முடியாது.

### அன்பு

அன்பை விடப் பெரிய ஞானம் எது உண்டு?

### மனம்

பலமுள்ள தேகத்தில்தான் திடமான மனம் இருக்க முடியும்.

### சிந்தனை

சிந்திக்கத் துவங்குவது சுலபமானதல்ல; ஒருமுறை சிந்திக்க ஆரம்பித்து விட்டால் மனிதன் சிந்தித்துக் கொண்டேயிருப்பான்.

## உடல்

பலஹீனமான உடலானது உள்ளத்தையும் பலஹீனப் படுத்துகிறது.

## ஒழுக்கம்

ஒழுக்கம் என்பது நம்முடைய பிழைகளினுல்தான் சிரமமான தாக மாறுகிறது.

## பொறுமை

பொறுமை மிகவும் கசப்பானதுதான்; ஆனால் அதன் விளைவோ மிகவும் இனிப்பானது.

## மனித இயற்கை

நான் வாழும் காலத்தில் மனிதர்கள் எதையும் புரிந்து கொள்ளாத நிலையிலிருக்கின்றனர்.

## பண்புகள்

தன்னடக்கமும் சுறுசுறுப்பும் தான் மனிதனுடைய உண்மையான நிவாரணங்கள்; உழைப்பானது அவனது பசியைக் கூர்மையாக்குகிறது தன்னடக்கமோ அதைக் கட்டுப்படுத்த அவனுக்குப் பயிற்சியளிக்கிறது.

## தற்பெருமை

நமக்கு எவ்வளவுக் கெவ்வளவு குறைவாகத் தெரிந்திருக்கிறதோ, அவ்வளவுக் கவ்வளவு அதிகமாகத் தெரிந்திருப்பதாக நினைத்துக் கொள்கிருேம்.

ஒருவன் பைத்தியக்காரன் அல்ல என்ருல் அவனுடைய எந்தத் தவறையும் திருத்தி விடலாம்; ஆனல் அவனுடைய தற்பெருமையைமட்டும் திருத்தவே முடியாது.

## தவறுகள்

மனிதர்கள் தங்கள் தவறுகளைப் புரிந்து கொள்ளாத நிலையிலேயே இருக்கின்றனர். அவர்களின் தவறுகள் அவர்களுக்கே தெரிவதில்லே. தங்களின் தவறுகளை வெறுத்து ஒதுக்காமல் அவைகளை நேசித்து வருகின்றனர்.

மனிதர்களை நான் நேசிக்கும் அளவுக்கு அவர்களிடத்தில் எவ்விதமான தவறுகளையும் என்னுல் காண முடிவதில்லே.

## மன்னிப்பு

நான் குற்றத்தைமட்டும் மன்னித்து விடுவேன்—ஆனல் துரோகத்தைமட்டும் என்னல் மன்னிக்கவே முடியாது.

## சந்தேகம்

கசப்பும்—காதலும், அவைகளை ஆமோதிப்பவர்களின் மனதில் சந்தேகத்தையூட்டும்.

## முகஸ்துதி

பட்சிகளைப் பிடிப்பதற்கு ஆசைமொழி பேசி அவைகளை அருகே அழைக்க முயலுவது போல, என்னிடம் என்நண்பர்கள் என்று சொல்லிக்கொண்டு என்னை முகஸ்துதி செய்கிருர்கள்; ஆனல் உள்ளூர அவர்கள் என்மீது கொண்டுள்ள துவேஷம் எனக்கு நன்ருகப்

புலப்படுகிறது. இத்தகையவர்கள் என்னை நேர்முகமாகவே ஏசி என்னைத் தூஷித்தாலும் நானும் அவர்களை எவ்வளவோ பாராட்டுவேன் — அவர்களுக்காக இரக்கமும் பட்டிருப்பேன்.

## குறைகூறல்

நமது குற்றங்களை மறந்து பிறரின் உள்ளத்தில் உள்ளவைகளைக் கண்டு பிடிப்பது தவறானது.

## குற்றம் கூறுபவன்

என்மீது குற்றம் கூறுபவன், "நான் தீயன், கண்டவாறு பேசுபவன், அநீதி நிறைந்த செயல்களைச் செய்பவன்" என்ற குற்றங்களைச் சுமத்த நினைப்பவன், நேரில் என்னிடம் வரட்டும்; என் குற்றங்களை எடுத்துக் கூறட்டும்; நான் என்னை மறைத்துக் கொள்ள மாட்டேன்; அது போன்ற மனிதனின் வரவுக்காகக் காத்துக் கிடக்கிறேன். அவன் மறைந்து நின்று என்னைத் தூஷித்தால், அவன் நேர்மை நிறைந்தவர்கள் முன்னமே தன்னையே தூஷித்துக் கொள்கிறவனாகிருன். உண்மையொளியும் இருட்டும் ஒன்று சேர்ந்தவையல்ல.

## அறிவு

மனிதர்கள் தங்கள் அறிவு விருத்தியடைய பிரயாணம் செய்ய வேண்டும். உலகத்திலுள்ள எல்லா விஷயங்களையும் கூர்ந்து கவனித்தல் வேண்டும். கண்களைத் திறந்து வைத்திருக்க வேண்டும்

## இயற்கையின் தூண்டுதல்

மேஜையின் முன் அமர்ந்து எனக்கு முன் எழுதக் காகிதங்கள் இருக்க, என் கையில் பேனு இருக்க, என்னுல் எழுதவே முடிவதில்லை; காடுகளிலும் மலைப் பிராந்தியங்களிலும் நடந்து செல்லும் பொழுதோ, என்னுல் எழுத முடிகிறது.

## கவலைகள்

வயோதிகத்தை அடைந்த மனிதர்களுக்கு எவ்வளவோ கவலைகள் உண்டு; அவையாவும் எனக்கு என்ன நேர்ந்தாலும் அதுபற்றி எனக்குக் கொஞ்சமும் கவலையில்லை.

## வயது

நிஜமான குற்றங்கள் பழுத்த வயதைவிட இளமையில்தான் அதிகக் கொடூரம் வாய்ந்தனவாக விளங்குகின்றன.

## ஆணும் பெண்ணும்

ஆண் தனக்குத் தெரிந்ததைதான் சொல்லுவான்; ஆனல் பெண்ணே தனக்கு மகிழ்ச்சி தரக்கூடிய விஷயங்களைத்தாம் சொல்லுவாள்.

## பெண்

உலகம்–பெண்ணின் புத்தகமாகும்!

பெண்கள் விஷயத்தில் எனக்கு வெற்றி கிட்டாததின் காரணம் நான் எப்போதுமே அவர்கள்மீது அளவுமீறி ஆசை வைத்து வந்ததுதான்.

பெண்கள்! பெண்கள்!! இன்பமும் வேதனையும் கலந்த பிறவிகள். நம்மைத் துன்புறுத்த அழகுடன் படைக்கப்பட்ட பிறவிகள். நாம் அவர்களையடக்க எண்ணும் பொழுது நம்மைத் துன்புறுத்துவார்கள். நாம் அவர்களிடம் பயத்துடன் நடந்துக் கொண்டால் நம்மைப் பின் தொடர்வார்கள். அவர்களின் காதலையும் கோபத்தையும் கண்டு அஞ்சி நடுங்க வேண்டியுள்ளது...அழகு, சாகஸம், கருணை—பின் வேதனையும் துன்பமும் நிறைந்த துன்ப சாகஸம்—பெண்ணின் சொகுசான சாகசத்திற்குமயங்கி மனதைப் பறிகொடுப்பவன் மிகவும் துர்பாக்கியசாலியாவான்.

பெண்கள் பெண்களாகவே வளர்க்கப்பட வேண்டும்—இதனால் அவர்களுக்கும் அவர்களை வளர்ப்பவர்களுக்கும் நன்மையுண்டாகிறது.

## படித்த பெண்

இந்தப் பூலோகத்தில் புத்திசாலியான ஆடவர்கள் இருந்து வரும் வரை அகங்காரப்பண்டிதை ஒவ்வொருத்தியும் வயதான கன்னிகையாகவே இருந்து வருவாள்.

அகங்காரமான ஒரு பண்டிதை தன் கணவனுக்கும் தன் குழந்தைகளுக்கும், தன் சிநேகிதிகளுக்கும், தன் வேலைக்காரர் களுக்கும்; எவருக்குமே உபத்திரமானவளே!

## காதலியின் பிரிவு

அவள் என் அருகில் இல்லை; துன்பத்தின் இருள் எங்கும் கவிழ்ந்து இருக்கின்றது; எனக்கோ வாழ்க்கை சூன்யம் நிறைந்ததாக இருக்கிறது; என் காதலி எங்கோ தூரத்தில் இருக்கிறாள்.

## விலைமகளிர்

காசுக்கு வாங்கக் கூடிய விலைப் பெண்களின் அழகுக் கவர்ச்சிகளெல்லாம் என் விஷயத்தில் கவர்ச்சியற்றனவாகவே தோன்றும்.

## மரண பயம்

எல்லோரும் என்றோ ஒரு நாள் மரணத்தை அணைக்க வேண்டியவர்களே.

மனிதர்கள் அனைவருமே அரசர்களாகவும், ஆடம்பரக்காரர்களாகவும், எப்பொழுதும் மகிழ்ச்சியுள்ளவர்களாகவும் இருப்பதில்லை; அனைவரும் துன்பத்தில் உழல வேண்டியவர்கள்தாம் — கடைசியில் அனைவரும் மரணத்தைஅடைய வேண்டியவர்கள்தாம்.

தனியனாய், நோயினால் வதைக்கப்பட்டு, பசியாலும், ஏழ்மையாலும், குளிராலும் வாடி, யாருக்கும் உபத்திரம் கொடுக்காது இருக்கிறேன். இவைகளைப்பற்றி நானே கவலைப்படாமலிருக்க, பிறர் எதற்காக

என் நிலை கண்டு மனம் இரங்க வேண்டும்! இந்த வயதில் வாழ்வையும் மரணத்தையும், புகழையும், இகழ்ச்சியையும் சமமாகக் கருதுவது அவ்வளவு ன்றும் பெரிய காரியமல்ல.

### பணம்

பணம் என்பது, பொதுவாகக் கருதப்படுவதுபோல மதிப்பு மிகுந்த சரக்காக எனக்குத் தோன்றியதே இல்லை.

பணத்திற்கு விதை பணந்தான். இரண்டாவதாகப் பத்து லக்ஷம் சம்பாதிப்பதைவிட முதன் முதலாக ஒரு சல்லிக் காசு சம்பாதிப்பதுதான் சில சமயங்களில் மிகவும் கஷ்டமானதாயிருக்கும்.

## குழந்தைப் பிராயம்

என்னுடைய குழந்தைப் பிராயம் ஒரு குழந்தையினுடையதைப் போன்றதல்ல; எப்பவும் ஒருமனிதனைப் போலவே நான் உணர்ந்தும் சிந்தித்தும் வந்தேன்.

குழந்தைப் பிராயம் பகுத்தறிவின் உறக்கம்.

## குழந்தை வளர்ப்பு

தாயால்தான் குழந்தை வளர்க்கப்பட வேண்டும்; தாயில்லையேல் குழந்தை சரியாக வளராது; தாயின் குணங்களெல்லாம் குழந்தைக்கு வந்துவிடுமாதலால், தாய் தனது குழந்தையின் வளர்ப்பில் அதிகப்படியான கவனம் செலுத்தவேண்டும். பிற பெண்களிடம் தன் குழந்தையின் பராமரிப்பைத் தாய் ஒப்புவிக்கக் கூடாது.

குழந்தைகள் அழுகின்றன; அவர்கள் அழும்பொழுது நாம் அவர்கள்மீது கவனம் செலுத்துவதாலும், அவர்கள் செய்யும் குற்றங்களைத் திருத்த முனைவதாலும் அவர்கள் அதிகமாக அழுவதற்கு ஆரம்பித்து விடுகின்றனர். நாம் அவர்கள் அழக்கூடாது என்று விரும்புவதால்தான் அவர்கள் அழுதுக் கொண்டே இருக்கின்றனர். அவர்கள் அழும்பொழுது அவர்களைக் கவனித்துக் கொண்டே யிருந்தால் அவர்கள் அழுது கொண்டேயிருப்பார்கள். அவர்கள் தங்கள் அழுகையை யாரும் கவனிக்கவில்லை என்று தெரிந்து கொண்ட பிறகு தங்கள் அழுகையை நிறுத்தி விடுவார்கள். அவர்கள் அழுகையை நிறுத்துவதற்காக நாம் அவர்களுடன் விவாதிப்பதால் ஒருவிதப் பயனும் உண்டாகாது. விஷயங்களைத் தெளிவாக, அன்பான முறையில் அவர்களுக்கு விளக்கிக் காண்பிக்க வேண்டும். நாம் அவர்களிடம் அன்பு கொண்டுள்ளோம் என்று அவர்கள் தெரிந்து கொண்ட பிறகு அவர்கள் பணிவுடன் நடந்து கொள்வார்கள்...... பெரியவர்கள் பேசிக் கொண்டிருக்கையில் எனது பிள்ளைகளை அந்தச் சம்பாஷணையில் கலந்து கொள்ள நான் அனுமதிக்கவே மாட்டேன்.

தாய்மார்கள் தங்கள் குழந்தைகளுக்கு எளிய உணவு

களையே கொடுத்துவர வேண்டும். குழந்தைகள் தங்களுக்குத் தேவையான அளவுக்கு உணவைச் சாப்பிடச் செய்ய வேண்டும்; குழந்தைகள் ஓடியாடி விளையாட அனுமதிக்கப்பட வேண்டும்.

மிகவும் அக்கறையாக வளர்பதாக நினைத்துக்கொண்டு குழந்தைகளைக் கெடுத்துவிடக் கூடாது. இயற்கை நுண் சோதனைகளில்குழந்தைகளை உழலச் செய்ய வேண்டும். இதனால் பிற்காலத்தில் வாழ்க்கையின் இன்ப துன்பங்களைச் சரியான முறையில் பொறுத்துக் கொள்ள முடியும்.

### குழந்தைகள் கல்வி

குழந்தைகளின் கல்வி அவர்களின் பசுமையிலேயே ஆரம்பிக்கப்பட வேண்டும்.

## அரசியல்

### குடியரசு

பொது மக்களால், பொது மக்களுக்காகச் செய்யப்படும் சட்டங்களையொட்டி, அவற்றின் போக்கின்படி தன் நிருவாகத்தை அமைத்து வரும் ராஜ்யத்தைத்தான் குடியரசு என்கிறோம்.

### நாட்டுப் பற்று

பிறக்கும்போது கண்களைத் திறக்கும் குழந்தை தனது கண்களால் காணும் சுற்றுப்புற இயற்கையை, இறக்கும் பொழுது கண்களை மூடும்வரை மறக்கவே கூடாது!

### புரட்சி

மனித உடலில் தோன்றும் சிலநோய்கள் சில சமயங்களில் அவர்களின் அறிவையும், சிந்திக்கும் திறனையும் மாற்றியமைத்து விடுவது போல – மக்கள் சமுதாயத்தில் புரட்சிகள் உண்டாகும் பொழுது அந்தச் சமுதாயம் பழையனவைகளை மறந்து, புது வாழ்வு தொடங்க ஏதுவாகிறது.

### சட்டம்

நல்ல சட்டங்கள் இன்னும் சிறந்தனவற்றைச் செய்ய வழி நடத்தும்; தீமையான சட்டங்களோ படுமோசத்தையே கொண்டுவரும். இராஜ்ய விவகாரங்களைப் பற்றி நாட்டில் எந்த மனிதனாவது 'எனக்கென்ன அதைப்பற்றி' என்று சொல்வானேயாகில், அந்த ராஜ்யம் அழிந்துபோனதாகவே கருதி விடலாம்.

மக்கள் கூட்டமைப்பாக வாழ்வதற்கான நிபந்தனைகளை விவரிப்பன சட்டங்கள் ஆகும்.

குறிப்பிட்ட மனிதர்களுக்காகவோ, செயல்களுக்காகவோ இயற்றப்படுவது சட்டமாகாது.

சமுதாயத்தின் தலைவன், அரசின் அங்கத்தினனாயிருப்பதால் அவனும் நாட்டின் சட்டங்களுக்கு உட்பட்டவனே!

ஒரு சிலரால் செய்யப்படுவது சட்டம் ஆகாது; பொதுமக்கள்

அபிப்பிராயங்களின் கூட்டுப் பரிணமமே உண்மையான சட்டம் ஆகும்.

எல்லா மக்களும் ஒன்றுகூடி எல்லா மக்களுக்காகவும் ஒரு உத்திரவை அமுலுக்குக் கொண்டு வருகின்றனர். இதைப் பொது மக்கள், பொது நன்மைக்காவே செய்வதால் இந்த உத்திரவும் அதன் நோக்கமும் ஒன்றே. இத்தகைய உத்திரவைத்தான் சட்டம் என்கிறோம்.

கூட்டமைப்பாக அமைய வேண்டிய நிபந்தனைகளுக்கு கீழ்ப்படிந்து நடக்க வேண்டியவர்கள் மனிதர்களாதலால் சட்டங்கள் அவர்களுக்காகவே இயற்றப்பட வேண்டும்.

சட்டம் இயற்றுபவர்கள் வருங்காலத்தின் நன்மையையும், முன்னேற்றத்தையும், மனதிற் கொண்டே சட்டமியற்ற வேண்டும்.

## யுத்தம்

மனிதனை மனிதன் அடிமைப்படுத்தி ஆளும்உரிமை யுத்தத்திலிருந்து பிறந்தது என்று சொல்லுகிருர்கள்—இது தவருனது.

யுத்தம் என்பது தனிப்பட்ட மனிதர் இருவர் சண்டை போடுவதில் அடங்கியிருப்பதில்லை.

யுத்தம் என்பது மனிதர்களின் பரஸ்பர வேற்றுமையில் இல்லை; விஷயங்களின் வேற்றுமையினுல்தான் யுத்தங்கள் உண்டாகின்றன.

யுத்தமானது, வெற்றி பெற்றவர்களுக்குத், தோல்வியுற்றவர்களைக் கொல்லும் உரிமையைக் கொடுத்ததே கிடையாது.

யுத்தத்திற்குப் பிறகும் எஜமானனுக்கு அடிமையின் மீது பலாத்காரத்தைத் தவிர வேறு உரிமை கிடையாது.

## பிரஜைகளின் மனுேபலம்

அரசின் நன்மைக்காக தங்கள் உயிரையும் தியாகம் செய்யும் மனப்பண்பு மக்களிடத்தில் இருக்கவேண்டும்.

## அரசாங்கத் தண்டனைகள்

அதிகப்படியாக மரண தண்டனைகளை ஒரு அரசாங்கம் விதித்து வருதலானது அதன் பலஹீனத்தைக் குறிப்பதாகும்.

நல்ல முறையாக ஆளப்பட்டு வரும் அரசாங்கத்தில் ஏன் அதிகப்படியாக தண்டனைகள் விதிக்கப்படுவது கிடையாது? குற்றவாளிகள் மன்னிப்புப் பெற்று விடுகின்றனரா? இல்லை! குற்றவாளிகளின் எண்ணிக்கை குறைவு.

## தூக்குத் தண்டனை

கொலை செய்தவனைப் பிறர் கொலை செய்யாமலிருக்க, அரசாங்கம் அவனைத் தூக்கு மேடைக்கு அனுப்புகிறது. தான் இறப்பதன் மூலம் அவன் பிறரைக் காப்பாற்றுபவனுகிருன்.

## அழியும் அரசாட்சி

அரசாட்சியானது, சட்டங்களுக்குக் கீழ்ப்படியாமல் மக்களின் ஆதிக்கத்தை ஆக்கிரமித்துக்கொள்ள முனையும் பொழுது தன் அழிவைத் தானே தேடிக்கொள்கிறது.

மனித தேகம் பிறக்கும் பொழுதே தன் அழிவின் வித்துக்களைத் தன்னிடத்தில் கொண்டிருப்பது போலவே, சமுதாயம் துவங்கும் போது தன் அழிவுக்கான காரணங்களைத் தன்னகத்தே கொண்டுள்ளது.

ஆளும் இனம் தங்கள் சமுதாயத்தின் இயற்கைச் சட்டங்களுக்கு மதிப்பு கொடுக்க மறுக்கத் துவங்கும் பொழுது தனது அழிவைத் தானே தேடிக் கொள்கிறது.

அரசாங்கத்தின் அதிகாரிகள், சேர்ந்து பிரயோகிக்க வேண்டிய சட்டங்களைத் தனிப்பட்ட முறையில், தம்மிச்சைகளுக்கேற்ப பிரயோகிக்க ஆரம்பித்தாலும், அந்த அரசு அழிந்து போம்.

## சுதந்திரம்

நான் சுதந்திரத்தை வழிபடுபவன்; கட்டுப்பாட்டையும், சங்கடத்தையும், பிறரைச் சார்ந்திருத்தலையும் அடியோடு வெறுப்பவன்.

அமைதி நிறைந்த அடிமைத் தனத்தைவிட, ஆபத்துடன் கூடிய சுதந்திரமே மேலானது.

மனிதன் சுதந்திரத்தோடு தான் பிறக்கிறான்; ஆனால் எங்கு நோக்கினும் அவன் அடிமைத்தளைகளில் பிணைக்கப்பட்டே காட்சியளிக்கிறான்.

சுதந்திரத்தைப் புதியதாகச் சம்பாதித்துக் கொள்ளலாம்; ஆனால் இழந்த சுதந்திரத்தை மீட்பது அரிது.

தன்னால் இயன்றதைச் செய்ய வேண்டி முயல்பவனும், தன் மனச்சாட்சியின் பிரகாரம் காரியங்களைச் செய்பவனுமே உண்மையான சுதந்திர புருஷனாவான்.

தன் சுதந்திரத்தை பராதீனப்படுத்திக்கொண்டாலும், தன் பிள்ளைகளின் சுதந்திரத்தைப் பராதீனப்படுத்தும் உரிமை மனிதனுக்குக் கிடையாது.

ஒரு மனிதன் தனது சுதந்திரத்தை இழந்துவிட்டான் என்று சொன்னால், அவன் தனது மனிதத் தன்மையையே இழந்துவிட்டான் என்றுதான் அர்த்தமாகும். மனித சமுதாயத்தின் அங்கத்தினன் என்ற முறையில் அவனுக்குள்ள உரிமைகளையும் கடமைகளையும் கூட அவன் இழந்தவனாகிறான்.

உண்மையான சுதந்திரத்தை அனுபவித்து வாழும் மனித சமுதாயத்திலே மனிதர்கள் தங்கள் தேக உழைப்பிலே வாழ்வார்கள்.

சுதந்திரம் என்ற பழம் எல்லாவிதமான சீதோஷ்ண நிலைகளிலும் வளருவதில்லை; இதனால் எல்லா மக்களினங்

களாலும் சுதந்திரத்தை அடைந்துவிட முடியாது.

அடிமையாயிருப்பவர்களுக்குச் சிலர் சுதந்திரம் வாங்கிக் கொடுப்பதாகச் சொல்லிக் கொள்கிறார்கள்; இப்படியாக அவர்கள் செய்வதால் தங்கள் சுதந்திரத்தையும் அவர்கள் இழந்து விடுகிறார்கள். இதை அவர்கள் விரும்பினாலும் நான் இதை கோழைத்தனம் என்றே கூறுவேன்.

## அடிமைத்தனம்

ஒவ்வொரு மனிதனும் தான் பிறக்கும்போது சுதந்திரத்துடன் தான் பிறக்கிறான். ஒவ்வொருவனும் தனக்குத்தானே எஜமானனாவான். இத்தகைய மனிதனை யாரும், எக்காரணத்தை முன்னிட்டும் அடிமையாக்கக்கூடாது. அடிமையின் மகன் அடிமையாகப் பிறக்கிறான் என்று நினைப்பது தவறு; இப்படி நினைப்பது அவன் மனிதனாகப் பிறக்கவில்லை என்று கூறுவது போல முட்டாள் தனமானது.

அடிமைத்தனத்திற்கு நான் விரோதி.

அடிமைத்தனத்திலே ஊறிப் போயிருப்பவர்கள் சுதந்திரத்தைக் கண்டு கேலிச் சிரிப்பு சிரிப்பார்கள்; இப்படிப்பட்டவர்கள் தங்கள் சக்திக்குத் தாங்களே முடிவுகட்டிக் கொள்வதில் எவ்வித ஆச்சரியமும் இல்லையே?

## சமத்துவம்

மக்கள் எல்லோரும் ஒரே மாதிரியான செல்வத்தையும், அதிகாரத்தையும் ஒரே மாதிரியாக சமநிலையில் அனுபவிப்பதுதான் சமத்துவம் என்று கூற முடியாது.

உள்ள பலத்தைக்கொண்டு பிறர்மீது வீணாக ஆதிக்கம் செலுத்தக் கூடாது; சட்டத்தை அனுசரித்தும், தம் நிலைகளுக்கேற்பவும் பலத்தையும், அதிகாரத்தையும் பயன்படுத்த வேண்டும். மற்ற மனிதரை விலை கொடுத்து வாங்கும் அளவுக்கு ஒருவன் பணக்காரனாகவும் இருக்கக்கூடாது. தன்னைப் பிறனுக்கு விற்றுக் கொள்ளக்கூடிய நிலையில் ஒருவன் ஏழையாகவும் இருக்கக்கூடாது. இதை சமத்துவம் எனலாம். இந்த நிலையில் செல்வந்தர்கள் தங்கள் செல்வத்தை உபயோகிக்கும் விஷயத்தில் ஜாக்கிரதையுடனும் இருப்பார்கள். ஏழைகள் பிறர் பொருளை அபகரிக்கப் பேராசை கொள்ளாமலும் இருப்பார்கள்.





# கலைச் சொற்களைப் பற்றி

[இந்த நூலில் கையாளப்பட்டிருக்கும் கலைச் சொற்களும் அவற்றுக்கு நேரான ஆங்கிலச் சொற்களும் கீழே தரப் பட்டுள்ளன.]

| | | |
|---|---|---|
| அரசு | — | Sovereign |
| அரசாங்கம் | — | Government |
| அரசியல் | — | Politics |
| அரச அதிகாரம் | — | Sovereign Authority |
| அரசியல் அமைப்பு | — | Constitution |
| அராஜகம் | — | Anarchy |
| அறிவு | — | Knowledge |
| அதிகார சக்தி | — | Power |
| அடிமைத் தனம் | — | Slavery |
| அந்தஸ்து | — | Status |
| அழிவு | — | Dissoloution |
| ஆட்சியாளர் | — | Ruler |
| ஆட்சி முறை | — | Forms of Government |
| மன்னராட்சி | — | Monarchy |
| மக்களாட்சி | — | Democracy |
| மேன்மக்களாட்சி | — | Aristocracy |
| ஆக்கிரமிப்பு உடமை | — | The Right of First Occupancy |
| ஆய்வியல் | — | Dialectic |
| இனம் }<br>சமுதாயம் } | — | Community |
| இயற்கை | — | Nature |
| இன்பம்; கேளிக்கை | — | Pleasure |
| உணர்ச்சியாவேசம் | — | Emotion |
| உரிமை | — | Liberty |
| உடமை | — | Posession |
| கடமை | — | Duty |
| கல்வி | — | Education |
| தணிக்கை அதிகாரி | — | Censor |
| குடும்பம் | — | Family |

| | | |
|---|---|---|
| கொள்கை | — | Principle |
| சம உரிமை | — | Equal Rights |
| சட்டங்களின் பாகுபாடு | — | Division of Laws |
| சம்பிரதாயம் | — | Convention |
| சமத்துவம் | — | Equality |
| சம அந்தஸ்து | — | Equal Rights |
| சமுதாய ஒப்பந்தம் | — | Social Contract |
| சட்டத்தை நிர்மாணிப்பவன் | — | Legislator |
| சகோதரத்துவம் | — | Fraternity |
| சுதந்திரம் | — | Freedom |
| சுயேச்சாதிகாரி | — | Autocrat |
| சொத்துரிமை | — | Right of Property |
| கொள்கை | — | Ideal |
| தனிமை | — | Solitude |
| தனித்துவம் | — | Individualism |
| திறமை | — | Capacity |
| தெய்வீக உரிமை | — | Sacred Right |
| தேர்தல் | — | Election |
| நகர இராஜ்யம் | — | City State |
| நாகரிகம் | — | Civilisation |
| நீதிமன்றம் | — | Court |
| நோக்க முறை | — | Policy |
| பலம் | — | Strength |
| பலசாலியின் உரிமை | — | Rule of The Strongest |
| பலாத்காரம் | — | Force |
| பராதீனப் படுத்துவது | — | Alienate |
| பண்டைச் சமுதாயம் | — | Primitive Society |
| பிரச்னை | — | Problem |
| பிரஜை | — | Citizen |
| புரட்சி | — | Reveloution |
| பொருளாதாரம் | — | Economics |
| பொதுமக்கள் அபிப்பிராயம் | — | Popular Opinion |
| வாழ்க்கைத் தரம் | — | Standard of Life |
| விசேஷத் திறமை | — | Special Capacity |
| ஜன சக்தி | — | General Will |
| ஸ்தாபனம் | — | Institution |

## சிந்தனையாளர் வரிசை

### 1. சிந்தனையாளர் டார்வின்

[ 'குரங்கினமும் மனித இனமும் ஒரு பொதுவான மூதாதை இனத்திலிருந்து உண்டாயின' எனக் கூறிச் சிந்தனைப் புரட்சி செய்து, விஞ்ஞான ரீதியாக ஆராய்ந்தார் டார்வின். அவரது வரலாறு; அவரது ஆராய்ச்சி விளக்கம் படங்களுடன்; அவர் எழுதிய 'ஜீவராசிகளின் மூலம்' (Origin of Species) என்னும் நூற் சுருக்கம்; டார்வினஸமும் தசாவதாரமும்—முதலானவை அடங்கிய அருமையான நூல். ஜெகசிற்பியன் எழுதியது.] விலை ரூ. 1-4-0

### 2. சிந்தனையாளர் பிளேட்டோ

[ புரட்சிகரமான சிந்தனைகள் அனைத்திற்கும் மூலவேர் என உலகம் முழுவதும் கருதப்படுபவர் பிளேட்டோ-அவரது வரலாறு; அவர் எழுதிய குடியரசு (Republic) ஆத்மீகக் காதல் (Symposium) முதலான பல்வேறு நூற்களின் சுருக்கங்கள்; சிந்தனைகள், மணிமொழிகள்; அவற்றிற்கு இணையான திருக்குறள், புறநானூறு, பகவத் கீதை, உபநிஷத் கருத்துக்கள் முதலானவை அடங்கிய நூல்.]

அரு. ராமநாதன் எழுதியது.

விலை ரூ. 1-4-0

### 3. சிந்தனையாளர் காரல் மார்க்ஸ்

[பொதுவுடமைப் பொருளாதாரப் புரட்சி செய்த மார்க்ஸின் வரலாறு. அவர் எழுதிய 'மூலதனம் (Capital)' இந்தியா பற்றி மார்க்ஸ், கம்யூனிஸ்ட் அறிக்கை முதலான நூற்களின் சுருக்கங்கள்; சிந்தனைகள் முதலானவை அடங்கிய நூல். ரா. தணலன் எழுதியது.] விலை ரூ. 1-4-0

## மொழிபெயர்ப்பு நாவல்

### நாநாவின் தாய்

[ உலக மேதை எமிலி ஜோலாவின் ஒப்புயர்வற்ற நாவல். உலகம் முழுதும் அதிக விற்பனையான புத்தகங்களில் இதுவும் ஒன்று. ரா. ஆறுமுகம் தமிழாக்கியது.]

விலை ரூ. 4-0-0

## ஆராய்ச்சி

### புதுமணத் தம்பதிகளுக்கு

[மணமான ஒவ்வொரு புதுமணத் தம்பதியும் அவசியம் படித்துப் பயன்பெற வேண்டிய ஆராய்ச்சி நூல்.]

விலை ரூ. 2-4-0

## துப்பறியும் நாவல்கள்

## 1. ரத்தப் பசி

[சிரஞ்சீவி எழுதிய புதிய நாவல்-சிறை இருளுக்குள்ளே இராவணன் முடி, மாயா ஜாலத் திருடன் மாலி, நடுநிசி நாயக்கன் போன்ற பயங்கர அத்தியாயங்களை உடையது.]

விலை ரூ. 1-4-0

## 2. மர்மத்தீவு

சிரஞ்சீவி எழுதியது

[ஒரு மாயத் தீவிற்குப் பத்துப்பேர் செல்கிறார்கள். மனித வாடை தட்டுப்படாத அந்தத் தீவிலே, மர்மக்குரல், மாய மனிதன், குறளி வித்தை, குமரி ஆசை, இவற்றிடையே அடுத்தடுத்து மர்மக் கொலைகள் நிகழ்கின்றன. பலரின் அந்தரங்க வாழ்க்கைகளும் வெளிப்படுகின்றன.] விலை ரூ. 1-4-0

## 3. காதலன் கொலை வழக்கு

சிரஞ்சீவி எழுதியது

[தத்ரூபமான கோர்ட் நடவடிக்கைகளுள்ள முதல் பாகமும், துப்பறிபவரின் புலன் விசாரணையுள்ள இரண்டாவது பாகமும் அடங்கியது.]

விலை ரூ. 1-4-0

## 4. இரட்டைக் கொலை

ஜெகசிற்பியன் எழுதியது

['அபாய அறிவிப்பு' பத்திரிகாசிரியர் படுகொலை செய்யப்பட்ட மர்மத்தின் முடிவு திடுக்கிடக்கூடியது: யாரும் எதிர்பார்க்க முடியாதது.]

விலை ரூ. 1-4-0

## 5. துப்பறியும் ராஜு

[மேதாவி எழுதியது—அக்காள் மரணத்தைக் கண்டு பிடிக்கப் பிராணபைத்தான, மர்மங்களிலெல்லாம் புகுந்து புறப்படுகிறான் தம்பி ராஜு.]

விலை ரூ. 1-0-0

## 6. மர்மக் கொலை

சிரஞ்சீவி எழுதியது

[மனைவியைக் கொலை செய்தவன் யார்? கப்பிப்பாறை கந்தப்பன் என்ற திருடனுக்கு அதிலுள்ள சம்பந்தம் என்ன? பலரின் நெஞ்சைக் கவர்ந்து இரண்டாவது பதிப்பாக வெளிவந்துள்ளது.]

விலை ரூ. 1-0-0

## 7. நீதிமயக்கம்

சிரஞ்சீவி எழுதியது

[கணவன் கொலைபட்டுக் கிடந்தான். காதலன் குற்றவாளி எனக் கருதப்பட்டான். ஆனால் முடிவு என்ன?]

விலை ரூ. 1-0-0

## கதை இலக்கியம்

**1. அம்பிகாபதி**

[அரு. ராமநாதன் எழுதியது. நான்கு விதமான காதல் உணர்ச்சிகளை உடையது.]

விலை ரூ. 1-4-0

**2. கதாநாயகி**

[அரு. ராமநாதன் எழுதியது. நான்கு விதமான கதாநாயகிகளை உடையது.]

விலை ரூ. 1-4-0

## காதல் நாவல்கள்

**1. எதிர்வீட்டு ஜன்னல்**

(கோ. த. சண்முகசுந்தரம்)

விலை ரூ. 1-0-0

**2. ஆசை வெள்ளம்**

('சுகி') விலை ரூ. 0-12-0

**3. உறவு முள்**

[ஜெகசிற்பியன்]

விலை ரூ. 0-12-0

## பொன்மொழிகள் வரிசை

**1. ஔவையார்**

[அரு. ராமநாதன்]

**2. விவேக சிந்தாமணி**

[சிரஞ்சீவி]

**3. பைபிள்**

[இயேசு நேசர்]

**4. திருக்குர்ஆன்**

[வஹ்ஹாப், எம். ஏ.]

**5. பஞ்சதந்திரம்**

[தி. நா. சு.]

**6. புத்தர்**

[அரு. ராமநாதன்]

[ஒவ்வொரு பொன்மொழிப் புத்தகமும் விலை அணா எட்டு.]

[முன்பணம் அனுப்பித் தேவையான பிரதிகளைப் பெற்றுக்கொள்ளலாம். ஒரு ரூபாய்க்கு உட்பட்டத் தொகைக்குத் தபால் தலைகள் அனுப்பலாம்.]

**பிரேமா பிரசுரம் : : சென்னை-24**